


# வாரம் ஒரு அணா செலவிற்கு பற்களுக்கு முழுப் பாதுகாப்பளிக்கிறது!

சாம்பல், கரிபோன்ற கரகரப்பான பொருள்கள் பற்களில் கீரல் விழச் செய்கின்றன. இந்த கீரல் வழியாக பாக்டீரியா புகுந்து கெடுதல் விளைவிக்கிறது. பற்கள் பூரண ஆரோக்கியத்தோடு இருக்க விஞ்ஞான முறையில் தயாரித்த ஒரு பல் துலக்கும் வஸ்து உங்களுக்குத் தேவை. ஆகையால் கிப்ஸ் டென்டிபிரிஸ் வாங்குங்கள். பற்களுக்கு பூரண ஆரோக்கியத்தைத் தரும் எல்லா பொருள்களையும் ஒன்று சேர்த்து கெட்டியாகச் செய்தது தான் கிப்ஸ். அன்றியும் ஒரு டூத்பேஸ்ட் செய்யும் எல்லா வேலைகளையும் அதன் பாதி விலைக்குச் செய்கிறது. இதை உபயோகிப்பது மிகவும் சுலபம். விரலையோ அல்லது பிரஷையோ தண்ணீரில் நனைத்துக் கொண்டு கட்டியின்மேல் தேய்க்கவும். அதன் சுவையை நீங்கள் மிகவும் விரும்புவீர்கள். அன்றியும் அதன் மிருதுவான ஊடுருவிப் பாயும் நுரை உங்கள் பற்களை பளிச்சென்று வெண்மையாக இருக்கச் செய்யும்!

உங்களுக்குப் பிரியமான கிப்ஸில் க்ளோரோபில் சேர்ந்திருக்க விரும்பினால் கிப்ஸ் க்ளோரோபில் டென்டிபிரிஸ் கேளுங்கள். எல்லா இடங்களிலும் விற்கப்படும் வெள்ளை டப்பாவின் பெயரைக் கவனித்து வாங்குங்கள்.




**நீலம், சிவப்பு, பச்சை டப்பிகளில்**

# கிப்ஸ் டென்டிபிரிஸ்

GD. 36-50 TM

டி. அன்ட் டபிள்யூ. கிப்ஸ் லிட்., லண்டனுக்காக இந்தியாவில் தயாரித்தது.

# கல்கி பொருளடக்கம்

மலர் 14 | இதழ் 5 | 1954 ஆகஸ்டு 29 | ஜய ௵ ஆவணி 13










*விநியோகஸ்தர்கள் :*

● மதுரை, ராமநாதபுரம், திருநெல்வேலி, தஞ்சாவூர் (புதுக்கோட்டை, காரைக்கால் உள்பட) : **வீயார் பிலிம்ஸ் லிமிடெட், புதுக்கோட்டை.** ● வட ஆற்காடு, தென் ஆற்காடு செங்கல்பட்டு, (சித்தூர், பாண்டிச்சேரி உள்பட) : **ஜோதி பிக்சர்ஸ், குடியாத்தம்.** ● கோயமுத்தூர், நீலகிரி : **ஆனந்தா பிலிம்ஸ், கோயமுத்தூர்.** ● சேலம் : **சாமி பிக்சர்ஸ், சேலம்.** ● மலபார் : **அஸோஸியேடட் பிக்சர்ஸ் லிமிடெட், எர்ணாகுளம்** ● சென்னை நகரம் : **கே. எஸ். பிக்சர்ஸ், சென்னை-6** ● மைசூர் : **பிரகாஷ் பிக்சர்ஸ், பெங்களூர்-2.** ● எப். எம். எஸ். : **ஷா பிரதர்ஸ் லிமிடெட், சிங்கப்பூர்.** ● சிலோன் : **சினிமாஸ் லிட்., கொழும்பு.** ● மற்ற இடங்களுக்கு : **அருணா பிலிம்ஸ், சென்னை-17.**



மலர் 14 | தமிழ்த் திருநாடு தன்னைப் பெற்ற தாயென்று கும்பிடடி பாப்பா. —பாரதியார் | இதழ் 5

# மூல காரணத்தைக் களைய வேண்டும்!

விநாயக பூஜை விழாவுக்காக ஒருவன் பிள்ளையார் பிடிக்க முயன்றான்: அது குரங்காக முடிந்தது என்று சொல்லுவதுண்டு. குரங்கு என்றால், ஹனுமாராகவோ அங்கதனாகவோ, சுக்ரீவனாகவோ இருந்தாலும் பாதகமில்லை. குற்றாலத்து மலையில் உள்ள சாதாரண வானரமாக இருந்தாலும், சகித்துக் கொள்ளலாம். ஆனால், இதுவோ டாக்டர் மலான் பிறந்த ஆப்பிரிக்கா கண்டத்துப் பயங்கரக் காட்டுமிராண்டிக் குரங்காக இருக்கிறது.

திருவாங்கூர் இராஜ்யத்தில் தமிழர் வாழும் பிரதேசத்தில் ஏற்பட்டுள்ள நிலைமையைத் தான் குறிப்பிடுகிறோம்.

அவ்விதம் நேர்ந்துள்ள நிலைமை இந்தியா தேசத்தின் கவனத்தையே இப்போது கவர்ந்திருக்கிறது. ஆனால் நல்ல முறையில் அன்று; விபரீதமான முறையில், "இது என்ன தொல்லை ?" என்று கவலை தரக்கூடிய முறையில் கவர்ந்திருக்கிறது.

இந்த நிலைமை ஏற்படுவதற்குச் சம்பந்தப்பட்டவர்கள் அனைவரும் தங்கள் பங்கு கைங்கரியத்தைச் செய்திருக்கிறார்கள்.

திருவாங்கூர் தமிழ்நாடு காங்கிரஸ், திருவாங்கூர் அசல் காங்கிரஸ், அங்கே நடந்து வரும் பிரஜா-சோஷலிஸ்ட் அரசாங்கம், காங்கிரஸ் மேலிடத்தார், நேருஜியின் இந்திய சர்க்கார்,-எல்லாரும் சேர்ந்து கைங்கரியம் செய்துதான் இந்த நிலைமையை உண்டு பண்ணி யிருக்கிறார்கள்.

எல்லாருடைய நோக்கமும் நல்ல நோக்கந்தான். அதாவது பிள்ளையார் பிடிக்கும் நோக்கந்தான் ; ஆனால் செய்ய வேண்டியதைச் சரியான காலத்தில் முறையாகச் செய்யாதபடியால் அவ்விடத்து நிலைமை கோரமான ஆப்பிரிக்கக் காட்டுக் குரங்கு ரூபத்தை எடுத்திருக்கிறது !

சத்தியாக்கிரஹம் ஆரம்பித்து, அது துராக்கிரஹத்துக்கு இடங்கொடுத்து, குழப்பக்காரர்களின் தலையீட்டினால் நிலைமை சீர்கெட்டு, பழைய பிரிட்டிஷ் பயங்கர ஆட்சியை நினைவூட்டக் கூடிய துப்பாக்கிப் பிரயோகங்களும் அதன் பலனாகப் பல உயிர்ப்பலிகளும் நடந்து விட்டன.

இன்னமும் தமிழர் வாழும் திருவாங்கூர்ப் பிரதேசங்களில் மூர்க்கமான அடக்கு முறைகளும் சொல்ல முடியாத போலீஸ் கொடுமைகளும் நடந்து வருவதாகப் பொறுப்பு வாய்ந்த தமிழ் எம். எல். ஏ. க்கள், எம். பி.க்கள், மாஜி மந்திரி முதலியோர் முறையிடுகிறார்கள். காங்கிரஸ் அரசாங்கத் தலைவர்களுக்கும் பிரஜா - கட்சித் தலைவர்களுக்கும் நிலைமையை நேரில் வந்து பார்க்க வேணுமென்று தந்தி கொடுக்கிறார்கள்.

சுதந்திர இந்தியாவில், மக்களின் ஒப்பற்ற தலைவரான நேருஜியின் ஆட்சியின் கீழ் இப்படி யெல்லாம் நடக்கின்றன என்பது, மிக்க வருந்தத் தக்க நிலைமை அல்லவா ?

* * * *

திருவாங்கூர் - கொச்சியில் ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையின் தலைமையில் பிரஜா - சோஷலிஸ்ட் அரசாங்கம் ஏற்பட்டபோது, நாடெங்கும் பல தேசபக்தர்களின் ஆசியை அது பெற்றது. இதிலிருந்து தேசமெங்கும் நல்ல முறையில் பலமான எதிர்ப்புக் கட்சி ஒன்று அமைவதற்கு வாய்ப்பு ஏற்பட்டதாகப் பலரும் கருதி மகிழ்ந்தார்கள்.

திருவாங்கூர் - கொச்சி சிறிய பிரதேசமா யிருந்தாலும், அந்தச் சிறிய இராஜ்யத்தில் பிரஜா - சோஷலிஸ்ட் சர்க்கார் நல்ல முன்னேற்றமான திட்டங்களை அமுல் நடத்தித் தேசத்துக்கே வழி காட்டலாம்; மற்ற இராஜ்யங்களில் நடக்கும் காங்கிரஸ் சர்க்கார்களும் தூங்குமூஞ்சித்தனத்தை விடுத்துத் தீவிர முன்னேற்றத் திட்டங்களைக் கைக்கொள்ளத் தூண்டுதலாயிருக்கலாம் என்று எதிர்பார்க்கப் பட்டது.

ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையின் அரசாங்கத்தை நாமும் உவகையுடன் வரவேற்றோம். அவர்கள் கடைப்பிடித்து வரும் கொள்கைகளும் நிறைவேற்றத் தொடங்கியுள்ள திட்டங்

களும் மக்களின் நலத்துக்குரிய சிறந்த கொள்கைகளாகவும் திட்டங்களாகவும் இருப்பது கண்டு நாம் பெரிதும் மகிழ்ந்து பாராட்டினோம்.

ஆனால், சமீபகாலத்து நிகழ்ச்சிகள்,– தமிழர் பிரதேசத்தில் நடைபெற்ற துப்பாக்கிப் பிரயோகங்கள், குற்றமற்றவர்களின் மரணங்கள், அடக்குமுறை விபரீதங்களைப் பற்றிய செய்திகள்,—ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையின் சர்க்காருக்கு ஏற்பட்டிருந்த ஆதரவை யெல்லாம் அடியோடு போக்கடித்து விட்டன.

நாம் மட்டும் என்ன! பிரஜா—சோஷலிஸ்ட் கட்சியின் பொதுக் காரியதரிசியான டாக்டர் லோஹியா, ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையின் சர்க்கார் ராஜிநாமாச் செய்ய வேண்டுமென்று வற்புறுத்தித் தாமும் தமது பொதுக் காரியதரிசி பதவியை ராஜிநாமா செய்யும்படியான நிர்ப்பந்தம் ஏற்பட்டு விட்டது.

ஆச்சாரிய கிருபளானி முதலிய பிரஜா கட்சித் தலைவர்கள் அவ்வளவு தூரத்துக்குப் போகா விட்டாலும், அவர்களும் பெருங் கவலைப்படும்படியான துர்ப்பாக்கிய நிலைமை ஏற்பட்டிருக்கிறது.

இப்போதுதான் நல்ல முறையில் உருவாகத் தொடங்கியிருக்கும் பிரஜா-சோஷலிஸ்ட் கட்சியில் இவ்வாறு உட்பிளவு நேரக்கூடிய நிலைமை ஏற்பட்டதைக் குறித்து, அக் கட்சியில் யார்தான் உற்சாகம் அடைய முடியும்! அல்லது கவலை கொள்ளாமல் இருக்க முடியும்!

* * *

திருவாங்கூர்த் தமிழ்ப் பகுதிகளில் உள்ள தமிழர் தலைவர்கள் குறைகூற இயலாத வகையில் தங்கள் கடமையை நிறைவேற்றி வந்திருப்பதாய்ச் சொல்ல முடியாது.

திருவாங்கூர்–கொச்சி சட்டசபையில் பன்னிரண்டு ஸ்தானங்களைப் பெற்றவர்கள், அந்தப் பலத்தைத் தக்கபடி உபயோகிக்கவில்லை. பார்லிமெண்டில் ஸ்தானம் பெற்ற தமிழர் தலைவர்களும் தங்கள் கடமையை நன்கு ஆற்றவில்லை.

சட்டசபைகளில் இவ்வளவு பலம் பெற்றவர்கள் கட்டுப்பாடாகக் காரியங்கள் செய்து, பெரும்பான்மைப் பலத்தோடு ஆட்சி நடத்தும் அரசாங்கத்தைக்கூடத் திணற அடிக்கலாம்; பெரும்பான்மை யில்லாத சர்க்காரின் விஷயத்தில், 'கண்ணிலே விரலைக் கொடுத்து ஆட்டுவது' என்பார்களே, அவ்வளவு தூரத்துக்குத் தங்கள் சக்தியை அவர்கள் பிரயோகிக்க இடம் உண்டு.

அந்தச் சக்தியைப் பூரணமாக அவர்கள் உபயோகப் படுத்தவில்லை.

அன்னிய பிரிட்டிஷ் ஆட்சியை எதிர்க்க உபயோகப்படுத்திய சட்டமறுப்பு – சத்தியாக்கிரஹ முறைகளை ஜனநாயக சர்க்கார்களின் விஷயத்தில் அவசரப்பட்டு உபயோகப்படுத்தக் கூடாது.

யதேச்சாதிகார ஏகாதிபத்திய வெறிகொண்ட போர்ச்சுகீஸ் சர்க்காரை எதிர்க்கவும், முரட்டுப் பிடிவாதம் பிடிக்கும் பிரஞ்சு சர்க்காரை எதிர்க்கவும் கோவாவிலும் புதுச்சேரியிலும் அவசியமாயுள்ள முறைகளை, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டுக் காங்கிரஸ் ஆதரவுடன் நடக்கும் சர்க்கார் விஷயத்தில் தொடங்குவது அவசியமா!

அப்படி அவசியம் என்றாலும், அதற்குச் சூழ்நிலை சரியாக இருக்கிறதா? அகில இந்தியாவில் ஆதரவு கிடைக்குமா? மத்திய சர்க்காரின் பீடத்தில் அநுதாபம் கிட்டுமா! பக்கத்தில் உள்ள தமிழ் நாட்டில், யாருடன் சேர விரும்புகிறார்களோ அந்தத் தமிழ் நாட்டுக் காங்கிரஸ் வட்டாரத்திலாவது தங்கள் முயற்சிக்கு ஆதரவும் அநுதாபமும் கிட்டுமா!—இவற்றையெல்லாம் திருவாங்கூர்த் தமிழர் தலைவர்கள் நன்கு யோசித்துப் பார்த்ததாகத் தெரியவில்லை.

ஏதாவது சந்தர்ப்பம் கிடைத்தால் போதும் என்று உள்ளே நுழைந்து குழப்பம் விளைவிக்கக் காத்துக் கொண்டிருக்கும் குழப்பக்காரர்கள் இருப்பதையும் அவர்கள் கவனிக்கவில்லை.

அவசரப்பட்டு அவர்கள் சட்ட மறுப்பும் சத்தியாக்கிரஹமும் தொடங்கினார்கள். இக்கட்டத்தில் குழப்பக்காரர்கள் வந்து புகுந்து, சர்க்காரின் அடக்கு முறை விபரீத உருவத்தை மேற்கொண்டதும், இயக்கத்தை நிறுத்தி விட்டார்கள்.

தமிழகத்திலிருந்து மேற்படி இயக்கத்தில் கலந்து கொள்வதற்காகப் போனவர்கள் வெறுமனே திரும்பி வரும்படி ஆயிற்று.

இவர்கள் இயக்கத்தை நிறுத்தினாலும், சர்க்கார் அடக்குமுறை நிறுத்தப் படவில்லை. போலீஸ் அட்டூழியங்களைப் பற்றி நம்புவதற்கும் அரியதான செய்திகள் பரவிக் கொண்டிருக்கின்றன.

ஆகவே, அந்தப் பிரதேசங்களில் உள்ள தமிழ்ப் பொதுமக்கள் பெரும் அல்லல்களுக்கு உள்ளாகி வருகிறார்கள். விமோசனம் எந்த ரூபத்தில் வந்தாலும், ஜனங்கள் அடைந்த கஷ்டங்களுக்குப் பரிகாரம் ஒன்றும் கிட்டப் போவதில்லை. மூடி மெழுகி விடுவதிலேதான் எல்லாக் கட்சியாரும் சிரத்தை கொண்டிருப்பார்கள்.

* * *

இந்தத் துன்பங்களுக் கெல்லாம் மூல காரணம் காங்கிரஸ் மேலிடத்தாரும் இந்திய சர்க்காரும் இந்த விஷயத்தில் காட்டி வரும் அசிரத்தையே யாகும்.

நேருஜியின் தலைமையில் இந்தியா தேசம் அடைந்து வரும் முன்னேற்றங்களையும் வெளிநாட்டு விவகாரங்களில் அடைந்து வரும் மகோன்னதங்களையும் நாம் அனைவரும் அறிந்திருக்கிறோம்.

முக்கியமான சில உள் நாட்டுப் பிரச்னைகளில் இந்திய சர்க்கார் வேண்டுமென்றே கண்ணை மூடிக்கொண்டு பார்ப்பதற்கே மறுக்கிறார்கள் என்பதையும் அறிந்திருக்கிறோம்.

பாஷாவாரி மாகாணக் கிளர்ச்சிக்கு அதிகமாக இடம் கொடுத்தால், நாட்டின் ஒற்றுமைக்கும் முன்னேற்றத்துக்கும் பங்கம் விளையும் என்று ஜவாஹர்லால்ஜி கருதுகிறார். இதை நாமும் ஒத்துக் கொள்கிறோம்.

ஆனால், இலட்சியத்தில் மனத்தைப் பறிகொடுத்துப் பிரத்யட்ச நிலைமையைக் கவனியாமலிருப்பதில் பயன் ஒன்றுமில்லை; தீமைதான் விளையும்.

உடம்பில் சிரங்கு அல்லது புண் ஏற்பட்டால், அதைக் கவனியாமலிருந்து விடுவது முறையன்று. புண்களைக் கீறி ஆற்றத்தான் வேண்டும்; சிரங்குகளுக்கு ஆபரேஷன் செய்து குணப்படுத்த வேண்டும். இல்லாவிட்டால் புரை ஓடித் தேகம் முழுவதிலும் பரவி விஷமாக்கி உயிருக்கே பெரும் ஆபத்து வந்து விடும்.

திருவாங்கூர்த் தமிழர்கள் சென்ற பத்து வருஷத்துக்கு மேலாகத் தமிழ் நாட்டுடன் சேரும் கிளர்ச்சி நடத்தி வருகிறார்கள். பொதுத் தேர்தல்களில் திரும்பத் திரும்பத் தங்கள் திடமான விருப்பத்தை ஜனநாயக முறையில் சந்தேகத்துக்கே இடமில்லாமல் வெளிப்படுத்தி யிருக்கிறார்கள்.

தமிழ் இராஜ்யத்துடன் சேர்வதில் அவர்களுக்கு அவ்வளவு மோகம் ஏன்!

திருவாங்கூரில் அவர்களுக்குச் சட்ட சபையில் பன்னிரண்டு ஸ்தானங்கள் கிடைக்கின்றன. ஒரு மந்திரி பதவி கிடைக்கவும் இடம் இருக்கிறது.

# பெரிய சோதனை!




திருவாங்கூர் தமிழர் பிரச்னை பிரஜா சோஷலிஸ்ட் கட்சிக்கும் பட்டம் தாணுப் பிள்ளையின் மந்திரி சபைக்கும் பெரும் சோதனையாக அமைந்திருக்கிறது.

---

தமிழ் இராஜ்யத்தில் அவர்கள் சமுத்திரத்தில் கலந்த குளத்தைப் போல் மறைந்து விடுவார்கள்.

ஆயினும் எதற்காகத் தமிழ் இராஜ்யத்துடன் சேர்வதற்கு இவ்வளவு போராடுகிறார்கள்! திருவாங்கூர் இராஜ்யத்தோடு சேர்ந்திருப்பதில் ஏதோ பெருந் தொல்லைகள் இருப்பதினால்தானே அத்தகைய கிளர்ச்சியில் அவர்கள் இடைவிடாமல் ஈடுபட்டிருக்கிறார்கள்!

இன்னொரு உதாரணம் பாருங்கள். தற்சமயம் மலையாள ஜில்லாவும், தென் கன்னட ஜில்லாவும் தமிழ் இராஜ்யத்தில் சேர்ந்திருக்கின்றன. மலையாளிகள் தாங்கள் பிரிந்து போகிறோம் என்றாவது, தென் கன்னடத்தார் மைசூரில் சேர்ந்து கொள்கிறோம் என்றாவது கிளர்ச்சி நடத்துகிறார்களா?

இல்லை; ஏனென்றால், மலையாளிகளுக்கும் கன்னடத்தாருக்கும் தமிழ் இராஜ்யத்தில் சேர்ந்திருப்பதில் குறை ஒன்றுமில்லை. எல்லாவித வசதிகளும் அநுகூலங்களும் இருக்கின்றன!

ஆதலின், போகச் சொன்னாலும், அவர்கள் போவதற்குச் சம்மதியாதவர்களாயிருக்கிறார்கள்.

திருவாங்கூர் இராஜ்யத்தில் உள்ள தமிழர்கள் மட்டும் எதற்காக இப்படிப் பிராணனைக் கொடுத்துப் போராடிக் கொண்டிருக்க வேண்டும்?

நேருஜியும் காங்கிரஸ் மேலிடத்தாரும் இந்திய சர்க்காரும் இந்த அம்சத்தைக் கவனிக்க வேண்டும். கவனித்தால், இந்தப் பிரச்னையை அவசரமாகத் தீர்ப்பதின் அவசியத்தை உணர்வார்கள்.

இந்தியா தேசம் முழுவதிலும் இராஜ்யங்களுக்கு எல்லை வகுப்பது பற்றிச் சிபார்சு செய்யக் கமிஷன் ஒன்று நியமிக்கப்பட்டிருக்கிறது.

இந்தக் கமிஷன் முழு விசாரணையும் நடத்தி முடியும் வரையில் காத்திருக்க வேண்டிய அவசியம் ஒன்றும் இல்லை.

திருவாங்கூர் சம்பந்தமாக இடைக்கால அறிக்கை ஒன்றை மேற்படி கமிஷன் சமர்ப்பிக்கும்படி கேட்டுக் கொள்ளலாம். அதன் பேரில் சென்னை இராஜ்ய சர்க்காரையும் திருவாங்கூர் சர்க்காரையும் கலந்து கொண்டு இந்திய சர்க்கார் தங்கள் முடிவுகளை வெளியிடலாம்.

இவ்வாறு செய்து, திருவாங்கூர் நிலைமை இவ்வளவு சீர்கெட்டதற்கு மூல காரணத்தைக் களைவதற்கு இந்திய சர்க்கார் முன்வர வேண்டும்.

இதன் அவசரத்தையும் அவசியத்தையும் சமீப கால நிகழ்ச்சிகள் நேருஜிக்கு உணர்த்தியிருக்குமென்று நம்புகிறோம்.

* * *

திருவாங்கூர்த் தமிழ் காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் கோரிக்கையை வலியுறுத்தச் சாத்வீக சத்தியாக்கிரஹக் கிளர்ச்சி தொடங்கினார்கள்.

அது சாத்வீகக் கிளர்ச்சியாக நிற்காமல், குழப்பக்காரர்களின் தலையீட்டினால், தந்திக் கம்பி அறுத்தல், தபாலாபீஸுகளுக்கும் பஸ்களுக்கும் தீ வைத்தல் முதலிய தீய செயல்களாக மாறத் தொடங்கியதும், திருவாங்கூர்த் தமிழ் காங்கிரஸ் தலைவர்கள் தங்கள் இயக்கத்தை உடனே நிறுத்தி விட்டார்கள்.

இதற்காக அவர்களைப் பாராட்டுகிறோம். இனி, இம்மாதிரி நிலைமை ஏற்பட அவர்கள் இடம் கொடுக்கவே கூடாது. சட்ட சபைகளிலும் பார்லிமெண்டிலும் அவர்களுக்குள்ள பலத்தைத்

# எனக்கு ஒன்று இல்லையா?



தேச முன்னேற்றத்துக்குப் பல திட்டங்கள் வகுக்கப்பட்டிருந்தாலும், வேலையில்லாதவர்களின் தொகை வளர்ந்து வருகிறது!

தக்க முறையில் பயன்படுத்தியும், பொதுஜன அபிப்பிராயத்தின் வலுவைக் கொண்டுமே அவர்கள் தங்கள் கோரிக்கையை நிறைவேற்றிக் கொள்ள வேண்டும். இது நிச்சயம் சாத்தியமானது என்பதில் நமக்குச் சிறிதும் ஐயமில்லை.

* * *

ஸ்ரீ பட்டம் தாணுப் பிள்ளையும் அவருடைய சகாக்களும் மிகப் பெரிய பொறுப்பைத் தற்சமயம் வகிக்கிறார்கள். பிரஜா – சோஷலிஸ்ட் கட்சியின் நல்ல பெயரும் வருங்கால வளர்ச்சியும் அவர்கள் இச்சமயம் நடந்து கொள்வதைப் பொறுத்திருக்கிறது. தமிழ்ப் பிரதேசங்களில் நடந்த துப்பாக்கிப் பிரயோகம் பற்றியும், மற்றும் நீடித்து நடந்து வருவதாகச் சொல்லப்படும் அடக்குமுறை அட்டூழியங்களைப் பற்றியும் பொது விசாரணை நடத்துவதற்கு அவர்கள் உடனே முன் வர வேண்டும். எல்லாருக்கும் நம்பிக்கை தரக் கூடிய பொறுப்பு வாய்ந்த பிரமுகர்களை மேற்படி விசாரணையை நடத்துவதற்கு நியமிக்க வேண்டும்.

விசாரணையின் மூலம் புகார்கள் உண்மையென்று வெளியானால், தகுந்த பரிகார நடவடிக்கைகளை எடுப்பதற்கு அவர்கள் சித்தமாயிருக்க வேண்டும். அவ்விதம் சித்தமாயிருப்பதை இப்போதே அறிவித்து விடவும் வேண்டும்.

பாரத நாட்டிலேயே முதன் முதலாக அமைந்திருக்கும் பிரஜா–சோஷலிஸ்ட் சர்க்கார் இந்தச் சோதனையிலிருந்து நல்ல பெயருடன் வெளி வர வேண்டும் என்று விரும்புகிறோம்.

# சென்னை சர்க்காருக்குப் புதிய பிரச்னை

இலங்கையில் இந்தியர்கள் சம்பந்தப்பட்ட வரையில் நாளொரு நெருக்கடியும் பொழுதொரு பிரச்னையுமாக இருந்து வருகிறது.

இலங்கை வாழ் இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள சோதனை சென்ற ஜனவரி மாதம் புது டில்லியில் ஏற்பட்ட ஒப்பந்தத்தின் பலனாகத் தீரலாம் என்று எதிர் பார்க்கப்பட்டது. ஆனால் அதற்கு நேர் மாறாக அங்கு காரியங்கள் நடந்து வந்துள்ளன. இலங்கை இந்தியர்களின் சோதனைக் காலம் இப்போது மிகவும் மோசமாகி இருக்கிறது. அவர்களுடைய நிலைமையில் இப்போது நெருக்கடியான கட்டம் ஆரம்பமாகி யிருக்கிறது.

இதுவரையில் இலங்கை இந்தியர்கள் பலவிதமான சில்லறைத் தொந்தரவுகளுக்கு உள்ளாகி வந்தார்கள். இப்போதோ வென்றால் அவர்களுடைய கஷ்டங்கள் எல்லாம் சேர்ந்து விகவ ரூபம் எடுக்கத் தொடங்கியுள்ளன. 'இந்தியர்களை வெளியேற்றுவோம்' என்று இது வரையில்

இலங்கை சர்க்கார் வாயளவில் பயமுறுத்தி வந்தார்கள். அதற்குப் பூர்வாங்கமாகப் பல சட்டங்களையும் இயற்றி வந்தார்கள்.

எனினும் இலங்கையில் தலைமுறை தலைமுறையாக வாழ்ந்து வரும் இந்தியர்கள் யாவருக்கும் பிரஜா உரிமை வழங்கப்பட்ட பிறகே, வெளியேற வேண்டியவர்களைப் பற்றிய பிரச்னை எழும் என்று பலரும் நம்பி வந்தார்கள். ஆனால், அத்தகையோருடைய நம்பிக்கை நிறைவேறவில்லை. இலங்கை சர்க்காரின் இந்தியர் வெளியேற்றுப் படலம் இப்போதே ஆரம்பமாகி விட்டது. தாற்காலிக வாச 'பர்மிட்' காலாவதியான இருபத்தையாயிரம் பேருக்கு ஆகஸ்ட் மாத இறுதிக்குள் வெளியேற்ற நோட்டீஸ் கொடுக்கப்படும்; ஐயாயிரம் பேர் அடங்கிய முதல் கோஷ்டியின் வெளியேற்றம் கூடிய சீக்கிரம் பூர்த்தியாகிவிடும் என்று இலங்கைச் செய்திகள் கூறுகின்றன. எனவே, இன்னும் சில மாதங்களில் நிச்சயமாக இருபத்தையாயிரம் இலங்கை இந்தியர்கள் இந்தியாவுக்கு அனுப்பப்பட்டு விடலாம் என்று எண்ண வேண்டியிருக்கிறது.

இவ்விதமாக, உலக சரித்திரத்திலேயே கண்டும் கேட்டும் இராத ஒரு காரியத்தில் இலங்கை சர்க்கார் துணிந்து இறங்கியிருக்கிறார்கள். இவ் விஷயமாக இந்தியா பார்லிமெண்டில் எழுந்த சரமாரியான கேள்விகளுக்கும் பதில் அளித்துள்ள உதவி வெளி நாட்டு மந்திரி ஸ்ரீ ஏ. கே. சண்டா, இலங்கை சர்க்காரின் நடவடிக்கைகளால் இந்திய சர்க்காருக்கு ஏற்பட்டுள்ள அதிருப்தியைச் சந்தேகத்துக்கு இடமின்றித் தெரிவித்துள்ளார்.

** ** **

இலங்கை இந்தியர்களில்பெரும்பாலோர் தமிழ் நாட்டைச் சேர்ந்தவர்கள். எனவே அங்கிருந்து வெளியேற்றப்படும் கோஷ்டிகளிலும் பெரும்பாலோர் தமிழர்களாகத்தான் இருப்பார்கள். எனவே, இங்கு அவர்களுடைய எதிர்காலம் என்ன! இதை நிர்ணயம் செய்ய வேண்டிய பெரும் பொறுப்பைச் சென்னை சர்க்காரே ஏற்றுக் கொள்ள வேண்டியிருக்கும்.

ஏற்கெனவே இங்கு படித்தவர்களும் பாமரர்களுமாகப் பதினாயிரக் கணக்கானவர்கள் வேலையில்லாமல் கஷ்டப்படும் போது, இலங்கையிலிருந்து நிர்க்கதியாக வரும் பதினாயிரக் கணக்கானவர்களின் கஷ்டமான பிரச்னையைச் சென்னை சர்க்கார் சமாளிக்க வேண்டியிருக்கும்.

எனவே, இலங்கை இந்தியர்களுக்கு ஏற்பட்டுள்ள சோதனை சென்னை சர்க்காருக்கும் சோதனையாக அமைந்திருக்கிறது எனலாம்.

# எழுப்ப முடியுமா?

உத்தரப் பிரதேச சர்க்காரும் மக்களும் பெரும் கலக்கத்துக்கு உள்ளாகியிருக்கிறார்கள். அவர்களுடைய கவலைக்குக் காரணம் என்னவெனில், அங்கு கிராமப் பிரதேசங்களிலும் நகரப் பிரதேசங்களிலும் உள்ள ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் குழந்தைகளின் தொகை வருஷத்துக்கு வருஷம் குறையத் தொடங்கியிருப்பதுதான்.

1950–51-ல் அந்த ராஜ்யத்தில் உள்ள ஆரம்பப் பள்ளிக் கூடங்களில் 8,30,455 பிள்ளைகள் வாசித்தனர். 1952–53ல் மேற்படி தொகை 7,57,325 ஆகக் குறைந்து விட்டது. 1953–54-ம் வருஷத்திய கணக்கு இன்னும் எடுக்கப்படவில்லை. எனினும் இந்த வருஷத்தில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் வாசிக்கும் பிள்ளைகளின் தொகை மேலும் நிச்சயமாகக் குறைந்து விடும் என்று மேற்படி சர்க்கார் அதிகாரிகள் கருதுகிறார்கள்.

பள்ளிக் கூடங்களில் பிள்ளைகளின் தொகை குறைந்து கொண்டு வருவதற்கு அந்த ராஜ்யத்தில் ஏற்பட்டுள்ள பொருளாதார மந்தமே காரணம் என்று அதிகாரிகள் கூறுகின்றனர்.

எனவே, வருஷத்துக்கு வருஷம் மோசமாகிக் கொண்டு வரும் அந்த நிலைமையைச் சீர்படுத்துவதற்காக உத்தரப் பிரதேச சர்க்கார் கல்விச் சீர்திருத்த திட்டம் ஒன்றை வகுத்திருக்கிறார்கள். அத்திட்டத்தின்படி கிராமப் பிரதேசங்களில் உள்ள பள்ளிக்கூடங்கள் ஒவ்வொன்றுக்கும் பத்து ஏக்கர் நிலம் கொடுத்திருக்கிறார்கள். விவசாயத்தைக் கட்டாய பாடமாக வைத்திருக்கிறார்கள். மாணவர்கள் தினந்தோறும் இரண்டு மணி நேரம் நிலத்தில் வேலை செய்து தீர வேண்டும் என்று நிபந்தனை விதித்திருக்கிறார்கள்.

* * *

சென்னை ராஜ்யத்தில் ஆரம்பப் பள்ளிக்கூடங்களின் நிலைமை எப்படி இருக்கிறது என்பதை இப்போது சிறிது கவனிக்கலாம்.

ராஜாஜி கல்வித் திட்டம் அமுலுக்கு வருவதற்கு முன் எவ்வளவு குழந்தைகள் பள்ளிக்கூடத்துக்கு வந்தார்கள்! அந்தத் திட்டம் அமுலுக்கு வந்த பின் எத்தனை குழந்தைகள் வந்தார்கள்!

சில தினங்களுக்கு முன் சென்னை சட்டசபையில் மேற்படி கேள்விகள் கேட்கப்பட்டன. அக் கேள்விகளுக்குக் கல்வி மந்திரி புள்ளி விவரங்களுடன் பதில் அளித்தார்.

"ராஜாஜியின் திட்டம் அமுலுக்கு வருமுன் ஆரம்பப் பள்ளிக்கூடங்களில் 13, 38, 849 சிறுவர்களும் 7,06,453 சிறுமிகளும் வாசித்துக் கொண்டிருந்தார்கள். மேற்படி திட்டம் அமுலுக்கு வந்த பிறகு, அதாவது 1954 ஜனவரி 1-ம் தேதி அப் பள்ளிக் கூடங்களில் வாசித்த சிறுவர்களின் தொகை 14,21,248 ஆகவும், சிறுமிகளின் தொகை 7,86,088 ஆகவும் உயர்ந்தது" என்று கல்வி மந்திரி பதில் அளித்தார். புதுக் கல்வித் திட்டம் அமுலுக்கு வந்த பிறகு ஒவ்வொரு ஜில்லாவிலும் பள்ளிக் கூடங்களில் வாசிக்கும் சிறுவர்கள் சிறுமிகளின் தொகை அதிகமாகியிருந்தது என்பதை ஜில்லா வாரியாகப் புள்ளி விவரங்களுடன் சென்னை சர்க்கார் கல்வி மந்திரி குறிப்பிட்டிருந்தார்.

சென்னை ராஜ்யத்தின் பொருளாதார நிலைமை உத்தரப் பிரதேசத்தைக் காட்டிலும் சீர்கெட்டிருக்கிறது என்றுதான் சொல்ல வேண்டுமேயன்றி, முன்னேற்றம் அடைந்திருப்பதாகச் சொல்லுவதற்கில்லை. எனவே, இந்த ராஜ்யத்துப் பள்ளிக்கூடங்களில் சிறுவர் சிறுமியரின் தொகை அதிகமானதற்கு ராஜாஜி கல்வித் திட்டந்தான் காரணமாயிருக்க வேண்டும். அப்படியிருந்தும் மேற்படி திட்டத்தை ஏன் கைவிட்டார்கள் என்று கேட்கிறீர்களா! நன்றாகக் கேளுங்கள்.

உண்மையிலேயே தூங்குகிறவர்களை எழுப்பி விட முடியும்! ஆனால் விழித்துக் கொண்டு தூங்குவதுபோல் பாசாங்கு செய்வோரை எழுப்புவது சாத்தியமான காரியமா!

# சர்க்கார் போட்ட போடு!

சென்ற இதழில் பரீட்சை முறையைப் பற்றி நாம் எழுதியிருந்ததைப் படித்த நேயர் ஒருவர், "பரீட்சையின் தலையில் சென்னை சர்க்காரே தான் ஒரு பெரிய போடு போட்டு விட்டார்களே!" என்பதை நமக்கு ஞாபகப்படுத்தி எழுதியிருக்கிறார்.

வைத்திய கலாசாலையிலும் என்ஜினியரிங் கலாசாலையிலும் இடம் தருவதற்குப் பரீட்சைகளில் வாங்கிய மார்க்குகளை மட்டும் வைத்துக் கொண்டு நிர்மானிக்கப்பட மாட்டாது என்று சென்னை சர்க்கார் சொல்லி விட்டார்கள் அல்லவா! 'பெர்ஸனலிடி' சோதனை என்பதாக ஒன்றை ஏற்படுத்தியிருக்கிறார்கள். இதற்கு 150 மார்க்கும் வைத்திருக்கிறார்கள். ஒரு மாணவனுடைய தேகத் தோற்றம், முகப் பொலிவு, சாதுரியம், விளையாட்டுக்களில் ஈடுபாடு, சமூக சேவை முதலிய அம்சங்களுக்காக மேற்படி 150 மார்க்கு கொடுக்கிறார்கள்.

சென்னை சர்க்கார் வகுத்திருக்கும் இந்த ஏற்பாட்டைப் பொறுக்குக் கமிட்டியில் நியமிக்கப்படும் கல்வி நிபுணர்களும் ஒப்புக் கொண்டு நடத்தி வைப்பதைக் காண்கிறோம்.

நல்லது; வைத்தியத் தொழிலுக்கும் என்ஜினியரிங் தொழிலுக்கும் மட்டுந்தானா 'பெர்ஸனலிடி' வேண்டும்! எல்லாத் துறைகளுக்கும் வேண்டியதுதானே! ஆதலின் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை எழுதும்போதே, இந்தமாதிரி 'தோற்றப் பொலிவு' சோதனை ஒன்றும் நடத்தி விடலாமே! அதற்காக ஒரு நூறு மார்க்கு ஏற்படுத்தி, பரீட்சையில் வாங்கும் மார்க்குடன் இதையும் சேர்த்துக் கொண்டு 'பாஸ்' அல்லது 'பெயில்' போடுவதாயிருந்தால் ஒரு மார்க்கினால் உள்ளம் உடையும் எத்தனை ஆயிரம் இளைஞர்கள் பிழைத்துப் போவார்கள்!

அத்துடன், மாணுக்கர்கள் பரீட்சைக்குப் படிப்பதை மட்டும் வாழ்க்கையின் குறிக்கோளாகக் கொள்ளாமல், உடற் பயிற்சியிலும் விளையாட்டுக்களிலும் சமூக சேவைத் திட்டங்களிலும் உற்சாகமாக ஈடுபடுவதற்குத் தூண்டுகோல் ஏற்படும் அல்லவா!

# பரீட்சை முறைக்குப் பதில் முறை என்ன?

இலங்கையில் தமிழர்களின் உரிமைக்காகப் போராடி வரும் சிறந்த வாரப் பத்திரிகையான "சுதந்திரன்" பத்திரிகையின் ஆசிரியர் திரு எஸ். டி. சிவநாயகம் சில தினங்களுக்கு முன்பு சென்னைக்கு வந்திருந்த போது "கல்கி" பத்திரிகை ஆசிரியரைச் சந்தித்தார். பல பொருள்களைப் பற்றியும் பேசிய போது, பரீட்சை முறையைப் பற்றியும் பேச்சு வந்தது.

"பரீட்சை முறையில் உள்ள தீமைகளைப் பற்றி நீங்கள் எழுதுவதை இலங்கையில் ஆசிரியர்கள் பலரும் ஒப்புக் கொள்கிறார்கள். ஆனால் பரீட்சை முறைக்குப் பதில் முறை ஒன்றும் நீங்கள் கூறவில்லையென்று குறிப்பிடுகிறார்கள்!" என்றார் சுதந்திரன் ஆசிரியர்.

"பதில் முறை நாம் சொல்லலாம். ஆனால் சொல்லி என்ன பயன்! நாட்டிலேயே சிறந்த அறிவாளிகள் கூறும் கல்விச் சீர்திருத்த முறைகளையே ஆசிரியர் குழுவினர் ஒப்புக் கொள்வதில்லை. நாம் சொல்லுவதையா ஒப்புக் கொள்ளப் போகிறார்கள்! ஆகையால், பரீட்சை முறையிலுள்ள குறைபாடுகளை எடுத்துக் காட்டுவதுடன் நாம் நிறுத்திக் கொள்வோம். வேறு பதில் முறையைக் கண்டு பிடிக்கும் பொறுப்பை ஆசிரியர்களுக்கு விட்டு விடுவதே நலம்."

"இருந்தாலும் சிந்தித்துப் பார்க்கலாமே! ஜப்பான், ஜெர்மனி முதலிய நாடுகளில் குறிப்பிட்ட ஆண்டுகள் பள்ளிக் கூடத்துக்கு ஒழுங்காக வந்திருந்த பிள்ளைகள் எல்லாருக்கும் அத்தாட்சிப் பத்திரம் கொடுத்து விடுகிறார்களாம். அந்த முறை எப்படி!"

"ஜெர்மனியிலும் ஜப்பானிலும் மக்கள் சோம்பல் என்பதையே அறியாதவர்கள் என்று கேள்விப்படுகிறோம். பள்ளிக்கூடத்துக்கு வந்து விட்டால், மாணவர்கள் சும்மா இருக்கமாட்டார்கள். அவர்களைச் சும்மா இருக்கும்படி ஆசிரியர்களும் விடமாட்டார்கள். ஆசிரியர்களும் மாணுக்கர்களும் சுறுசுறுப்பாக வேலை செய்தவண்ணமிருப்பார்கள். நம் நாட்டுப் பள்ளிக்கூடங்களில் இவ்விதம் நடக்கும் என்று உறுதி சொல்ல முடியுமா!"

"ஆகையால், அந்த முறை இங்கே பொருந்தாது. மாணுக்கர்களைத் தேர்வு செய்யும் பொறுப்பை அந்தந்தப் பள்ளிக்கூடங்களின் தலைமை ஆசிரியர்களுக்கோ, அல்லது ஆசிரியர் குழுவுக்கோ விட்டு விடலாமா! அவ்வாறு தலைமை ஆசிரியர்களின் மகா நாட்டில் தீர்மானம் கூடப் போட்டிருக்கிறார்களாமே!"

"தலைமை ஆசிரியர்களுக்கோ, அல்லது மற்ற ஆசிரியர்களுக்கோ அந்தப் பொறுப்பைக் கொடுப்பதால், பள்ளிக்கூடங்களில் பெரிய ரகளைகள் ஏற்படலாம். தேர்வு கிடைக்காத மாணுக்கர்கள் ஆசிரியர்கள் மீது பாரபட்சம் காட்டிய குற்றத்தைச் சுமத்துவார்கள். ஆசிரியரும் மாணுக்கரும் வெவ்வேறு சாதி அல்லது இனமாக இருந்து விட்டால், கேட்க வேண்டியதே இல்லை. 'சாதி வேற்றுமை காரணமாகவே தேர்வு கொடுக்கவில்லை' என்று மாணுக்கர்கள் கருதுவார்கள்."

"ஆகையால், ஏதேனும் ஒரு விதமான பரீட்சை நடத்தியேயாக வேண்டும் என்று ஏற்படுகிறதல்லவா!"

"பரீட்சையை அடியோடு ஒழித்து விட முடியாது. பரீட்சை முறையை மாற்றி அமைப்பது பற்றித்தான் யோசிக்க வேண்டும்."

மேற் கூறிய பேச்சு நடந்த சில தினங்களுக்கெல்லாம் இந்தியாவின் இரண்டு பெரிய பல்கலைக் கழகங்களின் உப அத்தியட்சகரான ஸ்ரீ ஸி. பி. ராமஸ்வாமி ஐயர் அவர்கள் பரீட்சை முறையை மாற்றுவது பற்றிக் கூறிய யோசனை தினப் பத்திரிகைகளில் வெளியாயிற்று.

பரீட்சை எழுத உட்காரும் பிள்ளைகளின் கையில் அந்தந்தப் பரீட்சைக்குரிய புத்தகங்களைக் கொடுத்து எழுதச் சொல்ல வேண்டும் என்பது தான் அந்தச் சிறந்த யோசனை.

இப்போது பரீட்சைகளில் மாணுக்கர்களின் அறிவு வளர்ச்சியையோ,* உண்மையான பாஷா ஞானத்தையோ சோதிப்பதில்லை. நெட்டுருச் செய்யும் சக்தியையே சோதிக்கிறார்கள்.

பரீட்சைகளில் இன்னின்ன மாதிரி கேள்விகள் வரலாமென்று ஊகித்துக் கொண்டு பிள்ளைகள் பதில்களைப் பொட்டை நெட்டுருச் செய்கிறார்கள். இதற்கு உதவி செய்வதற்காகக் கணக்கற்ற 'பரீட்சைக் குறிப்பு'ப் புத்தகங்கள் வெளியாகின்றன.

சில பிள்ளைகள் பாட புத்தகங்களைக் கூடப் படிப்பதில்லை. 'குறிப்புப்' புத்தகங்களை மட்டுமே பரீட்சைக்காகப் படிக்கிறார்கள்.

பாடபுத்தகங்களைக் கையில் வைத்துக்கொண்டு பரீட்சை எழுதலாம் என்று ஏற்படுத்தி விட்டால் மேற்கூறிய தீங்கு ஒழிந்து விடும்.

ஒரு விஷயத்தைப் பற்றிய கேள்விக்கு, அதற்குரிய புத்தகத்தைப் பார்த்துச் சரியான பதில் எழுதுவதற்கு ஒரு மாணுக்கன் திறமையுள்ளவனுயிருந்தால், அவன் மேற்படிப்புக்கும் திறமையுடையவனுவான்.

'இலக்கிய வித்வான்' (Doctor of Literature) முதலிய பெரிய பட்டங்களைப் பெறுவதற்குப் பல புத்தகங்களை ஆராய்ந்து, பல ஆசிரியர்களின் முடிவுகளை ஆதாரமாகக் காட்டி, ஆராய்ச்சிக் கட்டுரைகள் எழுதும் முறை அமுலில் இருக்கிறது.

பின்னர், எஸ். எஸ். எல்.சி., இண்டர் மீடியட், முதலிய சிறிய வகுப்புப் பரீட்சைகளுக்கு மட்டும் பொட்டை நெட்டுருப் போட்டு விடைகள் எழுத வேண்டிய அவசியம் என்ன!

ஸ்ரீ சி. பி. ராமஸ்வாமி அய்யர் அவர்கள் பரீட்சை முறையை மாற்றி அமைப்பதற்குக் கூறும் சிறந்த யோசனையை நாம் உற்சாகமாக ஆதரிக்கிறோம்.

ஆசிரியர் குழுவினர் அதைப் பற்றிச் சிந்திக்குமாறு கேட்டுக் கொள்கிறோம்.

# வீர பத்தினியின் நன்றி

பாதாளச் சாக்கடையில் ஆபத்துக்குள்ளானவர்களைக் காப்பாற்றுவதற்கான முயற்சியில் திரு சந்நியாசி என்னும் தொழிலாளிச் சகோதரர் தம் இன்னுயிரை நீத்தார். அவருடைய தியாகச் செயலைப் பாராட்டி இந்தப் பத்திரிகையின் சென்ற ஜூன் மீ 6-டி இதழில் எழுதப்பட்டிருந்தது. அதைப் படித்த நம் நேயர்களில் ஒருவர் பத்து ரூபாயும் இன்னொருவர் ஒரு ரூபாயும் அனுப்பி, உயிர் நீத்தவரின் மனைவியிடம் சேர்ப்பிக்கும்படி கோரியிருந்தார்கள். மேற்படி பதினொரு ரூபாயையும் நாம் சென்னைப் போலீஸ் கமிஷனர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி அய்யங்கார் பி. ஏ., எம்.எல். அவர்களிடம் கொடுத்து, காலஞ்சென்றவரின் மனைவியாரிடம் சேர்ப்பிக்கும்படி கேட்டுக்கொண்டிருந்தோம். அப்படிச் சேர்க்கப்பட்டதன் பேரில் நமக்கு அச் சகோதரியிடமிருந்து வந்த கடிதம் :

“அன்புள்ள 'கல்கி' ஆசிரியர் அவர்களுக்கு தாங்கள் எனது கணவர் சந்நியாசியப்பன்

அவர்கள் வீரச் செயல் புரிந்து மரணம் அடைந்த தற்காக அவரைப் பாராட்டி எழுதி, அவரது மனைவியாகிய எனக்கு அன்பு கூர்ந்து அனுப்பிய ரூ. 11-க்கு நான் தங்களை மனமார வாழ்த்துகிறேன். மேற்படி பணத்துக்கு இதுவே ரசீது.

9—8—54

நாராயணி அம்மாள்.''

இந்தக் கடிதத்தில் கண்ட வாழ்த்துக்கு நாம் உரியவர்கள் அல்ல. பணம் அனுப்பிய நேயர்கள் இருவர்களும் உரியவர்கள். இந்த நன்றிக் கடிதத்தைப் படிக்கும்போது எவருக்கும் கண் கசியாமல் இராது. நம் நாட்டு ஏழைத் தொழிலாளி மக்கள் எவ்வளவு நல்ல உள்ளம் படைத்தவர்களாயிருக்கிறார்கள்! அவர்களுடைய நன்றி உணர்ச்சியைத் தான் என்னவென்று சொல்வது!

நமது ''கல்கி'' பத்திரிகை நேயர்கள் இம்மாதிரி காரியங்களில் விரைந்து உதவி செய்ய முன் வருவது பற்றியும் நாம் மகிழ்ந்து பெருமை யடைகிறோம். நெடுந் தூரத்திலுள்ள கெனியா நாட்டுத் தலைநகரமான நைரோபியிலிருந்து ஒரு நேயர், ஜயரோகத்துக் குள்ளான ஸ்ரீ டி. கே. ராஜ கோபாலன் தம்பதிகளின் உதவிக்காக ஏழு ஷில்லிங் அனுப்பி யிருக்கிறார். அது நேற்று நமக்குக் கிடைத்தது. தமிழர்கள் எத்தனை தூரம் சென்றாலும் அவர்களுடைய உள்ளத்தில் தமிழகமும் கருணையும் சேர்ந்து குடிகொண்டிருக்கின்றன.

அட்டைப்பட விளக்கம்

# நர்த்தன விநாயகர்

எங்கும் நிறைந்த இறைவனை நமது முன்னோர்களாகிய முனிபுங்கவர்கள் ஆனந்த மயமான பரம்பொருளாக ஞானக் கண்ணினால் கண்டார்கள். அகக் கண்ணால் கண்ட பரம்பொருளுக்கு உருவம் கொடுத்து வணங்கிய போது, ஆனந்தத்தைக் குறிப்பிடுவதற்கு நடனத் தோற்றத்தைச் சின்னமாகக் கொண்டார்கள். சிவபெருமானுக்கு ஆனந்தத் தாண்டவம் புரியும் நடராஜ வடிவத்தைத் தந்தார்கள். நடராஜப் பெருமானுடன் சிவகாமியும் போட்டியிட்டு ஆடுவதாகக் கற்பனை செய்தார்கள். திருமாலின் பூரண அவதாரமாகிய ஸ்ரீ கிருஷ்ணாவதாரத்தில், கண்ணனைக் காளிங்கன் தலைமீது நடனமாடச் செய்தார்கள். இவ்வளவும் போதாது என்று, யானைமுகக் கடவுளையும் நர்த்தன விநாயகராக்கி மகிழ்ந்தார்கள்!

இறைவனுடைய திருவடிவங்களுக்குள்ளே விநாயக வடிவம் தமிழ் மக்களின் உள்ளத்தைப் பெரிதும் கவர்ந்தது. எந்தக் கோயிலிலும் முதலில் வீற்றிருப்பது ஆனைமுகக் கடவுள்தான். ஆற்றங்கரை, குளத்தங்கரை, அரசமரத்தடி, முச்சந்தி, நாற்சந்தி, — இன்னும் நாலு பேர் எங்கெங்கே கூடுவதற்கு வசதி உண்டோ அங்கே யெல்லாம் பிள்ளையாரை எழுந்தருளச் செய்தார்கள். பிள்ளையாரைச் சுற்றி வந்து, தோப்புக் கரணம் போட்டு, நெற்றியில் குட்டிக் கொண்டு வழிபடுவதில் தமிழ்நாட்டுச் சிறுவர், சிறுமியர், முதியோர், பெண்கள் அனைவருக்கும் ஒரு தனி ஆனந்தம்.

இவ்விதம் விநாயகர் வழிபாட்டை மேற்கொண்டதில், தமிழர்களுக்கே இயற்கையான ஹாஸ்ய உணர்ச்சியும் வெளியாகிறது. யானையைக் கண்டாலே யாருக்கும் ஓர் எக்களிப்பு. பெரிய தொந்தி உடையவர்களைக் கண்டாலும் அப்படித்தான். இந்த இரண்டு அம்சங்களும் சேர்ந்தவர் விநாயகர். அவ்வளவு பெரிய வடிவமுடைய கடவுளுக்கு வாகனமாக மூஷிகம் அமைந்திருப்பதையும் பாருங்கள்!

மிகச் சிறிய பிராணியாகிய மூஞ்சூறு அத்தனை பெரிய விநாயக வடிவத்தை ஏற்றிச் செல்ல முடியுமா! முடியாதுதான்!

இது நம் முன்னோர்கள் அறியாதது அல்லவே! இதிலிருந்தே, நம் பெரியோர்கள் விநாயகர் முதலிய மூர்த்திகளை முழுமுதற் கடவுளின் ஒவ்வொரு அம்சத்தைக் குறிப்பிடும் சின்னங்களாகக் கொண்டு வழிபட்டார்கள் என்பது தெளிவாகிறது.

இந்த இதழ் ''கல்கி'' அட்டையில் நமது முதல் சந்தா நேயராகிய விநாயகப் பெருமான் நடன விநாயகராகத் தோற்றமளிக்கிறார்; ஆனந்தக் கூத்தாடுகிறார்.

இந்த ஆண்டில் தமிழ்நாடு வான மழை பொழிந்து, வளம் பெருகி விளங்கப் போவதைக் குறித்து ஆனந்த நடனமாடுகிறாரா! அல்லது சென்ற ஆண்டில் நடைபெற்ற விநாயகர் சிலை உடைப்பு வேடிக்கையை எண்ணித் தாண்டவமாடுகிறாரா! அல்லது உங்கள் ''கல்கி'' பத்திரிகைக்குப் பதின்மூன்று ஆண்டு நிறைந்து பதினாலாம் ஆண்டு பிறந்திருப்பதைக் குறித்துக் களிக்கூத்து ஆடுகிறாரா!

காரணம் எதுவாயிருந்தாலும், நர்த்தன விநாயகர் நமக்குப் பெருமிதமான குதூகலத்தை அளிக்கிறார். இம்மாதிரியே, அதிரா அடிகள் என்னும் சிவ பக்தருக்கும் களிப்பூட்டியிருக்கிறார். களிப்பின் மிகுதியால் அதிரா அடிகளின் உள்ளம் பொங்கி வந்த அருமையான பாடலைப் பாருங்கள்:—

''நிலந்துளங்க மேருத்
துளங்க நெடுவான்
தலந்துளங்கச் சப்பாணி
கொட்டும்—கலந்துளங்கொள்
காமாரி ஈன்ற
கருங்கைக் கடதடத்து
மாமாரி ஈன்ற மணி!''

நிலம் நடுங்குகிறது; மேரு மலை நிலைபெயர்கிறது; வானுலகம் குலுங்குகிறது; — எல்லாம், அன்னை மகாசக்தியின் செல்வப் பிள்ளையார் சப்பாணி கொட்டிக் கும்மாளம் அடிப்பதின் காரணமாக!

அத்தகைய பிள்ளையாரின் திருநாள் நெருங்கி வருகிறது. தமிழ் மக்கள் அத்திருநாளைக் குதூகலமாகக் கொண்டாடப் போகிறார்கள் என்று சொல்லவா வேண்டும்!

தமிழ் மொழிக்கும் தமிழர்களின் கலைகளுக்கும் அருந் தொண்டு புரிந்து சமீபத்தில் நம்மை விட்டுப் பிரிந்த ரசிகமணி டி. கே. ஸி. யின் திரு உருவப் படத்தைச் சென்ற 21-ம் தேதி திருவல்லிக்கேணி இளம்பிறைச் சங்கத்தில் சென்னைப் பிரதம நீதிபதி ஸ்ரீ பி. வி. ராஜமன்னார் திறந்து வைத்தார். டி. கே. ஸி. யைப் போலவே கலைகளில் அன்பும் ஆர்வமும் மிக்க நீதிபதி ரசிகமணியின் திரு உருவப் படத்தைத் திறந்து வைப்பது சாலப் பொருத்தமானது என்று ராஜாஜி கூறினர்.

மேற்படி வைபவத்தில் ராஜாஜி, திரு ம. பொ. ஸி., ஸ்ரீ கே. எஸ். ராமஸ்வாமி சாஸ்திரியார், ஸ்ரீ ராதா கிருஷ்ணப் பிள்ளை, 'கல்கி' ஆசிரியர், ஸ்ரீ கொத்தமங்கலம் சுப்பு முதலியவர்கள் ரசிக மணி டி.கே.ஸி. அவர்களின் பல்வேறு பண்புகளையும் தொண்டுகளையும் சிறப்பாக எடுத்துக் கூறினர்கள்.

"நாம் ஜாதிப் பிரிவினைகளைப் பற்றிப் பேசுகிறோம். ஆனால் மக்கள் சமுதாயத்தின் சரிபாதியாக விளங்கும் பெண் இனத்தைப் பற்றி நாம் கவலை கொள்வதில்லை. ஆனால் ரசிகமணி கவலை கொண்டார். பெண்களிடம் அவருக்கிருந்த மதிப்பும் மரியாதையும் சொல்லி முடியாது. எந்தப் பாடலாயினும் பெண்களுக்கு விளங்கினால் தான், அவர்கள் அனுபவித்தால்தான், அது சாகாவரம் பெற்ற கவிதையாகும் என்பது ரசிக மணியின் கொள்கை" என்று ராஜாஜி கூறினர்.

ரசிகமணியின் விருந்தோம்பும் பண்பைக் குறித்து ஸ்ரீ சிவஞான கிராமணியார் பெரிதும் பாராட்டிப் பேசினர்.

விழா ஆரம்பத்தில் டி. கே. ஸி. ஞாபகார்த்தக் கமிட்டியின் தலைவர் ஸ்ரீ சத்தியமூர்த்தி சபையோருக்கும் வந்திருந்த பெரியோர்களுக்கும் வரவேற்புரை கூறினர். கம்பன் இலக்கியத் தொண்டுக்காக ஆண்டுதோறும் ஒரு பதக்கம் பரிசளிக்கக் கமிட்டியார் முடிவு செய்திருப்பதாகக் கூறினர்.

ஞாபகார்த்தக் கமிட்டியின் காரியதரிசி ஸ்ரீ எஸ். எம். பாஸில் வந்தனோபசாரம் கூற விழா இனிது முடிந்தது.










# "வரியை உயர்த்துங்கள்!"

எங்கள் ஊர் ராமேசுவரம். எங்கள் பஞ்சாயத்துச் சபைக்கு எல்லோரும் எதிர்பார்த்தபடியே தலைவர் அங்கத்தினர்கள் உள்பட எல்லா ஸ்தானங்களுக்கும் முற்றிலும் இளைஞர்களே தேர்ந்தெடுக்கப் பட்டனர். அன்று ஊரே ஒரு திரு விழா போல் காட்சியளித்தது. சேவா ஆர்வம் மிகுந்த இளைஞர்களால் நமது ஊர் நிச்சயம் முன்னேறி விடும் என்ற நம்பிக்கையின் ஒளி எல்லாருடைய முகத்திலும் சுடர் விட்டுப் பிரகாசித்துக் கொண்டிருந்தது. ஆனால்... முழுசாக ஒரு வருஷம் கழிந்து விட்ட இன்று ஊர் எந்த நிலையிலிருக்கிறது!

உருப்படியாக எல்லா ஜனங்களுக்கும் எளிதில் தெரியும் படியாக ஏதேனும் முன்னேற்றம் காணப்படுகிறதா என்று கேட்டால், இல்லை என்றுதான் பதில் சொல்ல வேண்டும். நகரம் அன்றிருந்த நிலைமையிலேயே இருக்கிறது. எதிர்பார்த்து வோட்டளித்த மக்களுக்கு ஏமாற்றம்; தேர்தலில் வேலை செய்த ஊழியர்களுக்கு மனச் சோர்வு; தலைவர்களுக்கும் அங்கத்தினர்களுக்கும் ஏற்பட்டிருக்கும் தர்ம சங்கடம் — இவைதான் இன்றைய நிலைமை. இதற்குக் காரணம் என்ன!

இராமேசுவரம் ஒரு அகில இந்திய முக்கியத்துவம் பெற்ற க்ஷேத்திரம். நமது நாட்டின் பல்வேறு பாகங்களிலுமிருந்தும் ஆயிரக்கணக்கான யாத்திரிகர்கள் தினந்தோறும் விஜயம் செய்யும் இடம். ஆகவே யாத்திரிகர்களுக்கு வேண்டிய சௌகரியங்கள் முக்கியமாகக் கவனிக்கப் பட வேண்டும். சுகாதாரம், தண்ணீர், விளக்கு வசதி போன்றவைகளுக்குப் போதிய அளவு செலவு செய்ய வேண்டியது மிக மிக அவசியம்.

ஆனால் பஞ்சாயத்தின் நிதி நிலைமையோ மிகமிக மோசம். உருப்படியாகத் தெரியும் வரி ரயில்வே டிக்கட்டுகள் மூலமாக வரும் யாத்திரை வரி ஒன்றுதான். இவை தவிர வீட்டு வரி, தொழில் வரி போன்றவைகளும் விதிக்கப்படுகின்றன. ஊரிலுள்ள மூன்றிலொரு பாகம் தர்ம சத்திரங்களாயிருப்பதால் அவை வரி விதிப்பினின்றும் நீக்கப் பட்டிருக்கின்றன. பயிரிடப்படும் நிலங்கள் ஏதும் இல்லாதபடியாலும், அதிகமான லேவா தேவி நடைபெற வாய்ப்பு இல்லாதபடியாலும் ரிஜிஸ்ட்ரேஷன் மூலமாக அதிகம் எதிர்பார்ப்பதற்கில்லை. பெரியதொரு வாரச் சந்தைகளோ சினிமா தியேட்டர்களோ கூட இல்லையென்றால் அதிக வருமானத்துக்கு வழி ஏது!

முதலில் சுகாதாரத்தை எடுத்துக் கொள்ளுவோம். சட்டப்படி மொத்த வருமானத்தில் முப்பது சத விகிதத்துக்கு மேல் சுகாதாரத்துக்காகச் செலவழிக்கக் கூடாது. ஆனால் யாத்திரை ஸ்தலமாக இருப்பதால் பிரத்தியேக அனுமதியின் பேரில் நாற்பது சத விகிதத்துக்கு மேலேயே செலவழிக்க வேண்டியிருக்கிறது. வருடத்தில் சாதாரணமாக ஐந்து முக்கிய விசேட காலங்கள் வருகின்றன. இந்தப் பருவ காலங்களிலே முன்னைப் போல யாத்திரிகர்கள் வருவது வெகுவாகக் குறைந்து விட்ட போதிலும், வழக்கம்போல நாங்கள் பிரத்தியேக சுகாதார ஏற்பாடுகள் செய்துதான் ஆகவேண்டும் என்று வற்புறுத்தப்படுகிறது.

எங்கள் நிலக்காக ஒரு சர்க்கார் சுகாதார அதிகாரி இருக்கிறார். அவர் அந்தந்த திருவிழாக் காலங்களில் இன்னின்ன விசேஷ சுகாதார ஏற்பாடுகள் செய்ய வேண்டும் எனக் கூறி அதற்கு இவ்வளவு பணம் தேவை என்று சொல்லுவார். நாங்கள் பதில் பேசாமல் கொடுத்து விட வேண்டும். இவ்வளவு பணம் செலவழிக்கப்படுகிறதே, இதற்குத் தகுந்த பலன் இருக்கிறதா என்று கேட்டால், அதுவும் இல்லை. இந்தச் சுகாதார அதிகாரி ஒரு கெஜடட் ஆபீஸர். பஞ்சாயத்துக்குக் கட்டுப்பட்டவரல்ல. அவரிடம் அதைச் செய்ய வேண்டும், இதைச் செய்ய வேண்டும் எனக் கூற எங்களுக்கு அதிகாரம் இல்லை. சுகாதார சிப்பந்திகள் நியமனம், நீக்குதல், தண்டனை போன்றவைகளிலும் அவர்களின் அன்றாட வேலைகளைக் கண்காணிப்பதிலும் முழு அதிகாரமும் சுகாதார அதிகாரிக்கே தவிர, பஞ்சாயத்து நிர்வாக அதிகாரிக்கோ, தலைவருக்கோ இல்லை.

சுகாதார ஏற்பாட்டுக்காகப் பணம் செலவழிக்கும் பஞ்சாயத்துக்கு, அந்த ஏற்பாடுகள் சரிவரச் செய்யப்படுகின்றனவா என்று கண்காணிக்க அதிகாரமில்லை. மேலும், பஞ்சாயத்துத் தலைவரும் அங்கத்தினர்களும் அவ்வப்போது நகரின் பல பாகங்களையும் சுற்றிப் பார்த்து, மக்கள் சுட்டிக் காட்டும் சுகாதாரக் குறைபாடுகளை உடனுக்குடன் நிவர்த்தி செய்வது, இந்த அசம்பாவிதமான முறை அமுலிலிருப்பதால், அசாத்தியமாகிறது. இதனால் விவரம் தெரியாத சாதாரண மக்களின் ஏச்சுக்குத் தலைவரும் அங்கத்தினர்களும் ஆளாக வேண்டிய அவல நிலை ஏற்பட்டிருக்கிறது. இதை மாற்றியமைக்க நாங்கள் சர்க்காரிடம் ஒரு போராட்டமே நடத்தி வருகிறோம்.

அடுத்தது தண்ணீர் விநியோகம். என்றென்றைக்கும் தண்ணீர்க் கஷ்டம் என்பதே இவ்வூருக்கு இல்லை என்னும் வகையிலே, குழாய்கள் மூலம் தண்ணீர் விநியோகம் செய்யப்பட்டு வருகிறது. இதை இப் பஞ்சாயத்தே தன் சொந்தத்தில் நடத்தி வருகிறது. இப் பகுதியிலேயே தண்ணீர்க் குழாய்த் திட்டம் அமுலிலிருக்கும் பஞ்சாயத்து இது ஒன்றுதான் எனக் கூறலாம். இதற்காக வரம்புக்கு மீறியே செலவிட வேண்டியிருக்கிறது. தண்ணீர் வரி, தனிப்பட்ட வீடுகள், சத்திரங்களில் பொருத்தப்பட்டிருக்கும் குழாய்களுக்குக் கட்டணம் இவைகள் மூலம் பஞ்சாயத்துக்கு வருவதைப்போன்று மூன்று மடங்கு, அதாவது ரூபாய் ஏழாயிரத்தைந்நூறு வரை தண்ணீர் விநியோகத்துக்காகச் செலவிடப்படுகிறது.

அடுத்தது விளக்கு வசதி. பஞ்சாயத்துப் பிரதேசமெங்கிலும் மின்சார விளக்குகள் போடப்பட்டிருக்கின்றன. இந்த மின்சாரம் இவ்வூர் தேவஸ்தானத்தாரால் உற்பத்தி செய்யப்பட்டுச் சர்க்காரால் விநியோகிக்கப்படுகிறது. பஞ்சாயத்துத் தெரு விளக்குகளுக்கு யூனிட் ஒன்றுக்கு ஐந்தேகால் அணா வீதம் வசூலிக்கப்படுகிறது. இந்த விகிதம் மற்ற நகர சபைத் தெருவிளக்குக் கட்டணங்களைப் போன்று மூன்று மடங்குக்கும் அதிகம்.

யாத்திரிகர்களின் சௌகரியங்களை முன்னிட்டு இம்மாதிரி அதிகப்படியான செலவுகள் தவிர்க்க முடியாததாக விருக்கின்றன.

இவ்வளவு கஷ்டங்களுக்கிடையிலும் ஒரு சில சீர்திருத்தங்கள் செய்யப்பட்டிருக்கின்றன என்பதை நாங்கள் பெருமையுடன் கூறிக் கொள்ள முடியும். தெரு விளக்குகளின் தொகை கணிசமான அளவு அதிகரிக்கப்பட்டிருக்கின்றன; அதாவது இதுவரை பல்புகள் பொருத்தப்படாம

விருந்த ஸ்தம்பங்களில் பல்புகள் பொருத்தப்பட்டிருக்கின்றன. மற்றும் பஞ்சாயத்திலிருந்து ஒரு குழு நிறுவி, இக் குழு நகரமெங்கும் சுற்றிப் பார்த்து, எந்தெந்த இடங்களில் புதிதாக விளக்குகள் போடப்பட வேண்டும், எந்தெந்த விளக்குகளை மாற்றி யமைக்க வேண்டும், மெர்க்குரி விளக்குகள் எந்த இடங்களில் போடலாம் என்பதைப் பரிசீலித்து அதன்படி நிறைவேற்ற சர்க்கார் மின்சார இலாகாவுக்கு மனுச் செய்திருக்கிறோம். அநேகமாக ஓரிரு மாதங்களில் இது நிறைவேற்றப்பட்டு விடும். மின்சார விளக்குகளுக்கு அதிக தூரமாகவும் பஞ்சாயத்து எல்லைக்குள்ளும் உள்ள ஒரு சில இடங்களில் தாற்காலிகமாக மண்ணெண்ணெய் விளக்குகள் போட ஏற்பாடு செய்திருக்கிறோம்.

இவ்வருஷத்திலே புதிதாக மூன்று இடங்களிலே குழாய்கள் வைக்க ஏற்பாடுகள் நடந்து கொண்டிருக்கின்றன. மேலும் குழாய்த் தண்ணீரை நல்ல முறையிலே சுத்தம் செய்வதற்காக, சர்க்காரிடம் மான்யம் பெற்று ரூபாய் நாலாயிரம் செலவில் ஒரு 'க்ளோரினேஷன் ப்ளாண்ட்' வாங்க ஏற்பாடு செய்திருக்கிறோம். சர்க்கார் ஆலோசனையின்படி லண்டன் கம்பெனி ஒன்றுக்கு ஆர்டர் செய்திருக்கிறோம்.

சுகாதார விஷயத்தில் அனுவசியமாகச் செலவழிக்கப்பட்டு வந்த சிலவற்றைக் குறைக்க முயற்சி எடுத்து வருகிறோம். வெகு நாட்களுக்குப் பிறகு நகரசுத்தித் தொழிலாளர்களுக்கு உடைகள், நீவு அலவன்ஸ் முதலியவை வழங்கி அவர்களை உற்சாக மூட்டியிருக்கிறோம்.

தவிரவும் பஞ்சாயத்து வாசகசாலையில் ஒரு ஆங்கில தினசரி, ஒரு தமிழ் தினசரி இவை மாத்திரமே போடப்பட்டு வந்தன. இப்பொழுது இரண்டு ஆங்கில தினசரிகள், மூன்று தமிழ் தினசரிகள், நான்கு வாரப் பத்திரிகைகள், ஐந்து மாத சஞ்சிகைகள் மற்றும் சர்க்காரால் வெளியிடப்படும் சஞ்சிகைகள் முதலியவை போடப்பட்டு வருகின்றன.

முக்கியமாக எல்லோரும் எதிர்பார்ப்பது ரோடு வசதி. இது விஷயத்தில் ஒரு சிறிது கூட முன்னேற்றமே இல்லை. நாங்கள் பதவி யேற்றவுடனேயே முதலில் இதைத்தான் செய்ய வேண்டுமென்று ஆவலுடனிருந்தோம். ஆனால் உண்மை நிலை எங்கள் எண்ணத்துக்கு நேர்மாறாக இருந்தது. சட்டப்படி வருமானத்தில் இருபது சத விகிதத்துக்குக் குறையாமல் (சுமார் ஆறாயிரம் ரூபாய்) ரஸ்தாக்களுக்குச் செலவழிக்க வேண்டியிருந்தும் கூட, கடந்த பல வருஷங்களாக ஒவ்வொரு வருஷமும் ரூபாய் அறுநூறு, எழுநூறுக்கு மேல் செலவழிக்கப்படவே யில்லை. சுகாதாரம், விளக்கு, தண்ணீர் வசதி போன்றவைகளுக்கு வரம்புக்கும் மீறிய செலவு செய்வதால் இதைக் கவனிக்க முடியவில்லை. பஞ்சாயத்து வருமானத்தைக் கொண்டு ரஸ்தாக்கள் அமைப்பது முடியாது என்ற நிலைமை ஏற்பட்டு விட்ட படியால் சர்க்காரிடம் மான்யம் கேட்டோம். மறுத்து விட்டார்கள். பிறகு சில முக்கிய ரஸ்தாக்களுக்கேனும் தார் போட வேண்டுமென்பதற்காகச் சர்க்காரிடம் கடன் கோரியிருக்கிறோம். இதுவரை யாதொரு பதிலும் வரவில்லை.

இவ்வூரின் முக்கியத்வத்தை முன்னிட்டு கமது ஜனாதிபதியிலிருந்து சாதாரண எம். எல். ஏ. வரை இங்கு விஜயம் செய்யாதவரே கிடையாது எனலாம். இவ்விதம் வரும் ஒவ்வொருவரிடமும், சம்பந்தப்பட்ட அதிகாரிகளிடமும் சர்க்கார் உதவிக்காக சிபார்சு செய்யும்படி முறையிட்டு வருகிறோம்.

எல்லோரும் வரியை உயர்த்தும்படி சொல்லிச் செல்கிறார்கள். ஆனால் வறுமையிலேயே உழன்று, பல துறைகளிலும் நாளுக்கு நாள் க்ஷீணித்துக் கொண்டு வரும் இவ்வூர் மக்கள் இப்பொழுது உள்ள வரிகளையே ஒழுங்காகச் செலுத்த முடியாமல் திணறும் போது, வரி உயர்வு என்பது கனவிலும் கருதக் கூடாத விஷயமென நாங்கள் முடிவு செய்து விட்டோம்.

ஆனாலும் வருமான உயர்வுக்கான வழிகளைக் காண முயற்சிக்காமலும் இருக்க வில்லை. எந்த யாத்திரிகர்களின் சௌகரியங்களுக்காக நாங்கள் அளவுக்கு மீறிச் செலவு செய்ய வேண்டியிருக்கிறதோ, அதே யாத்திரிகர்களின் மூலமாகவே அதிக வருவாயை அடையும் இவ்வூர் தேவஸ்தானத்தார் தற்போது பிரதி வருஷமும் மான்யமாக அளித்து வரும் ரூபாய் இரண்டாயிரத்தை ஐயாயிரமாக ஆக்க வேண்டுமென்று கோரியிருக்கிறோம். தவிரவும் ரயில்வே மூலம் வரும் யாத்திரை வரியையும் உயர்த்த முற்பட்டிருக்கிறோம். தற்போது இந்த வரி இங்கு கொடுக்கப்படும் ஒவ்வொரு மூன்றாவது வகுப்பு டிக்கட்டும் ஒரு அணா, இண்டர் ஒன்றரையணா, இரண்டாவது வகுப்பு இரண்டணாவாக வசூலிக்கப்படுகிறது. இதனால் ஒரு ரூபாய் கொடுத்து ராமநாதபுரம் டிக்கட்டு வாங்குபவரும், நாற்பத்தைந்து ரூபாய் கொடுத்துக் கல்கத்தா டிக்கட்டு வாங்குபவரும்கூட ஒரு அணாவேதான் வரி செலுத்த வேண்டியிருக்கிறது. இந்த வித்தியாசத்தை மாற்ற, இங்கு கொடுக்கப்படும் ஒவ்வொரு டிக்கட்டின் மதிப்பின் பேரிலும் ஒவ்வொரு பத்து ரூபாய்க்கும் அதன் பகுதிக்கும் ஒரு அணாவாக வசூலிக்க வேண்டுமென்றும் கேட்டிருக்கிறோம். இதனால் அதிகம் பணம் கொடுத்து டிக்கட் வாங்குபவர்கள்

அதிகமாக வரி செலுத்த வேண்டி வரும். எவ்வளவோ செலவழிக்கும் யாத்திரீகர்கள் அவர்களின் சௌகரியத்துக்காகவே செலவழிக்கப்படும் இந்த வரியை மனமுவந்து கொடுக்க முன் வருவார்கள் என்பதிலும் சந்தேகமில்லை.

மேலே குறிப்பிட்டவைகளும் கூட சர்க்கார் தயவினால்தான் நடைபெற வேண்டி யிருப்பதால், எங்கள் பஞ்சாயத்தின் முன்னேற்றத்துக்கு முற்றிலும் சர்க்காரையே நம்பியிருக்க வேண்டிய நிலை ஏற்பட்டிருக்கிறது.

இவை தவிர, இதர மேஜர் பஞ்சாயத்துக்களைப் போலவே நிர்வாக அதிகாரியின் தலையீடலும் இருந்து வருகிறது. 1951-ம் வருஷம் புதிய பஞ்சாயத்துச் சட்டம் அமுலுக்கு வந்த புதிதில், பஞ்சாயத்துகளுக்குப் பிரமாதமான அதிகாரங்கள் கொடுக்கப் பட்டிருப்பதாகக் கூறப்பட்டது. ஆனால் நடைமுறையில் பார்க்கும்பொழுதுதான் தெரிகிறது, அவ்வளவு அதிகாரங்களும் ஒரு சாதாரண சர்க்கார் சிப்பந்தியா யிருக்கும் நிர்வாக அதிகாரிக்கே தவிர, மக்களின் பிரதிநிதிகளுக்கு அல்ல என்று.

சர்க்காருக்கு மக்கள் பிரதிநிதிகளின் மேல் உள்ள நம்பிக்கைக்கு ஒரு சிறு உதாரணம் பாருங்கள்! நிர்வாக அதிகாரி வெளியூர்களுக்குச் செல்லும் நாட்களில் தன் அதிகாரங்களைத் தலைவருக்கு 'டெலிகேட்' செய்கிறார் அல்லவா! அப்பொழுது கீழே கொடுக்கப்பட்டிருக்கும் அதிகாரங்களைத் தவிர மற்றவைகளை மாத்திரம்தான் 'டெலிகேட்' செய்கிறார்.

1. சிப்பந்திகளை நியமிப்பதும் தண்டிப்பதும். 2. மார்க்கெட் குத்தகை முதலியவைகளின் வருடாந்திர விற்பனைக்குப் பொது ஏலம் விடுதலும், புனர் விற்பனை செய்தலும். 3. காண்ட்ராக்டுகளில் கையெழுத்திடுவது. 4. நிர்வாக அதிகாரி அங்கம் வகிக்கும் சாசுவத கமிட்டிகளின் கூட்டங்களில் கலந்து கொள்ளும் உரிமை. 5. மேற்படி கமிட்டிகள் சம்பந்தப்பட்ட நடைமுறை வேலைகளைக் கவனித்தல். 6. மேல் நடவடிக்கை, உத்தியோக உயர்வு, மாற்றங்கள் முதலியவை சம்பந்தமான தஸ்தாவேஜிகளைக் கவனித்தல். 7. எந்த தஸ்தாவேஜிகளின் பேரிலும் இறுதியான உத்தரவு பிறப்பித்தல். 8. பஞ்சாயத்துச் சிப்பந்திகளுக்கு காஷுவல் லீவு தவிர மற்ற லீவுகள் கொடுத்தல். 9. நிர்வாக அதிகாரியின் முந்தைய உத்தரவுகளை மாற்றுதல். 10. மிகவும் அவசியமாகக் கவனிக்க வேண்டு மென்று இருந்தாலல்லாது மற்ற சமயங்களில் நிர்வாக அதிகாரி அலுவலுக்குத் திரும்பு முன்பு முக்கிய விஷயங்களைக் கவனித்தல். 11. வரி சம்பந்தமாகப் புனர் விசாரணை செய்யக் கோரும் மனுக்களைப் பைசல் செய்தல். 12. லைசென்ஸுகள் வழங்குதல்.

பாருங்கள்! இதைத் தவிர ஒரு அதிகாரிக்கு வேறு என்ன அதிகாரங்கள் இருக்க முடியும்! இதற்கு "டெலிகேட்" (அதிகாரங்களை மாற்றிக் கொடுப்பது) என்ற கேலிக் கூத்து எதற்கு! இதைப் பார்க்கும்போது தலைவருக்குக் கூட்டம் கூட்டும் அதிகாரத்தைத் தவிர வேறு ஒரு அதிகாரமும் இல்லை யென்பது நன்கு விளங்கும். பாவம்! இது ஒன்று மாத்திரம் அதிகாரிகளின் கவனத்திலிருந்து மறைந்து விட்டது போலும்!

இதைத் தவிர, தலைவரையோ அங்கத்தினர்களையோ கேட்காமல் வரி செலுத்தாதவர்கள் மேல் கிரிமினல் நடவடிக்கை எடுக்க நிர்வாக அதிகாரிக்கு அதிகாரம் உண்டு. இதை அவர் பிரயோகிக்கும்போது சம்பந்தப்பட்ட நபர்களால் தாக்கப்படுவது தலைவரும் அங்கத்தினர்களும்தான். நடவடிக்கை எடுக்கப்படுவது நியாயமாக இருக்கலாம். இதில் சம்பந்தமில்லாத அங்கத்தினர்கள் மேல் இந்தக் குற்றச் சாட்டு ஏற்படுவதுதான் சிறிதும் விரும்பத் தக்கதல்ல.

இவ்விதம் மிகவும் அத்தியாவசியமான அதிகாரங்களைக் கொடுக்க மறுக்கும் சர்க்கார், அவசியமில்லாத "கோர்ட்" அதிகாரங்களைப் பஞ்சாயத்துக்கு அளித்திருக்கிறது. நீதி நிர்வாகப் பிரிவினை செய்யப்படும் இந்தச் சந்தர்ப்பத்திலே, நிர்வாகத்தை நடத்த வேண்டிய பஞ்சாயத்துக்கு நீதி வழங்கும் அதிகாரத்தைக் கொடுத்திருப்பது ஆச்சரியமாகத்தான் இருக்கிறது. மக்களுக்குச் சேவை செய்ய வேண்டும், நகரைச் சீர்திருத்தம் செய்ய வேண்டும் எனத் துடிக்கும் மக்கள் பிரதிநிதிகளுக்கு, கோர்ட் வேலைகளும், நிறைவேற்றலுக்கும்கூட தலைவரோ, அங்கத்தினர்களோ தான் போக வேண்டு மென இருப்பது, இவர்களின் அருமையான நேரத்தை வீணாக்குவதோடு, ஆர்வத்தையும் கெடுப்பதாக இருக்கிறது. இந்த அதிகாரம் மாத்திரம் நிர்வாக அதிகாரிக்குச் சம்பந்தமில்லை. ஏனென்றால் இது கேவலம் ஒரு அமீனா செய்யும் வேலைதானே! இந்த வேலைக்கு மக்கள் பிரதிநிதிகள் போதாதா! வழக்கிலே தீர்ப்புக் கூறும் நீதிபதியே அதை நிறைவேற்றவும் சம்பந்தப்பட்டவர்களின் வீடுகளுக்கும் வர வேண்டும். எப்படி இருக்கிறது நீதிபரிபாலனம்! போதாததற்கு கிரிமினல் அதிகாரமும் பஞ்சாயத்துக்குக் கொடுக்கப் போகிறார்களாம்!

நாங்கள் கேட்கிறோம், பஞ்சாயத்துக்கு நீதி பரிபாலன அதிகாரங்கள் அவசியமில்லை, நிர்வாகத்துக்கு அவசியமான அதிகாரங்களை ஒழுங்காகக் கொடுத்தால் போதும் என்று.

இராமேசுவரம் கோடீ ராஜகோபால சாஸ்திரி
12—8—54 (தலைவர், இராமேசுவரம் பஞ்சாயத்து)

# முன்னேற்றத்துக்கு முட்டுக்கட்டை!

எங்களூர் அதிராம்பட்டினம். இது தஞ்சை மாவட்டத்திலுள்ள ஒரு மேஜர் பஞ்சாயத்து. சுமார் 15,000 ஜனத்தொகை கொண்ட இவ்வூரில் 12 அங்கத்தினர்களைக் கொண்ட ஒரு பஞ்சாயத்துச் சபை உண்டு. இச் சபைக்குத் தலைவராக இருப்பவர் ஜனாப் செ. மு. கா. செ. முகம்மது அபுல் ஹசன் மரைக்காயர் என்பவர். இவர் புதிய பஞ்சாயத்து முறைக்கு முன் முப்பத்து மூன்றாண்டுகளாய்ப் பஞ்சாயத்துத் தலைமைப் பதவியிலிருந்து, பின்னர் புதிய பஞ்சாயத்துச் சட்டப்படி வயது வந்தோர் வாக்குரிமை அடிப்படையில் நடந்த தேர்தலிலும் பெரும்பாலான மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்டிருக்கிறார்.

எங்களூரில் புதிய பஞ்சாயத்து அங்கத்தினர்கள் பதவியேற்றுப் பத்து மாதங்கள்தான் ஆகின்றன. இதுவரை எந்தப் புது வரிகளும் விதிக்கப்படவில்லை. காரணம் எந்தப் புது வரியையும் விதிப்பதற்குரிய நிலைமையில் எங்களூர் இல்லாததினால் தான். சென்ற ஆண்டு ஏற்பட்ட புயலில் மிகவும் பாதிக்கப் பட்டது எங்களூர்தான். தென்னை

மரங்கள் அடியோடு சாய்க்கப்பட்டு விட்டபடியினால் தோட்ட முதலாளிகள் வருவாயில்லாமல் பாதிக்கப்பட்டார்கள். அதனால் வயிறு வளர்த்து வந்த தொழிலாளிகளும் அவதிக்குள்ளானார்கள். மேலும் இங்கிருந்து இலங்கைக்குப் பிழைக்கச் சென்ற பெரும்பாலான எங்களூர் வாசிகள் இலங்கை சர்க்காரின் கெடுபிடி சட்டத்தால், தாம் உழைத்துச் சேர்த்த பணத்தைத் தம் மனைவி மக்களுக்கு அனுப்ப இயலாமல் தவிக்கிறார்கள். அதிக அளவு காலத்தையும் பணத்தையும் செலவு செய்து கஷ்டப்பட்ட விவசாயிகள் நெல்லுக்கு நல்ல விலையில்லாமல் தவிக்கிறார்கள். இந்த நிலைமையில், எப்படிப் புதிய வரிகளைச் சுமந்த முடியும்! சர்க்கார் புதிய வரிகளை விதிக்க அதிகாரம் வழங்கியிருக்கிறார்களே தவிரப் புதிய திட்டங்களை நிறைவேற்றவோ, அல்லது பழைய திட்டங்களைப் புதிப்பிக்கவோ நேரடியான அதிகாரங்களைப் பஞ்சாயத்துக்களுக்கு வழங்கவில்லை. எந்த ஒரு திட்டத்தை நிறைவேற்றவேண்டுமாயிருந்தாலும் சர்க்கார் மேலதிகாரிகளின் உத்தரவுக்குத்தான் காத்திருக்க வேண்டியிருக்கிறது.

உதாரணமாக, எங்களூரில் ஒரு சிறிய பாதையைப் புதுப்பிக்க வேண்டுமென்று பஞ்சாயத்துச் சபை தீர்மானித்து இன்றைக்கு மூன்று மாதங்களாகி விட்டன. இப்பொழுதுதான் அதற்குச் சர்க்காரிடமிருந்து மதிப்புப் பட்டியல் (Estimate) போட உத்தரவாகி யிருக்கிறது.

சென்ற 1949-ம் ஆண்டு ஜனவரி மாதம் 20ம் தேதிக்கு முன்னர் எங்களூரில் குடி தண்ணீர் குளத்தில் சுகாதாரக் குறைவு அடிக்கடி ஏற்படுவதால் ஊரில் முக்கியமான ஆறு இடங்களில் போரிங் கிணறுகளை அமைப்பது என்று பஞ்சாயத்துச் சபை தீர்மானித்து அதற்கு உத்தரவு பெற சர்க்காருக்குத் தெரிவித்திருந்தனர். சர்க்கார் அதற்கு ஒரே ஒரு கிணற்றை மாதிரிக்காக ஒரு குறிப்பிட்ட தொகைக்குள் செய்யும்படி உத்தரவு பிறப்பித்தது. கிணறு தோண்டும் வேலையை மேற் குறிப்பிட்ட தேதியில் பஞ்சாயத்துச் சபை செய்யத் தொடங்கியது. குறிப்பிட்ட தொகைக்குள் செலவு செய்ததில் கிணற்றில் நல்ல தண்ணீர் கிடைக்கவில்லை. அதற்கும் அதிகம் செலவு செய்தால் நல்ல தண்ணீர் கிடைக்கும் என்று கருதித் திருத்த மதிப்புப் பட்டியல் போடச் சர்க்காரைக் கேட்டிருந்தனர். சீக்கிரமாக ஒன்றரை வருடத்துக்குப் பின் திருத்த மதிப்புப் பட்டியல் போட்டு அதற்கு உத்தரவு கிடைத்தது. இப்பொழுது குடிப்பதற்குரிய தண்ணீரும் வந்து விட்டது. பின்னர், புதிய பஞ்சாயத்து ஏற்பட்ட பின் கிணற்றைச் சுற்றிக் கட்டிடம் கட்ட வேண்டுமென்று பஞ்சாயத்து கருதி அவசர அவசரமாகக் கோரிக்கை படலத்தைக் கிளப்பியது. அதற்கும் சில மாதங்கள் கழித்து உத்தரவு அனுப்பியது. கட்டிடம் கட்டி அதற்கு மூடு விழா நடந்து இன்றைக்குச் சுமார் ஆறு மாதங்களாகி விட்டன. இன்னும் அதற்கு ஒன்றரை வருடமாகத் தாலுக்கா ஆபீஸில் தவம் புரியும் மின்சார பம்புகளைக் கொண்டு வந்து பொருத்திப் பொது மக்களின் உபயோகத்துக்கு விட சர்க்கார் கருணை காட்டவில்லை.

1949ம் வருடம் ஜனவரி மாதம் ஆரம்பித்த இந்த அவசரத் திட்டம் 1954ம் வருடம் ஜூலை மாதம் வரை முடியாமலிருக்கிறது என்றால் சர்க்காரைப் பற்றி நாம் என்ன நினைப்பது! ஒரு மாதிரிக் கிணற்றுக்கே இந்தக் கதியென்றால் மற்றும் ஐந்து கிணறுகள் எந்த நூற்றாண்டில் முடியுமோ தெரியாது.

எங்களூரில் புதிய பஞ்சாயத்து ஏற்பட்டதும் வெகுகாலமாய் இல்லாத வாரச் சந்தை, பஸ் தங்குமிடம், வெளியூர்களிலிருந்து வரும் வண்டிகள் தங்க வண்டிப் பேட்டை இவை மூன்றையும் அமைக்கப் பஞ்சாயத்து தீர்மானித்துச் சர்க்காருக்கு எழுதியது. சர்க்கார் அதற்கு உடனடியாக அனுமதி அளித்து விட்டது. ஆனாலும் பஞ்சாயத்து அவைகளுக்குத் தகுந்த இடங்களைக் குறிப்பிட்டு அந்த நிலங்களை ஆர்ஜிதம் செய்து தரும்படி சர்க்காரை சென்ற 1953 செப்டம்பரில் கோரிக்கை அனுப்பியதற்குச் சர்க்கார் இன்னும் நடவடிக்கைகள் எடுத்துக் கொள்ளவில்லை. இவை மூன்றும் செயலளவில் நிறைவேற்றி விட்டால் அதுவே புதிய பஞ்சாயத்து முறையில் எங்களுக்கு ஏற்பட்ட பெரிய முன்னேற்றமாகும்.

மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட பஞ்சாயத்துத் தலைவருள்ள சபையில் பெரும்பாலும் அனுபவமற்றவரும் மக்கள் நலமறியாதவருமான நிர்வாக அதிகாரி ஒருவரைச் சர்க்கார் நியமிப்பது நல்லதல்ல. பத்தாயிரம் வாக்காளர்கள் தேர்ந்தெடுக்கப் பட்ட ஜனப்பிரதிநிதியைச் சர்க்கார் ரூபாய் 50-க்குக்கூட நம்புவதில்லை. ஆனால் ரூ. 75 சம்பளம் வாங்கும் ஒரு நிர்வாக அதிகாரியை ஆயிரக்கணக்கான ரூபாய்களுக்குச் சர்க்கார் நம்புகிறது.



எங்களூர்ப் பஞ்சாயத்தில் ஐந்து மாதங்களுக்கு முன் ஒரு நிர்வாக அதிகாரி இருந்தார். அது சமயத்தில் ஒரு முக்கியமான பாதையைப் புதுப்பிக்க வேண்டியிருந்தது. அதைப் புதுப்பிக்கும் படியும் சர்க்கார் உத்தரவு பிறப்பித்திருந்தது. அந்த நிர்வாக அதிகாரி அதைத் தமக்குப் பழக்கமான கண்டிராக்டரிடம் அதிகபட்ச மதிப்புக்குக் கண்டிராக்ட் கொடுத்து விட்டார். கண்டிராக்ட் எடுத்தவர் ரோட்டுக்குக் கப்பி போடுவதற்குப் பதிலாகச் செம்மண்ணைக் கொண்டு வந்து போட்டு விட்டார். உண்மையான ஊழல் நடப்புகளையும் விசாரித்தறிந்த பஞ்சாயத்தார் சர்க்கார் மேலிடத்துக்குப் புகார் செய்தனர். சர்க்கார் உடனே அந்த அதிகாரியை வேறொரு ஊருக்கு மாற்றி விட்டார்களே தவிர, எந்தவித நடவடிக்கைகளையும் மேற்கொள்ளவில்லை. பாதையும் இது வரை புதுப்பிக்கப்படாமலே இருக்கிறது.

பஞ்சாயத்துக்களுக்கும் பஞ்சாயத்துத் தலைவர்களுக்கும் இப்பொழுது அளித்திருக்கும் அதிகாரங்களைவிட அதிகமான அதிகாரங்களை அளிக்கலாம். அதாவது அந்தந்த ஊரிலேயே உற்பத்தியாகி வெளியூர்களுக்கு அல்லது வெளி ஜில்லாக்களுக்கு விற்பனைக்குப் போகும் முக்கிய பொருள்கள் மீது வரி விதிக்க அதிகாரம் அளிப்பது. உதாரணமாக எங்களூர் மாகாணத்திலேயே பெயர் பெற்ற உப்பளம் உள்ள ஊர். இங்கு உற்பத்தியாகும் உப்பு வாரத்துக்குப் பல

ஆயிரம் மூட்டைகளாக நாட்டின் பல்வேறு பகுதிகளுக்கும் செல்கிறது. இவற்றைக் குறைந்த பட்சம் மூட்டைக்கு இத்தனை பைசா என்று வரி விதிக்கலாம்.

மேலும் ஒரு புதிய ரோடு போடவோ, ஒரு வாரச் சந்தை அமைக்கவோ, பஸ் தங்குமிடம் அமைக்கவோ, தேவைப்படும் நிலங்களை முதலில் பஞ்சாயத்தார்களே ஆர்ஜிதம் செய்து கொள்ளப் பஞ்சாயத்தார்களுக்கு அதிகாரம் வழங்கலாம். பின்னர் அந்த நிலங்களுக்கு நஷ்டஈடு கொடுக்கச் சர்க்கார் முன் வரலாம். இப்பொழுது பஞ்சாயத்துகளில் நூல் நிலைய வரி என்ற வரியை வசூலித்துச் சர்க்காரே எடுத்துக் கொள்கிறார்கள் அல்லவா! அதைக் கிராமப் பஞ்சாயத்துகளுக்குக் கொடுத்துக் கிராமங்களில் புதிய நூல் நிலையங்கள் ஆரம்பிக்கவோ, அல்லது பழைய நூல் நிலையங்களை அபிவிருத்தி செய்யவோ பயன்படுத்திக் கொள்ளலாம்.

பஞ்சாயத்துகளுக்கு வருமானத்தைப் பெருக்கிக் கொடுப்பதாலும், அந்தந்த ஊர்களில் வசூலாகும் பணத்தைக் கொண்டு பொதுமக்களின் நன்மைக்கான செலவுகளைப் பஞ்சாயத்தாரே செய்வதற்குத் தாரான உரிமை அளிப்பதாலும்தான் கிராமப் பஞ்சாயத்துகளில் உண்மையான தீவிர முன்னேற்றம் காண முடியும்.

அதிராம்பட்டினம்
12-8-54 — ஏ. எஸ். சலாஹுத்தீன்

# மகாசமுத்திரம் மறைந்தது

வடமொழி இலக்கியத்தில் மகா சமுத்திரம் போல் விளங்கி வந்த சாஸ்திர ரத்னாகர பிரம்மஸ்ரீ தேதியூர் சுப்பிரமணிய சாஸ்திரிகள் ஆகஸ்டு மாதம் 12-ந் தேதி பரமபதம் சேர்ந்தார் என்ற செய்தி கேட்டுத் திடுக்கிடாதவர்கள் இருக்க முடியாது. முடிகொண்டான் ஸ்ரீ கிருஷ்ண தீட்சதரின் ஏக புத்திரரான ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள், வேதங்களிலும் சாஸ்திரங்களிலும் பரம்பரையாக மூழ்கித் திளைத்த மேதாவிகளின் குடும்பத்தில் ஜனித்தவர். ஸ்ரீ சாஸ்திரிகள் சிறு வயதிலேயே சாம வேத அத்யயனத்தைப் பூர்த்தி செய்தார். பிறகு பண்டைய காலத்து குரு—சிஷ்ய முறையில் பயின்று, நியாயம், வேதாந்தம் இரண்டு சாஸ்திரங்களிலும் அபார தேர்ச்சி பெற்றார். அவர் இளம் வயதிலேயே தேதியூரில் வேத, வேதாந்த பாடசாலைகளை அமைத்துக் கீர்த்தி பெற்றார். மதுரையில் அத்வைத சபையை ஸ்தாபித்து, வேதாந்த வகுப்புகளைத் திறம்பட நடத்தி வந்தார். அத்வைத தத்துவத்தைப் பிரசாரம் செய்வதையே தமது வாழ்க்கையின் லட்சியமாகக் கொண்ட ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் வருஷந்தோறும் சங்கர ஜெயந்தி விழாவை நடத்தி ஆதி சங்கரரின் வாழ்க்கை வரலாற்றையும் அந்த அவதார புருஷரின் அரிய தத்துவ உபதேசங்களையும் எல்லோரும் அறிந்து கொள்ளும்படி செய்தார்.



1920-ம் ஆண்டில் நடந்த வித்வத் மகாசபையில் ஸ்ரீ சாஸ்திரிகளின் இணையற்ற மேதையைப் பாராட்டி தர்பங்கா மகாராஜா அவருக்கு சாஸ்திர ரத்னம் என்ற பட்டம் அளித்தார். சிருங்கேரி மடத்தைச் சேர்ந்த ஸ்ரீ சந்திரசேகர பாரதி சுவாமிகள் ஒரு சமயம் மதுரைக்கு விஜயம் செய்த போது ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளின் வேத சாஸ்திர ஞானத்தைப் போற்றி அவருக்கு வேத மூர்த்தி என்ற பட்டம் சூட்டினார். ஸ்ரீ காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரிய சுவாமிகள் ஸ்ரீ சாஸ்திரிகளுக்கு சாஸ்திர ரத்னாகரம் என்று பட்டம் அளித்து அவரைப் பெருமைப்படுத்தினார்.

ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் சாஸ்திரங்களின் தத்துவத்தைப் பற்றி மகாத்மா காந்தியுடன் வாதித்தது உண்டு. பண்டித மதன் மோஹன் மாளவியா மதுரைக்கு விஜயம்செய்தபோது, தேதியூர் ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகளின் ஜாகைக்கு நேரில் சென்று அவருடன் ஹிந்து தர்மத்தைப் பற்றி வெகு நேரம் சம்பாஷித்துக் கொண்டிருந்தார்.

ஸ்ரீ சாஸ்திரிகள் "ஸன் மார்க்கப் பிரதர்சினி" என்ற பத்திரிகையை ஆரம்பித்து அதன் மூலம் ஹிந்து தர்மத்தையும் அத்வைத தத்துவத்தையும் பிரசாரம் செய்யும் அரிய தொண்டில் ஈடுபட்டு வந்தார். ஸௌந்தர்ய லஹரி, வால்மீகி ராமாயணம் போன்ற பல உயர்ந்த நூல்களுக்கு அவர் எழுதியுள்ள அபூர்வமான வியாக்கியானங்களும், மயிலாப்பூரில் உள்ள குருகுலத்தில் அவர் ஸ்தாபித்துள்ள சங்கர ஆலயமும் என்றென்றும் அவரது புனித ஞாபகச் சின்னங்களாக இருந்து வரும் என்பதில் சந்தேகம் இல்லை. ஸ்ரீ சாஸ்திரிகள் தமக்குரிய தனிப் பாணியில் கதாப் பிரசங்கம் செய்வதைக் கேட்டவர்களும் அவரது மேதையை அறிந்தவர்களும் அந்த மகானை எக்காலத்திலும் மறக்க முடியாது.

ஸ்ரீ சுப்பிரமணிய சாஸ்திரிகள் தேவி உபாசகர், வேத விற்பன்னர், சாஸ்திர நிபுணர், தத்துவ ஞானி, சிறந்த வியாக்கியான கர்த்தா, உவமையற்ற வாக் விலாசம் படைத்தவர். அவரது மறைவினால் ஹிந்து தர்மம் மாபெரும் தொண்டரை இழந்து விட்டது. அவரது வயோதிக மனைவிக்கும், புதல்வர்-புதல்விகளுக்கும் நமது அனுதாபத்தைத் தெரிவித்துக் கொள்கிறோம்.

# கணக்கற்ற ஜனங்கள்
# தினப்படி விரும்புவது
# ப்ருக் பாண்ட் தேயிலை




அதற்குக் காரணம் தோட்டத்திலிருந்து கடைகளுக்கு அதிவேகமாக அனுப்பப்படும் ப்ருக் பாண்ட் தேயிலை நித்தமும் புத்தம் புதியதாக இருக்கிறது. மேலும் காற்று உட்புகாது பாக் செய்யும் முறை தேயிலையை மாசு மருவற்று, கலப்பற்று, களங்கமற்று விளங்கச் செய்கிறது.




## மற்றெந்த தேயிலையையும் விட
## ப்ருக் பாண்ட் தேயிலையையே
## அதிகப்படியான ஜனங்கள் வாங்குகிறார்கள்!

BB 59 D

# சக்கரவர்த்தித் திருமகன்

## 21. மனைவியா பிசாசா?

"இது தூக்கத்தில் காணும் துர்ச் சொப்பனமா? நான் விழித்திருக்கிறேனா, இல்லை, தூங்குகிறேனா? ஏதாவது சித்தப் பிரமை வியாதி என்னைப் பீடிக்கிறதா? மூன் ஜன்ம பாபங்களின் நினைவு வந்து அதை இப்போது நிகழும் உண்மைபோல் காண்கிறேனா? ஏதாவது கிரக பீடையா? பைத்தியம் பிடித்து ஏதோ நடவாததை நடக்கிறதாகக் காண்கிறேனா, ஒன்றும் விளங்க வில்லையே!" என்று தசரதன் சித்தம் கலங்கி மனதில் உண்டான பயத்தைத் தாங்க முடியாமல் தவித்துத் தவித்துப் பிரக்ஞை இழந்தான். கொஞ்சம் நேரம் கழித்துக் கண்ணைத் திறந்து புலியைக் கண்ட மானைப்போல் கைகேயியைப் பார்த்து நடுங்கினான். "ஐயோ!" என்று தரையில் உட்கார்ந்து கதறினான். மந்திர வாதியால் பீடிக்கப்படும் பாம்பைப்போல் ஆடினான். மறுபடி மூர்ச்சையடைந்து விட்டான். பிறகு வெகுநேரம் கழித்து நினைவு அடைந்து கண்களினின்று நெருப்புப் பொறிகள் பறக்க,

"ஏ கொடிய அரக்கியே! குலத்தைக் கெடுக்க வந்த பாவியே! உனக்கு என்ன தீங்கு செய்தான் ராமன்! பெற்ற தாயைப்போல உன்னைப் பாவித்து வந்தானே! உன்னை நான் ஒரு பெண் என்று எண்ணினேனே! கொல்லும் விஷப் பாம்பு என்பதைத் தெரியாமல் உன்னை எங்கிருந்தோ கொண்டு வந்து மடியில் வைத்துக் கொண்டேனே!" என்றான்.

கைகேயி ஒன்றும் பேச வில்லை. "நாடெல்லாம் புகழும் ராமனை என்ன குற்றம் சொல்லி நான் தள்ளுவேன்? கௌசலையைத் தள்ளி விட்டுப் பிழைக்கலாம். தருமசொரூபி சுமித்திரையையும் இழந்து பிழைப்பேன். ராமனை இழந்தால் பிறகு என் உயிர் நிற்காது. ஜலமில்லாமல் பிழைப்பேன், சூரிய ஒளியில்லாமல் சமாளிப்பேன். ராமனை விட்டு விட்டு உயிரை வைத்திருக்க என்னால் முடியாது. இந்த மகா பாப எண்ணத்தை மனத்தினின்று விலக்கித் தள்ளு. உன் பாதத்தில் என் தலையை வைத்து வருந்தி வேண்டிக் கொள்ளுகிறேன். எவ்வளவு தடவை நீயே சொல்லியிருக்கிறாய்: 'எனக்கு இரண்டு அருமைக் குழந்தைகள்; அதில் மூத்தவன் ராமன் தான் எனக்கு அதிகப் பிரியமானவன்' இவ்வாறு பல தடவை நீ சொல்லியிருக்கிறாயே? நீ எப்போதும் நினைத்து வந்ததை இப்போது நான் காரியத்தில் நிறைவேற்றினேனே யன்றி வேறில்லை. அப்படியிருக்க, ஏன் இம்மாதிரி கொடிய வரத்தைக் கேட்கிறாய்? இல்லை, இல்லை, என்னைப் பரீட்சை செய்கிறாய்! பரதன் மேல் எனக்குப் பிரியம் உண்டா என்பதைக் காண இப்படிச் செய்கிறாயா? பெரும் புகழ் பெற்ற குலத்தைப் பாபச் செயலில் அழித்து விடாதே" என்றான். அப்போதும் கைகேயி ஒன்றும் பேச வில்லை. கோபப் பார்வை பார்த்தாள்.

"இது வரையில் எனக்கு வருத்தம் தரக் கூடிய காரியம் ஏதும் நீ செய்ததில்லை. பொருத்த மில்லாத பேச்சும் பேசியதில்லை. இப்போது யார் உன்

புத்தியைக் கெடுத்தது? இது உன் செயல் அல்ல, நான் நம்ப மாட்டேன். என் காதலியே, எத்தனை தடவை நீ என்னிடம் சந்தோஷமாகச் சொல்லியிருக்கிறாய்? 'பரதன் மிகப் பெருந்தன்மையான பிள்ளை; சந்தேகமில்லை. ஆனால் ராமனுக்குச் சமானமாக மாட்டான் பரதன்' என்று மகிழ்ந்து மகிழ்ந்து சொல்லுவாயே! அந்த ராமனையா நீ இப்போது கூசாமல் காட்டுக்கு அனுப்பு என்கிறாய்? அவனால் காட்டில் இருக்க முடியுமா? இதையா நீ விரும்புகிறாய்? மிருகங்கள் நிறைந்த பயங்கரமான காட்டுக்கு நம்முடைய ராமனை அனுப்பச் சொல்லுகிறாயா? அவன் எவ்வளவு அன்பு செலுத்தி உனக்குச் சேவை செய்திருக்கிறான்? அதை மறந்து விட்டு எப்படி உனக்கு மனம் வந்தது, அவனைக் காட்டுக்கு அனுப்பு என்று வாயால் சொல்ல? அவன் என்ன தவறு செய்தான்? இந்த அரண்மனையில் நூற்றுக் கணக்கான ஸ்திரீகள் இருக்கிறார்கள். யாராவது ராமனைப் பற்றி ஒரு வார்த்தை, ஒரு அபவாதம், ஒரு குற்றம் சொல்லியதுண்டா? உலகமெல்லாம் அவனை விரும்புகிறதே? எல்லாருடைய அன்பையும் தன்னுடைய குணத்தாலும் சீலத்தாலும் சம்பாதித்திருக்கிறானே? உனக்கு ஏன் வந்தது அவன்மேல் இப்போது வெறுப்பு? இந்திராதி தேவர்களுக்குச் சமானமாக இருக்கிறானே என் மூத்த மகன்? தவம் செய்யும் ரிஷிகளுடைய முக தேஜஸை அடைந்திருக்கிறானே? ராமனுடைய சத்தியம், சீலம், சிநேகம், அறிவு, படிப்பு, வீரம், பெரியோர்களிடம் அடக்கம் இவற்றை எல்லாரும் பாராட்டுகிறார்களே! அவன் வாயில் ஒரு கடினமான வார்த்தை வந்ததை நான் பார்த்ததில்லையே. அவனை எப்படி 'நீ காட்டுக்குப் போ' என்று தந்தையான நான் சொல்லுவேன்? இது சாத்தியமா? நான் கிழவன். எனது அந்திய காலத்தில் என்னிடத்தில் இரக்கம் காட்டு. கைகேயி! இந்த ராஜ்யத்தில் உள்ள செல்வத்தில் எதை வேணுமானாலும் கேள், எல்லாவற்றையும் கேள், உனக்குத் தருவேன். என்னை யமனிடம் அனுப்பாதே! கை கூப்பித் தொழுகிறேன். உன் இரு பாதங்களையும் பிடித்து வேண்டிக் கொள்ளுகிறேன். சரணம், சரணம்! ராமனைக் காப்பாற்றுவாயாக. என்னை அதர்மத்தைச் செய்யச் சொல்லாதே!" என்றான்.

இப்படிச் சோகக் கடலில் விழுந்து மூழ்கித் தவித்துக் கொண்டு கரையேற வகை தெரியாமல் அடிக்கடி நினைவு இழந்தும், கண்ணீர் விட்டு அலறியும், வேதனைப்பட்டுக் கொண்டிருந்த மகாராஜனைப் பார்த்து, கைகேயி சிறிதும் இரக்கமின்றிக் கொடிய மொழிகளைப் பேசினாள்.

"அரசனே! வரங்கள் இரண்டு கொடுத்துவிட்டுப் பிறகு கொடுத்தேனே என்று வருத்தப்பட்டுப் புறக்கணித்தீரானால் அரசனாகிய உமக்கு எப்படி வாய் எழும், சத்தியம் என்றாவது, தருமம் என்றாவது பேச? மற்ற அரசர்களிடம் என்ன சொல்லுவீர்? 'ஆம்! என்னைக் காப்பாற்றி எனக்கு உயிர் தந்த கைகேயிக்கு வாக்குத் தந்தேன். பிறகு எனக்கு அது பிடிக்கவில்லை. கொடுத்த வாக்கைப் பொய்யாக்கினேன்' என்று வெட்கமில்லாமல் சொல்வீரா? வேறென்ன சொல்லுவீர்? ராஜ குலத்துக்கே அபவாதம் சம்பாதித்துக் கொடுக்கிறீர். 'அரசர்கள் மனைவிகளுக்குக் கொடுத்த வாக்கைப் பொய்யாக்குவார்கள், சொன்னதைச் செய்ய மாட்டார்கள்' என்கிற அபவாதத்தை உம்மால் அரச குலம் அடையும். சைப்யன் ஒரு பட்சிக்குக் கொடுத்த வாக்கைக் காப்பாற்ற, தன் உடலிலிருந்து மாமிசத்தை அறுத்தெடுத்துத் தந்தான் என்பது உமக்குத் தெரியாதா? அலர்க்கன் தன் கண்ணைப் பறித்துத் தந்து சத்தியம் காத்து உத்தம கதியடைந்தான் என்று நீர் கேட்டதில்லையா? சமுத்திரமானது ஒப்பந்தம் செய்து கொண்டபின் அந்த ஒப்பந்தத்தை மதித்து, கரையை மீறாது நிற்கிறது. செய்த பிரதிக்ஞையைப் பொய்யாக்காதீர். நல்ல குலத்தைச் சேர்ந்தவர் நீர். முன்னோர் வழியில் நடப்பீராக. இல்லை, இல்லை,! நீர் தருமத்தை விட்டு விட்டு ராமனுக்குப் பட்டமளித்து கௌசல்யையுடன் போகித்து சுகமாக வாழ்வீர். உமக்குச் சத்தியம் எங்கே போனால் என்ன? தருமம் எங்கே போனால் என்ன? எனக்குச் சபதம் செய்து தந்த வரங்களைப் புறக்கணித்தீரானால் உம்மெதிரில் இன்றே விஷம் குடித்து இறப்பேன். ராமனுக்கு நீர்

ராஜாஜி

பட்டாபிஷேகம் செய்வீர், அன்றே நான் சத்தியம் தவறிய உம் எதிரில் உயிர் விடுவேன், நிச்சயம். நான் பரதன்மேல் ஆணையிட்டுச் சொல்லுகிறேன். வாக்குத் தந்தபடி ராமனைக் காட்டுக்கு அனுப்பி னீரானால் சரி. இல்லையேல் உயிரை விடு வேன்" என்று கைகேயி உறுதியாகச் சொல்லி விட்டுப் பேச்சை நிறுத்தினாள்.

இரக்கமற்ற மனைவியின் முகத்தைக் கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டு தசரதன் பேச்சில்லாமல் நின்றான். இவள் கைகேயியா அல்லது பிசாசா என்று சந்தேகப்பட்டுப் பார்த்தான். பிறகு கோடாலியால் வெட்டப்பட்ட பெரிய மரத்தைப் போல் கீழே விழுந்தான்.

கொஞ்ச நேரம் கழித்து நினைவு வந்து. தீன சுரத்தில் மெதுவாகப் பேசி னான்: "யார் உனக்கு இந்த உபதேசம் செய்து உன் புத்தியைக் கெடுத்தது, கைகேயி? நான் செத்தேன். குலமும் அழிந்தது. எந்தப் பிசாசு உன்னைப் பிடித்துக் கொண்டு இப்படி வெட்க மிழந்து உன்னை ஆடச் செய்கிறது? நீ என்ன நினைக்கிறாய்? என் மகன் பரதன் அண்ணன் ராமனைக் காட்டுக்கு அனுப்பி விட்டுத் தான் அரசனாக இருக்க ஒப்புவானா? ஒரு நாளும் ஒப்ப மாட்டான். இதை நீ அறியாயா? ராமனை வனவாசம் போ என்று நான் சொல்லவாவது! இது நடக்கக் கூடிய பேச்சா? உலகத்திலுள்ள அரசர்கள் என்னை இகழ மாட்டார்களா? 'மனைவி யினுடைய நிர்ப்பந்தத்தால் இந்தக் கிழவ னாகிய மூடன், தன் மூத்த குமாரனும் உத்தம புருஷனுமான ராமனை அவனுக் குரிய ராஜ்யத்திலிருந்து துரத்தி விட் டான்' என்று சொல்லிச் சிரிப்பார்கள் என்பது உனக்கு விளங்க வில்லையா? ராமனைக் காட்டுக்கு அனுப்பு என்று சுலபமாகச் சொல்லுகிறாய். கௌசல்யை உயிர் விட மாட்டாளா? நான்தான் உயிர் வைத்திருப்பேனா? ஜனகருடைய மகளைப் பற்றி யோசித்தாயா? ராமன் தண்டகாரண்யம் போக வேண்டும் என்ற சொல்லைக் கேட்ட மாத்திரத் தில் அவள் உயிர் நீப்பாளே? உன்னை ஒரு ஸ்திரீ என்று நம்பி மனைவி யாகக் கொண்டேன். உன் ரூபத்தைக் கண்டு மோசம் போனேன். மதியிழந் தவன் விஷம் கலந்த தேனைக் குடிப்பது போல் உன் அழகைக் கண்டு மயங்கி உன்னைக் கட்டிக் கொண்டேன். வேட னுடைய பாட்டைக் கேட்டு மான் வலையில் சிக்குவதுபோல் உன் வலையில் சிக்கிப் போய் மாள்கிறேன். உலகம் என்னைச் சீ என்று வெறுத்து என்னை விட்டுத் தூர விலகும். கள் குடித்த பிராமணனைத் தெருவில் எல்லாரும் வெறுப்பதுபோல என்னை எல்லாரும் வெறுப்பார்கள். ஆஹா! என்ன வரத் தைக் கேட்டாய்? குலம் அழிந்து போகப் போகிறது. ஒரு பெண்ணின் வசம் சிக்கித் தன் அன்புக்குரிய குமாரனைக் காட்டுக்கு அனுப்பிய மூடன் என்கிற இகழ் என்றென்றைக்கும் என்னைப் பற்றிக் கொண்டு நிற்கும். நீ வனம் செல்லவேண்டும் என்று நான் ராமனுக் குச் சொன்னேனானால் மறு பேச்சுப் பேச மாட்டான். போகிறேன் என்று உடனே சந்தோஷமாகப் போய் விடு வான். ஆமாம், ராமன் காட்டுக்குப்போய் விடுவான். நானும் எனக்குப் பின் கௌசல்யையும் சுமித்திரையும் உயிர் நீப்போம். இப்படிச் சம்பாதித்த ராஜ் யத்தை நீ சுகமாக அனுபவிப்பாய். பாவி, மூடப் பெண்ணே!

"பரதன் இதற்கெல்லாம் சம்மதிப் பானா? அவனும் இதற்குச் சம்மதித் தவனானால் அவன் எனக்கு உத்தரகிரி யையும் செய்ய வேண்டியதில்லை. வெட்க மற்ற ஸ்திரீயே, என் சத்துருவே, புருஷனை யிழந்து விதவையாகி உன் மகனுடன் ராஜ்யத்தைச் சந்தோஷமாக அனுபவிப்பாயாக.

"ஹா! ராமனைக் காட்டுக்கு அனுப்ப வேண்டுமா! ஆஹா! ஸ்திரீகளுடைய சுபாவம் எவ்வளவு பாப சுபாவம்! எவ்வளவு கொடியவர்கள்! இல்லை யில்லை. இவள்தான் கொடியவள். மற்ற வர்களை ஏன் நான் நிந்திக்க வேண்டும்? பரதன் தனக்குத் தாயாக இவளைப் பெற்றானே! ஒரு நாளும் என்னால் இது செய்ய முடியாது. கைகேயி! உன் காலைப் பிடித்துக் கேட்டுக் கொள்ளுகி றேன். கொஞ்சம் இரக்கம் காட்டு" என்று கதறிக் கொண்டு தசரதன் கீழே தரையில் புரண்டான்.

** ** **

மகாராஜாவாகப் பல்லாண்டுகள் ராஜ்யபரிபாலனம் செய்து பெரும்கீர்த்தி யைப் பெற்ற தசரத சக்கரவர்த்தியான வன் பூமியில் புரண்டு அழுதுகொண்டு மனைவியின் பாதங்களைப் பிடித்து இறைஞ்சும் நிலையை என்னென்று சொல்வது! சம்பாதித்த புண்ணியம் தீர்ந்ததும் யயாதி சுவர்க்கத்தி லிருந்து

அப்புறப் படுத்தப் பட்டுப் பூமியில் விழுந்த காட்சியாக இருந்தது.

மகாராஜன் எவ்வளவு வணங்கி எவ்வளவு தீனமாகக் கேட்டுக் கொண்டும் கைகேயி பிடிவாதமாக, "நீர் சத்யசந்தர், சொன்ன சொல் தவறாதவர் என்று இவ்வளவு நாள் எல்லாரிடமும் பறை சாற்றி வந்தீர். தெய்வங்கள் சாட்சியாக எனக்கு வரம் தந்து விட்டு அதைப் புறக்கணிக்கப் பார்க்கிறீர். நீர் வார்த்தை தவறினால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன், அது நிச்சயம்" என்று முடிவாகச் சொல்லி விட்டாள்.

"அப்படியானால் பாவி, ராமன் வனம் போவான். நான் சாவேன். நீ எனக்கும் என் குலத்துக்கும் பகையாகி உன் விருப்பத்தை யடைந்து என்ன சுகமடைய வேண்டுமோ அதை அடைவாயாக!" என்றான் தசரதன்.

மறுபடியும் "ராமனைக் காட்டுக்கு அனுப்பி நீ என்ன பிரயோஜனத்தைப் பெறுவாய் என்பதை நான் அறியவில்லை. உலகம் முழுதும் உன்னை இகழ்வதைத் தவிர, வேறொரு பிரயோஜனமும் நீ அடையப் போவதில்லை. புத்திரப் பேறு இல்லாது பல்லாண்டு வருந்தி, பிறகு ஆண்டவன் அருளால் ராமனை அடைந்தேன். அவனை இப்போது காட்டுக்கு அனுப்புகிறேன். ஆஹா! என்ன பாக்கியத்தைப் பெற்றேன்!" என்று கிழ அரசன் அழுதான்.

பிறகு அவன் ஆகாயத்தை நோக்கி, "ஹா, நிசியே, நீ தீர்ந்து பொழுது விடிந்து விட்டால் நான் என்ன செய்வேன்? பட்டாபிஷேகத்தை எதிர் பார்த்திருப்பவர்களுக்கு என்ன சொல்லுவேன்? ஆகாயமே! நட்சத்திரங்களுடன் எனக்காக அப்படியே நிற்பாய்! ஐயோ! வேண்டாம், அப்படியானால் இந்தப் பாவியின் முகத்தில் விழித்துக் கொண்டே இருக்க வேண்டிய தாகும்! சீக்கிரம் தீர்ந்து போவாய் நிசியே, விடிந்தால் இவள் முகத்தைப் பார்க்காம லிருக்கலாம்" என்று இவ்வாறு பேசிக் கொண்டு உன்மத்த நிலையும் மூர்ச்சையுமாக மாறி மாறி வேதனைப் பட்டான் அப்பாவி தசரதன். அறுபதினாயிரம் ஆண்டுகள் ஆண்டு முதுமை யடைந்த பேரரசன்.

"என் மேல் இரக்கம் கொள்வாய், கைகேயி! நான் கோபம் கொண்டு சொன்னதை யெல்லாம் மறந்து விடு. உனக்கு என் பேரிலிருந்த அன்பை வைத்துக்கேட்டுக் கொள்ளுகிறேன். ராஜ்யம் உனக்குத் தந்தேன் என்றே வைத்துக் கொண்டு ராமனுக்கு அதை நீ உன் னுடையதாக உன்னுடைய கையால் கொடுத்து நானே நடக்க வேண்டிய பட்டாபிஷேகம் நடைபெறச் செய். நானே ராமனுக்குப் பட்டாபிஷேகமென்று ராஜ சபையில் தீர்மானித்துப் பெரியோர்களுக்கும் ராமனுக்கும் நான் சொன்னதைப் பொய்யாக்க வேண்டாம். என் மேல் இரக்கம் கொள். ராமனுக்கு நீயாகக் கொடு ராஜ்யத்தை. உலகமுள்ள வரையில் நிற்கும் பெருங் கீர்த்தியை அடைவாய். என் விருப்பம், ஜனங்களின் விருப்பம், பெரியோர்களின் விருப்பம், பரதன் விருப்பம் எல்லாமும் இதுவே யாகும். இதைச் செய்வாய் என் உயிரே, என் காதலியே!" என்று மறுபடியும் அரசன் கொடிய கைகேயியைக் காலைப் பிடித்து வேண்டிக் கொண்டான்.

"முடியாது! கொடுத்த வரத்தைப் பொய்யாக்காதீர். சத்தியம் சத்தியம் என்று பேசிக்கொண்டிருந்து, ஏன் இப்போது அசத்தியத்தில் புகப் பார்க்கிறீர்? அப்படிச் செய்தீரானால் என் உயிரை மாய்த்துக் கொள்வேன், அறிவீர். வீண் கால தாமதம் வேண்டாம்" என்றாள் கைகேயி.

** ** **

"மந்திரத்துடன் கையைப் பிடித்து, தீயின் முன் உன்னைக் கொண்டேன். இப்பொழுது உன்னை நீக்கினேன். எனக்கும் உனக்கும் பிறந்த மகனையும் நீக்கி விட்டேன். இரவு தீர்ந்து, பொழுது விடியப் போகிறது. பட்டாபிஷேகம் இல்லை. ராமன் எனக்கு உத்தரக் கிரியை செய்வான்" என்றான் அரசன்.

"வீணாகப் பிதற்றிக் கொண்டிருக்கிறீர். ராமனுக்குச் சொல்லி யனுப்பி, அவனை இங்கே உடனே வரவழைக்கவும். பரதனுக்கே ராஜ்யம் என்று சொல்லி அவனை வனத்துக்கு அனுப்பிச் சத்தியத்தைக் காப்பாற்றவும். தாமதம் செய்ய வேண்டாம்" என்றாள் கைகேயி.

"அப்படியா?" என்றான் அரசன்.

"சரி, என் மகன் முகத்தையாவது பார்ப்பேன். நான் இறப்பது நிச்சயம். உடனே அவனை வரச்சொல். இறப்பதற்கு முன் அவன் முகத்தையாவது பார்ப்பேன். சத்தியம் என்கிற கயிற்றினால் கட்டப்பட்டு இந்த மூடக் கிழவனால் ஒன்றும் செய்ய முடியவில்லை" என்று தீன சுவரத்தில் சொல்லிவிட்டு மறுபடியும் நினைவு இழந்தான்.

# சிங்கச் சிலை

குண்டுமணி

## 4. பிரிந்தவர் கூடினர்!

புலிக்காட்டு ராஜகுமாரி தன் தாயைப் பலமாகத் தாக்குவதைக் கண்டு வெகுண்ட சிங்கக் குட்டி அதன் மீது தன் கையிலிருந்த மந்திரக் கோலை வீசி யெறிந்தது. அதன் குறி தப்பவில்லை.

புலிக்காட்டு ராஜகுமாரி மந்திரக்கோலின் மகிமையினால் சிங்கச் சிலையாகி விட்டது.

கருங்காட்டு ராணி தன் குட்டியின் வீரத்தை மெச்சிக் கட்டிக் கொண்டது.

"இப்பொழுது தான் எனக்கு உயிர் வந்தது. பகைமையினால் துரோகம் விளைவித்த என்னுடைய தோழி புலிக்காட்டு ராஜகுமாரிக்குச் சரியான தண்டனை அளித்து விட்டாய்!" என்று கூறி அதனை உச்சி முகர்ந்தது.

"வா! நாமிருவரும் கருங் காட்டுக்குப் போகலாம். நம்மைக் காணாமல் கருங் காட்டு ராஜா தவித்துக் கொண்டிருப்பார்!" என்றது சிங்கராணி.

"அம்மா! நாம் இந்தச் சிங்கச் சிலையையும் நம் காட்டுக்குக் கொண்டு போக வேண்டும். இந்த அகம்பாவம் பிடித்த மந்திரவாதிப் பெண் சிங்கத்தின் சிலையை நம் அரண்மனை வாசலில் வைத்து விடலாம்!" என்று கேட்டுக் கொண்டது கருங்காட்டு இளவரசன்.

"பேஷ்! அப்படியே செய்து விடலாம். நானும் அந்த மாதிரியேதான் நினைத்தேன்!" என்று பதிலளித்தது சிங்க ராணி.

கருங்காட்டு ராணி தன் குட்டியுடன் கருங்காட்டுக்குப் புறப்பட்டது. சிங்க ராஜகுமாரன் தன்னுடன் சிங்கச்சிலையையும் மந்திரக் கோலையும் எடுத்துக் கொண்டு சென்றது.

அவை கொஞ்ச தூரம் சென்றதும், திடீரென்று வானம் கறுத்து விட்டது போல் தோன்றியது. படபட வென்று இறக்கை யடித்துக் கொண்டு ராட்சதப் பறவை ஆகாயத்திலிருந்து 'விர்'ரென்று கீழே இறங்கியது.

"அம்மா! புலிக் காட்டு ராணி வளர்த்து வந்த ராட்சதப் பறவை தான் இது. இதன் எஜமானிக்கு ஏற்பட்ட தீங்கைக் கண்டுகோபப்பட்டு நம் மீது பாய வருகிறது!" என்று எச்சரித்தது சிங்க ராஜகுமாரன்.

"ஐயோ! மறுபடியும் ஆபத்தா?" என்று ரொம்பவும் பயந்து நடுங்கியது சிங்க ராணி.

"கவலைப்படாதே! என்னிடம் மந்திரக் கோல் இருக்கிறது!" என்று சமாதானப் படுத்தியது சிங்க இளவரசன்.

ராட்சதப் பறவை பாய்ந்து வந்து அவைகளின் வழியை மறைத்துக் கொண்டது. சிங்க ராஜகுமாரன் அதைக் கண்டு கோபமடைந்து தன் கையிலிருந்த மந்திரக் கோலை ராட்சதப் பறவையின் மீது வீசி யெறிந்தது. என்ன அதிசயம்! மந்திரக் கோல் அதன் தேகத்தில் பட்ட மாத்திரத்தில் ஓர் அற்புதம் நிகழ்ந்தது.

ராட்சதப் பறவை அழகிய சிங்கமாக மாறி விட்டது.

"ஆ! இது என் கணவர் கருங்காட்டு மன்னர் அல்லவா?" என்று வியப்புடன் கூறியது சிங்கராணி.

"என்ன! இவர் என்னுடைய தந்தையா?" என்று ஆச்சரியத்துடன் கேட்டது சிங்க இளவரசன்.

"நம் குட்டியா? நமக்கு இராஜகுமாரன் பிறந்திருக்கும் செய்தி எனக்குத் தெரியவே தெரியாதே!" என்றது சிங்க ராஜா.

"மான் தூதனை அனுப்பி நமக்குக் குட்டி பிறந்திருக்கும் செய்தியைத் தெரிவிக்கச் சொன்னேனே, அது வந்து சொல்லவில்லையா?" என்று கேட்டது சிங்கராணி.

"மான் தூதன் வரவே யில்லையே!" என்று பதிலளித்தது சிங்கராஜா.

"ஆமாம்! மலைக்காட்டுப் போருக்குச் சென்றீர்களே! நீங்கள் எப்படி ராட்சதப் பறவையாக உருவமெடுத்தீர்கள்?" என்று வினவியது சிங்கராணி.

கருங்காட்டு மன்னன் போருக்குச்சென்ற பிறகு ஏற்பட்ட நிகழ்ச்சிகளை யெல்லாம் விவரமாகக் கூறியது. சிங்கராணியும், சிங்க இளவரசனும் அவற்றை மிக்க ஆர்வத்துடன் கேட்டன.

* *

போருக்குச் சென்ற கருங் காட்டு ராஜா மலைக்காட்டு மன்னனைக் கடுமையாக எதிர்த்தது. கருங்காட்டுப் படை மிகுந்



இருந்ததால் மலைக்காட்டுப் படையை வெகு எளிதில் தோற்கடித்து விட்டது. மலைக்காட்டு மன்னன் போரிலேயே படுகாயமுற்று இறந்து விழுந்தது. கருங்காட்டுப் படையைச் சேர்ந்த சில மிருகங்கள் மலைக்காட்டு அரண்மனைக்கும் தீ வைத்து விட்டன. மலைக்காடு முழுதும் கருங்காட்டு மன்னனின் படையெடுப்பால் பாலைவனமாகி விட்டது.

கருங்காட்டு ராஜா வெற்றிக் களிப்புடன் வீர முழக்கம் செய்து கொண்டு தன் படையோடு கருங்காட்டுக்குத் திரும்பியது.

வழியில் பெரு மழை பிடித்துக் கொண்டது. இடியும் மின்னலும் அதைத் தொடர்ந்தன. கருங்காட்டுப் படை சின்னா பின்னமாகச் சிதறி மழைக்கு ஒதுங்குமிடம் தேடி ஓடின. கருங்காட்டு ராஜாவும் மழைக்கு ஒதுங்கியதில் தன் படைகளிடமிருந்து பிரிந்து விட்டது.

மழை விட்டதும் சிங்கராஜா தன் படைகளைத் தேடியலைந்தது. அவற்றைக் கண்டு பிடிக்க முடியவில்லை.

சிங்கராஜா தன்னந் தனியாகக் காட்டில் வழி தெரியாமல் அலைந்தது. பிறகு அதற்கு ஒரு குடிசை தென்பட்டது. அந்தக் குடிசையினுள் நுழைந்து அலுப்பினால் படுத்து உறங்கி விட்டது.

சிறிது நேரத்துக் கெல்லாம் பயங்கரச் சத்தம் கேட்கவே கண் விழித்துப் பார்த்தது. புலிக் காட்டு ராஜகுமாரி குடிசையினுள் நுழைந்து, "அட! கருங்காட்டு மன்னர் அல்லவா? அசட்டுப் பலாக்காட்டு ராஜகுமாரியை வெறுத்து விட்டு என்னை ஏற்க வந்திருக்கிறீர்களா? மிக்க மகிழ்ச்சி!" என்று அளவில்லா ஆனந்தத்துடன் கூறியது.

"பலாக்காட்டு ராஜகுமாரியை வெறுக்கவும் இல்லை. உன்னை ஏற்கவும் தயாராயில்லை. மலைக்காட்டு மன்னனைப் போரில் முறியடித்து விட்டு வரும் பொழுது, வழி தவறி உன் குடிசைக்கு வந்து விட்டேன்!" என்று பதிலளித்தது கருங்காட்டு ராஜா.

"ஓஹோ, அப்படியா?" என்று கூறித் தன் கையிலிருந்த கோலால் சிங்கராஜாவின் முதுகில் தடவியது. சிங்கராஜா உடனே ராட்சதப் பறவையாக மாறி விட்டது. புலிக்காட்டு ராஜகுமாரி தன் மந்திர ஜால வித்தைகளினால் பலவிதமாக அதை ஆட்டி வைத்தது.

கருங்காட்டு மன்னன் தன் கதையைக் கூறி முடித்ததும், சிங்கராணி இடைமறித்து, "அப்படியானால் ராட்சதப் பறவையின் வேடத்திலிருந்த உங்களுக்கு நம் குட்டியையே தூக்கிச் செல்ல எப்படி மனம் வந்தது?" என்று வினவியது.

"புலிக்காட்டு ராஜ குமாரிதான் மந்திர வித்தைகளால் என் மனதை யெல்லாம் மயக்கி விட்டதே!" என்றது சிங்க ராஜா.

"உங்கள் மனத்தையும் மாற்றி, தூது அனுப்பிய மானையும் தடுத்து எத்தனை பயங்கரக் கொடுமைகளெல்லாம் இந்தப் புலிக்காட்டு ராஜகுமாரி செய்திருக்கிறது!" என்று வியந்தது சிங்கராணி.

பிறகு தொடர்ந்து, "இதோ, நம் குமாரன். இவனால்தான் நாமிருவரும் புலிக் காட்டு ராஜகுமாரியிட மிருந்து தப்பிப் பிழைத்தோம். இல்லாவிட்டால் நான் சிங்கச் சிலையாகவும் நீங்கள் ராட்சதப் பறவையாகவுமே காலங் கழித்திருக்க வேண்டி யிருக்கும்!" என்று பெரு மகிழ்ச்சியுடன் கூறியது சிங்கராணி.

"ஆனால் அநீதி யிழைப்பவர்கள் தண்டனையிலிருந்து தப்ப முடியாது என்பதை இப்பொழுது தெரிந்து கொண்டாய் அல்லவா?" என்று கூறி விட்டு, கருங்காட்டு ராஜா தன் அருமைக் குட்டியை மகிழ்ச்சியுடன் கட்டித் தழுவிக் கொண்டது. இந்தக் காட்சியைக் கண்ட சிங்கராணிக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை.

கருங்காட்டு ராஜா தன் மனைவியுடனும் குமாரனுடனும் கருங்காட்டை நோக்கிக் கிளம்பியது.

ஒரு நாள் முழுதும் நடந்து அவை கருங்காட்டை வந்தடைந்தன. கருங்காட்டின் எல்லையை அடைந்ததும் சிங்கராஜா தன் மனைவியுடனும் குமாரனுடனும் வருகிறது என்பதைச் சில மிருகங்கள் தெரிந்து கொண்டன. அவை காற்றினும் கடு வேகமாகச் சென்று கருங்காடு முழுதும் இந்த நற்செய்தியைத் தெரியப் படுத்தின.

கருங்காட்டு மிருகங்கள் ராணுவ வாத்தியம் முழங்க மேள தாளத்துடன் ராஜாவையும் ராணியையும் ராஜகுமாரனையும் வரவேற்றன. களையிழந்திருந்த கருங்காடு முழுதும் மகிழ்ச்சிப் பிரவாகம் கரை புரண்டோடியது. (முற்றும்)

குடும்பத்திற்கு
குதூகலம் அளிப்பவை

**TSR**

சந்தனாதி தைலம்
[illegible]
பிருங்காமலக தைலம்
[illegible]
[illegible]
[illegible]
[illegible]

**டி. எஸ். ஆர். & கோ., கும்பகோணம்**

சென்னை நகரத்திற்கு டிஸ்ட்ரிப்யூட்டர்கள்: சுராஜ் ஏஜன்ஸீஸ், 18, ராயப்பேட்டை ஹைரோடு. ● கோயமுத்தூர், பாலக்காடு, நீலகிரிக்கு சோல் ஏஜண்டு: B. பாலபட்டாபி செட்டியார், கோயமுத்தூர்.

---



# ப்ரூக்லாக்ஸ்

## ஒரே இரவில்

### குணப்படுத்தி விடும்

ப்ரூக்லாக்ஸ் பார்வைக்கும் ருசிக்கும் சாக்லேட் போன்றே இருக்கும். இருந்தாலும், அது வயிற்றிலுள்ள அசுத்தங்களை பத்திரமாயும், நிச்சயமாயும், வலி, எரிச்சலின்றியும் நீக்கும். குடும்பத்திற்கான பேதி மருந்து. குழந்தைகளுக்கும் பெரியவர்களுக்கும் நல்லது. சிவப்புப் பெட்டியிலுள்ள ப்ரூக்லாக்ஸை கேட்டு வாங்குங்கள்.

மலச்சிக்கலை தவிர்க்க
சிறப்பான
நிச்சயமான வழி




வெஸ்ட் மின்ஸ்டர் லாபரேடரீஸ் லிட்., லண்டன், தயாரிப்பு

ஏஜண்டுகள்: ஓரியன்டல் மெர்க்கன்டைல் ஏஜன்ஸி
99-ஏ. அரண்மனைக்காரத் தெரு, மதராஸ்-1




அவள் பெயர் காமாட்சி. எவ்வளவு கர்னாடகமான பெயர். பெயருக்கேற்றபடி அவள் பழக்க வழக்கங்களும் மனோ பாவமும் அமைந்திருந்தன. பவுடர் பூசிக்கொள்ள மாட்டாள்; மஞ்சள் பூசிக் குளிப்பாள். நகங்களுக்குச் சாயம் பூசிக்கொள்ள மாட்டாள்; மருதாணி இட்டுக் கொள்வாள். மாலையானதும் கையில் பந்தாடும் மட்டை எடுத்துக் கொண்டு லேடீஸ் கிளப்புக்குப் போகமாட்டாள்; கையில் பூத்தட்டோ, தேங்காய் பழத் தட்டோ அல்லது எண்ணெய்க் கிண்ணமோ எடுத்துக்கொண்டு கோவிலுக்குப் போவாள்.

அவளுக்கு அடுத்த வீட்டில் காந்தாமணி என்றொரு பெண் இருந்தாள். அவளுக்கும் காமாட்சியின் வயதுதான். அவள் பி. ஏ. படித்தவள்; பணக்காரக் குடும்பத்தைச் சேர்ந்தவள்; நவநாகரிக நாரீமணி. சுருக்கச் சொல்ல வேண்டுமெனில் காமாட்சியினிடம் எந்தப் பழக்கங்கள் எல்லாம் "இல்லை" என்றோமோ அவை யாவும் காந்தாமணியினிடம் இருந்தன என்றாலே போதும்.

ஆனால் காந்தாமணியும் காமாட்சியும் நெருங்கிய நட்புரிமை பூண்டவர்கள். காந்தாமணி சதா காமாட்சியின் பழக்க வழக்கங்களைக் கேலி செய்த வண்ணமாகவே இருப்பாள். அவை யொன்றும் காமாட்சியை யுறுத்தாது. இலேசாகச் சிரித்து மழுப்பி விட்டுப் போய் விடுவாள். ஒவ்வொரு சமயம் காமாட்சியும், காந்தாமணியைப் பரிகாசம் செய்வாள். காந்தாமணியும் சிரித்துக் கொள்வாள்; பொருட்படுத்த மாட்டாள். இதே பரிகாசத்தை வேறு யாராகிலும் செய்திருந்தால், காந்தாமணி அவர்கள் மீது நாகப் பாம்பு போல் சீறியிருப்பாள்.

ஆகவே காந்தாமணி காமாட்சியுடன் நெருங்கிப் பழகி அன்யோன்னியமாக இருப்பதை அந்த ஊர் முழுதுமே அதிசயமாகப் பார்த்து வந்தது. 'இந்தப் பட்டிக்காட்டுப் பெண்ணுக்கும் அந்த நவநாகரிகப் பெண்ணுக்கும் எப்படித்தான் ஒத்துக் கொள்கிறதோ?' என்று அதிசயித்தார்கள் ஊரார்.

ஒரு நாள் காந்தாமணியும் காமாட்சியும் பேசிக் கொண்டிருந்த போது, காந்தாமணி பின்வருமாறு சொன்னாள்:

"காமாட்சி, நீ எவ்வளவுக் கெவ்வளவு கர்நாடகமாகவும் பட்டிக்காட்டுக் கட்டுப் பெட்டியாகவும், தெய்வ நம்பிக்கை கொண்டவனாகவும் இருக்கிறாயோ அவ்வளவுக் கவ்வளவு நேர் மாறுதலான நவநாகரிக நிரீசுவரவாதிதான் உனக்குப் புருஷனாக வாய்க்கப் போகிறான்."

அதற்குக் காமாட்சி, "ஆமாம் எனக்கு அப்படி வாய்ப்பான்; உனக்குப் பட்டிக் காட்டுக் கட்டுப் பெட்டி யொருத்தன் தலையில் கட்டுக் குடுமியுடன் வந்து வாய்ப்பான், இல்லையா?" என்று கூறி விட்டுச் சிரித்தாள்.

"எனக்குப் புருஷன் யார் என்ற ஏற்கெனவே தீர்மானமாகி விட்டது, காமாட்சி. அவர் எப்படி இருப்பார் தெரியுமா? அவர் ரொம்ப நவநாகரிக மனிதர். புரட்சிகரமான முற்போக்கு எண்ணங்கள் கொண்டவர். பட்டிக் காட்டுப் பழைய வழக்கங்கள் அவருக்குக் கட்டோடு பிடிக்காது. கோவில்

ளனம் என்றால் கொஞ்சங் கூடப் பிடிக் காது..." என்று சொல்லிக் கொண்டே வந்தாள் காந்தாமணி.

அதைக் கேட்கக் கேட்கக் காமாட்சிக்கு உள்ளத்தில் ஓர் அருவருப்பு தோன்ற லாயிற்று. அவள் உள்ளத்தின் விகாரப்பாடு அவள் முகத்திலும் பிரதிபலித்தது.

"என்ன காமாட்சி! உன் முகம் ஏன் இவ்வளவு கோணல் கோணலாகப் போகிறது...!"

"ஒன்றுமில்லை. அப்பா கொஞ்ச காளாகச் சொல்லிக் கொண்டிருக்கிறார்...யாரோ கட ராஜன் என்று பெயர் கொண்ட பிரசங்கியாம். சண்டப் பிரசண்டமாகப் பேசுகிறாராம்! அவர்கூட 'கடவுள் என்றிருந்தால் அவர் மறைந்து திரிவானேன்? மனிதனைக் கண்டு பயப்படுவானேன்? நேரில் தோன்றட்டுமே! இதனாலேயே கடவுள் என்பதில்லை. கடவுள் என்ற சொல் மக்களை ஏமாற்றுவதற்காக, சுரண்டுவதற்காக ஏற்பட்டதாகும் எனத் தெரிகிறது...' என்றெல்லாம் ரொம்பவும் காரசாரமாகப் பேசுகிறாராம். அவர் பேச்சில் அப்பா அப்படியே மயங்கிப் போயிருக்கிறார். அவர் சொல்வது அவ்வளவும் உண்மை தான் என்று அப்பா ஆமோதிக்கக் கூட ஆரம்பித்து விட்டார்..."

"அவர்தான் காமு என் அத்தான்! அவரைத்தான் நான் போன வருஷம் வரைக்கும் நிச்சயமாகக் கல்யாணம் செய்து கொள்வதாக இருந்தது. அவர் திடீர் என்று கட்சி மாறி, இப்படிப் புரட்சிகரமாகக் 'கடவுள் இல்லை; கோவில் இல்லை' என்று பேச ஆரம்பிக்கவே என் அப்பாவுக்கும் அம்மாவுக்கும் யோசனையாகப் போய் விட்டது. என் பெற்றோர்கள் ரொம்பவும் தெய்வ பக்தி யுள்ளவர்கள் என்பதுதான் உனக்குத் தெரியுமே! அப்படி யிருக்க என்னை எப்படி அவருக்குக் கொடுப்பார்கள்? அதனால்தான் இதுவரை எனக்கும் அவருக்கும் கல்யாணமாகவில்லை... அது சரி, உனக்கு இப்படிப்பட்ட புருஷன் வாய்த்தால் என்ன செய்வாய் காமாட்சி?" என்று ஆவலுடன் கேட்டாள்.

உண்மையிலேயே காந்தாமணிக்கு, அத்தகைய புருஷன் காமாட்சிக்கு வாய்த்தால் என்ன செய்வாள் என்று தெரிந்துகொள்ள வேண்டும் போலிருந்தது!

காமு சற்று நேரம் யோசித்தாள். "செய்ய என்ன இருக்கிறது! பாரத நாட்டுப் பெண்ணுக்குப் பதிதான் தெய்வம். பிரகலாதன், அன்று தன் தந்தை இரணியனைப் பார்த்து, 'கடவுள் இல்லை என்று சொல்கிறாயே அப்படிச் சொல்பவனும் நீயல்ல, கடவுள்தான்' என்றான். இதன் உண்மையை நன்கு அறிந்தவள் நான் காந்தா!"

"அப்படியானால் அந்தக் கணவன் 'கோவிலுக்குப் போகாதே! குளத்துக்குப் போகாதே! நோன்பு நோற்காதே!' என்றெல்லாம் கட்டளை யிட்டால் என்ன செய்வாய் காமு?" என்று கேட்டாள் காந்தா.

"அவர் விருப்பப்படியே நடந்து கொள்வேன். புருஷனில் தெய்வத்தைக் காணும் நான் அப்படியெல்லாம் நடந்து கொள்வது தான் தெய்வ வழிபாடு என்று இருந்து விடுவேன்" என்றாள் காமு.

"பேஷ்! பேஷ்! ரொம்பவும் சமத்காரமாகப் பேசுகிறாய் காமாட்சி! உன்னுடன் வாதாடி வெல்வது மிகவும் கஷ்டம்தான்" என்றாள் காந்தாமணி.

"எனக்கு என்ன தெரியும் சாமர்த்தியமாகவும் சமத்காரமாகவும் பேச, காந்தாமணி? பள்ளிக்கூடத்தில் விழுந்துக்காகக் கூட ஒதுங்காதவள் நான்."

"பள்ளிப் படிப்பைக் கொண்டு போய் உடைப்பில் போடு! பள்ளிக்கூடத்தில் படித்தவர்களால் இவ்வளவு கோவையாகப் பேச முடியுமா? ஒரு நாளும் முடியாது!"

இவ்வாறு அவர்கள் வெகு நேரம் பேசிக் கொண்டிருந்து விட்டு, பிறகு கலைந்தார்கள்.

* * *

காந்தாமணியின் வீட்டில் யாரோ தெரியவில்லை, அடிபட்டு மூர்ச்சையுற்ற நிலையில் கிடப்பதாகவும், அவருக்குக் காந்தாமணியும் அவள் பெற்றோர்களும் பல பிரபல டாக்டர்களை அழைத்து வந்து சிகிச்சை செய்கிறார்கள் என்றும் ஊரெல்லாம் ஒரே பேச்சாக இருந்தது. இந்த நிலையில் காமு இரண்டொரு முறை காந்தாமணியைச் சந்திக்க முயன்றாள்; முடியவில்லை.

மூன்றாவது நாள்தான் காமாட்சிக்குக் காந்தாமணியைச் சந்திக்க முடிந்தது. ஆம், அன்றுதான் அந்த நபருக்குச் சற்று சுய நினைவு வந்தது. காந்தாமணிக்கும் அண்டை அயலில் என்ன நடக்கிறது என்று பார்க்க அப்போதுதான் ஒழிந்தது. ஏதோ காலடிச் சத்தம் கேட்கவே திரும்பிப் பார்த்தாள். அவள் இருந்த அறை வாசலில் காமு நின்று எட்டிப் பார்த்தாள்.

காந்தாமணி, "காமு, வா, வா! உள்ளே வா!" என்று கூப்பிட்டாள்.

காமாட்சி உள்ளே நுழைந்தாள். படுக்கையில் தலையில் கட்டுடன் படுத்திருந்த அந்த இளைஞர், காந்தாமணியின் குரலைக் கேட்டு ஒரு முறை கண்களைத் திறந்தார். காமு வருவதைப் பார்த்தார். பிறகு கண்களை மூடிக் கொண்டு விட்டார்.

"அவருக்கு எப்படியிருக்கிறது, காந்தா?" என்றாள் காமாட்சி.

"இன்றுதான் பரவாயில்லை. கண்களைத் திறந்து பார்த்தார்; சுய நினைவு வந்து விட்டது. ஜுரம்கூட இறங்கி விட்டது!" என்றாள் காந்தா.

"இவர் யாரு காந்தா?" என்று அடுத்தாற்போலவே காமாட்சி கேட்டு விட்டாள்.

அவர் யார்? அவருக்கும் காந்தாமணிக்கும் என்ன உறவு?—என்றெல்லாம் தெரிந்து கொள்ள வேண்டும் என்றிருந்த ஆர்வத்தை அவளால் உள்ளத்தில் அடக்கி வைத்துக் கொண்டிருக்க முடியவில்லை.

"இவர் எங்கள் தூர பந்து. யாரோ ஒருவர், இவரைச் சுய நினைவிழந்த நிலையில்

இங்கே கொண்டு வந்து சேர்த்தார்கள். அவருக்குத் தக்க வைத்திய உதவி செய்ய வேண்டியது நம்முடைய கடமையல்லவா?'' என்று சொன்னாள்.

"ஆமாம். இப்படிப்பட்ட நிலையில் வருபவர் உறவாக இல்லாவிட்டால் கூடச் செய்ய வேண்டியதுதான்!'' என்றாள் காமு. அந்தச் சமயத்தில் நோயாளி, "தண்ணி, தாகம்'' என்று முனகினார்.

காந்தா ஓடிச் சென்று ஒரு கண்ணாடி டம்ளரில் தண்ணீர் எடுத்து அவர் வாயில் கொஞ்சம் கொஞ்சமாக விட்டாள்.

பக்கத்திலிருந்து காமு இதைக் கவனித்து வந்தாள். அவர் 'போதும்' என்று தலையை அசைத்தவுடனே, அப்படியே குவளையை வைத்து விட்டு, சற்று ஒதுங்கிச் சென்று தோழிகள் இருவரும் பேசத் தொடங்கினர்.

கொஞ்ச நேரம் ஏதேதோ பேசிக்கொண்டிருந்தனர். பிறகு பேச்சு முடிவில், "காமு! உன்னை ஒரு உதவி கேட்பேன் செய்வாயா?'' என்றாள் காந்தாமணி.

"என்ன?''

"நான் மேலே போய்க் குளித்து விட்டு வருகிற வரைக்கும் நீ இவரைக் கவனித்துக் கொள்வாயா? தண்ணீர் கேட்டால், கொஞ்சம் ஆரஞ்சு ரஸம், அல்லது ஹார்லிக்ஸ் போன்றவைகளைக் கொடுக்க வேண்டும். சரியாக ஒரு மணி நேரம் கழித்து அதோ மேஜை மீதிருக்கும் சிவப்பு மருந்தில் ஓர் அவுன்ஸ் கொடுக்க வேண்டும். அவ்வளவு தான்! அதற்குள் நான் வந்து விடுவேன்.''

"இவ்வளவு தானே? நான் கவனித்துக் கொள்கிறேன். நீ போ காந்தா!'' என்றாள்.

இப்படித்தான் முதலில் காமாட்சி அவருக்குத் தொண்டு செய்ய ஆரம்பித்தாள். இந்தத் தொண்டு ஒரு நாள் இரண்டு நாள் அல்ல பத்து நாள் நீடித்தது. தலைக்காயம் ஆற ஆரம்பித்து விட்டது. டாக்டர் அவர் ஒரு மாதம் ஓய்வு எடுத்துக் கொள்ள வேண்டும் என்று சொல்லியிருந்ததால் காந்தாமணியின் வீட்டிலேயே உறவினராதலால் தங்கியிருந்தார். மாலை வேளைகளில் காந்தா, காமு, அவர் மூவரும் பங்களா தோட்டத்தில் உட்கார்ந்து பேசிக் கொண்டிருப்பார்கள்.

ஒரு நாள் காமுவும், அவரும் தனியாக இருக்க நேர்ந்தது. "காமு நான் உன்னை ஒரு விஷயம் கேட்கப் போகிறேன். நீ தவறாக எண்ண மாட்டாய், என்னைப் பற்றிக் கேவலமாக மதிக்க மாட்டாய் என்றால் அதைச் சொல்லுகிறேன்'' என்றார் அவர்.

"நீங்கள் எதைச் சொன்னாலும் தவறாக நினைக்க மாட்டேன். மனதிலுள்ளதைத் தைரியமாகச் சொல்லுங்கள்'' என்றாள்.

"உன்னை நான் மணந்து கொள்ள விரும்புகிறேன், காமு! உனக்கு விருப்பம் உண்டானால், என் பெற்றோர்களுக்குத் தெரிவித்து, உன் பெற்றோர்களைக் கண்டு பேசச் சொல்லுகிறேன். உன்னுடன் இத்தனை நாள் பழகியதிலிருந்து எனக்கு இப்படியொரு எண்ணம் தோன்றியிருக்கிறது. இதைச் சொன்னதினால் நீ என்னைப் பற்றித் தவறாக நினைக்க மாட்டாய் என்றே கருதுகிறேன்'' என்றார்.

ஒரு கணம் யோசித்தாள் காமு. "நாளை என் அபிப்பிராயத்தைச் சொல்லுகிறேன்'' என்று கூறி விட்டு வந்து விட்டாள்.

'நாளை' என்பது நாள் நாளாகப் போயிற்றே யன்றி, அவள் குறித்த 'நாளை' வரவே இல்லை. காந்தாவுக்கும் மூன்று நான்கு நாட்களாகக் காமுவைக் காணாதது என்னவோ போலிருந்தது. 'ஏன், காமு இந்தப் பக்கம் எட்டிப் பார்க்கவில்லை. அவளுக்கு உடம்பு ஏதாகிலும் சரியில்லையோ?' என்று பலபடி எண்ணினாள். கடைசியில் அவள் வீட்டுக்கே சென்று பார்த்து விட்டு வருவது என்று முடிவு செய்து காமுவின் வீட்டுக்குப் புறப்பட்டாள்.

** ** **

'காந்தா வருவாள், வருவாள்' என்று காமுவும் தன் வீட்டில் எதிர் பார்த்துக் கொண்டிருந்தாள். காந்தாவைப் பார்த்ததும் அவளுக்கு வெட்கமும் மகிழ்ச்சியும் பொங்கி எழுந்தன.

"என்ன காமு! உன்னை நான்கு நாட்களாகக் காணோம். உனக்கு உடம்புக்கு





எழும்பூர் வேத சபையின் ஆதரவில் ஆகஸ்டு மீ 8 உ காஞ்சிபுரம் பிரதிவாதி பயங்கரம் ஸ்ரீ அண்ணங்கராச்சாரியார் அவர்கள் தைத்ரிய உபநிஷதம் பற்றி அரிய சொற்பொழிவு நிகழ்த்தினார்கள். அச்சமயம் ராஜாஜி அவர்களும் விஜயம் செய்திருந்தார்கள்.

ஏதாகிலும் வந்து விட்டதோ என்று பயந்து போய் விட்டேன்'' என்றாள் காந்தா.

"காந்தா, காரணமாகத்தான் வரவில்லை" என்றாள் காமு.

"என்ன காரணமாம்?"

"அதெல்லாம் அவ்வளவு பகிரங்கமாகக் கூறிவிட முடியுமா? வா, குளக்கரைக்குப் போவோம்! ரகசியமாகக் காதோடு சொல்லுகிறேன்!" என்றாள் காமு.

ஆம், ஏழைக் காமுவின் வீட்டில் அவளுக்கென்று ஒரு இடம் கிடையாது. தனியாகப் பேச வேண்டுமென்றால் குளக்கரைக்குத் தான் போக வேண்டும்.

ரகசியம் என்றவுடனேயே காந்தாமணிக்கு அதைத் தெரிந்துகொள்ள வேண்டும் என்ற பரபரப்பு ஏற்பட்டு விட்டது. அதனால் குளக்கரைக்குப் போனவுடனேயே, "ஏன் காமு, நீ இத்தனை நாள் வரவில்லை?" என்று வியப்புடன் கேட்டாள்.

"உங்கள் வீட்டுக்கு ஒருவர் வந்திருக்கிறார் பாரு... .." என்று இழுத்தாள் காமு.

"ஆமாம்......"

"அவர் என்னை......"

"என்ன செய்தார்? சீக்கிரம் சொல்!"

"ஒன்றும் செய்துவிட வில்லை, காந்தா! தன்னைக் கல்யாணம் பண்ணிக் கொள்ள இஷ்டமா என்று என்னைக் கேட்டார்......!"

"யாரு, அத்தான் நடராஜனா?"

"அவர் உன் அத்தானா? காந்தா! எனக்கு இத்தனை நாளும் சொல்லவில்லையே. ஏதோ தூர பந்து என்றல்லவா சொல்லி வந்தாய். மேலும், முறைப் பெண் நீ யிருக்க அவர் என்னை எப்படி இவ்வாறு துணிந்து கேட்கலாம்......" என்று கூறி வந்தபோதே அவள் தொண்டை அடைத்தது. கண்களில் கண்ணீர் வந்து விட்டது!

"ஏன் இப்படி அழுகிறாய், காமு? அவர் கேட்டதில் தவறு ஒன்றுமில்லை. என் பெற்றோர்கள் என் அத்தானின் புதுக் கொள்கைகள் காரணமாக அவருக்கு என்னைக் கல்யாணம் செய்து கொடுக்க விரும்பவில்லை. நானும் என் திருமண விஷயத்தில் என் பெற்றோர்களின் விருப்பத்துக்கு மாறாக நடந்து கொள்ள விரும்பவில்லை. அதனால் தான் உன்னைக் கேட்டார். மேலும் இன்னொரு விஷயமும் இருக்கிறது, காமு" என்றாள் காந்தாமணி.

"என்ன?"

"அவர் உன்மேல் அளவு கடந்த காதல் கொண்டிருக்கிறார், காமு!" என்றாள்.

"போ, காந்தா! இதெல்லாம் என்ன பேச்சு! காதலாவது கத்திரிக்காயாவது!" என்று கூறி வெட்கத்துடன் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டாள் காமு.

"இல்லை, காமு. காதல் என்று வேண்டுமானாலும் சொல்ல வேண்டாம்! அளவு கடந்த அன்பு உன்மீது வைத்திருக்கிறார். அதனால், அவரை நீ மணந்து கொண்டாயானால் இன்ப இல்லறம் வாய்க்கும் காமு. நாளையே உன் சம்மதத்தை அவருக்குத் தெரிவித்து விடு, காமு!" என்றாள் காந்தா.

**  **  **

**ம**று நாள் காந்தா, மீண்டும் காமுவின் இல்லத்துக்கு வந்தாள்.

"என்ன காமு! உன் சம்மதத்தைத் தெரிவித்து விட்டாயா?" என்று கேட்டாள்.

"இல்லை காந்தா, அவரை மணக்கமுடியாது என்று சொல்லி விட்டேன்!" என்றாள் காமு.

"ஏன்?"

"நேற்று காலை அவர் உன் வீட்டை விட்டு வெளியே உலாவ வந்தார். அவரை என் தகப்பனார் சந்தித்து நீண்ட நேரம் பேசிக் கொண்டிருந்தார். எங்கள் வீட்டு ஜன்னல் வழியாக இதைப் பார்த்துக் கொண்டிருந்தேன். எனக்கு வியப்பாகப் போய் விட்டது! அப்பாவுக்கு அவரை ஏற்கெனவே தெரியுமோ என்று நினைத்து வியந்தேன். பிறகு அப்பா வீட்டுக்கு வந்தவுடன் கேட்டேன்! அப்பா, இவர்தான் தாம் முன்பு பெரிய பிரசங்கி என்று புகழ்ந்தவர் எனக் கூறினார். இதை விட வேறு என்ன வேண்டும், காந்தா! அதனால்தான் அவரை மணக்க முடியாது என்று சொல்லி விட்டேன்" என்றாள்.

"காமு! இதென்ன அசட்டுத்தனம். அவர் கோயிலில் கடவுள் இல்லை என்று சொல்லி விட்டால் என்ன குடி மூழ்கிப்

போய் விட்டது? அவர் உள்ளத்தில் கடவுள் இருக்கிறாரே! அவர் உள்ளத்தில் அன்பு உருவாகக் கடவுள் இருக்கிறாரே! அன்பே கடவுள் அல்லவா? அந்த அன்பை நீ உதாசீனம் செய்யலாமா? அப்படிச் செய்தால் கடவுளை நீ உதாசீனம் செய்ததாகாதா?

"மேலும், முன்பே இத்தகைய நிலை ஏற்பட்டால் 'நான் தைரியமாக இருப்பேன்' என்று கூறினாயே! 'கணவனில் தெய்வத்தைக் காண்பேன்' என்று கூறினாயே, அதெல்லாம் பொய் மொழிகளா? ஏன், காரியம் என்று வரும்போது கோழையாகி விட்டாய் காமூ! நீ மனத்தைத் திடப்படுத்திக் கொள்! அன்பை நிராகரிக்காதே, காமூ!" என்றாள்.

காமூவுக்கும் அவள் கூறியது முற்றிலும் உண்மை என்று பட்டது! "அப்படியானால் சரி, காந்தா!" என்றாள் காமூ.

**கா**மாட்சிக்கும் நடராஜனுக்கும் திருமணம் வெகு சிறப்பாக நடந்தது.

காமூவின் தந்தைக்குப் புரட்சி வீரர் நடராஜன் மாப்பிள்ளையாக வாய்த்ததில் அளவு கடந்த மகிழ்ச்சி. அதைவிட காமூ எப்படி இவரை மணக்க ஒப்புக்கொண்டாள் என்பதே புரியாத புதிராகவே இருந்தது!

ஆனாலும் நடராஜனும் காமூவும் சென்னைக்குச் சென்று தனிக் குடித்தனம் மிகவும் அன்யோன்னியமாக நடத்தி வந்தனர். காமூவும், தன் தோழி காந்தாவுக்குத் தன் அன்புக் கணவருடன் இன்பமாக இல்லறம் நடத்தி வருவதைப் பற்றி அடிக்கடி எழுதி வந்தாள். காந்தாமணியும் தன் தோழியின் கடிதங்களைப் படித்துப் பேர் ஆனந்தம் கொள்வாள்!

•  •  •

**மா**தங்கள் ஆறு ஓடி மறைந்தன.

ஒருநாள் காலை காந்தாமணி, பத்திரிகை பார்த்துக் கொண்டிருந்தபோது, தேள் கொட்டினவள் போல் துள்ளிக் குதித்து, "அப்பா!" என்றாள். "என்ன அம்மா!" என்று கேட்டார் அவள் தந்தை.

"இந்த விளம்பரத்தைப் பார்த்தீர்களா?" என்று கூறிப் பத்திரிகையைக் கொடுத்தாள்.

> சைவத் திருமுறை மகாநாடு
> புரட்சி வீரர்
> **ந ட ரா ஜ ன்**
> **சைவமும் தமிழும்** என்னும்
> பொருள்பற்றிப் பேசுவார்.

"யாரு, நம்ம நடராஜனா?" என்று பெரு வியப்புடன் கேட்டார்.

"இப்படிச் சந்தேகப்படுவீர்கள் என்றுதான் 'புரட்சி வீரர்' என்று போட்டிருக்கிறார்கள்!" என்றாள் காந்தாமணி.

"என்ன இருந்தாலும் காமாட்சி கெட்டிக்காரிதானம்மா!" என்றார் அவள் தந்தை.

---

# வழக்கமாக 2-நிமிஷம் பிரஷால் தேய்த்தால்

# கால்கேட் டூத் பவுடர்

# மூன்று நன்மைகளையும் அளிக்கிறது!

✓ வாயில் நறுமணம்!
✓ ஒளிவீசும் பற்கள்!
✓ சொத்தை குறையும்!




வாய்க்குப் பாதுகாப்பும், சுத்தமான ஒளிப் பற்களும் பெற, பல் டாக்டர் அங்கீகரிக்கும் இந்த முறையில் தினசரி கால்கேட் டூத்பவுடரை உபயோகியுங்கள்:

- சாப்பிட்டவுடன் கால்கேட் டூத்பவுடரால் ப்ற்களை 2 நிமிஷம் பிரஷ்கொண்டு தேய்க்கவும்.
- பல்லின் நுனி, முன்புறம், பின்புறம் எல்லாவற்றையும் தேய்க்கவும்.
- எப்போதும் ஈற்றிலிருந்து பல்நுனி நோக்கி தேய்க்கவும்.

**கைகண்ட முறையை இன்றே கையாளுங்கள்!**

TPC/14.

**பல் டாக்டர் அங்கீகரித்த சிறந்த பலன்தரும் முறை!**




தம்பி! ஏன் இப்படி உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு இருமுகிறாய்! அட, பாவமே! க்ஷய ரோகமா! இந்த இளம் வயதில், இந்த ஏழைமை நிலையில், உனக்கு இது வரக்கூடாதப்பா. என்றாலும் கலங்காதே. போ! அதோ, அங்கே தெரிகிறதே, டாக்டர் சாவித்திரியின் ஆஸ்பத்திரி. அங்கு போ! நம்பிக்கையுடன் போ!

டாக்டர் சாவித்திரி க்ஷயரோக ஆஸ்பத்திரியின் தாய். அங்குள்ள நோயாளிகளுக்கும் சுற்று வட்டாரத்திலுள்ள ஏழை எளியவர்களுக்கும் அன்னை. 'அம்மா' என்றால் அந்தப் பக்கத்தில் தெரியாதவர்களே இல்லை.

அவளுடைய சொந்த வாழ்வைப் பற்றி யாருக்கும் எதுவும் தெரியாது. இமயத்தின் சிகரம் போல் அது உயர்ந்தும் பனி படர்ந்தும் இருந்தது. இருபது வருஷங்களுக்கு முன்பு அவள் அங்கு வந்து ஆஸ்பத்திரியைத் தொடங்கினாள். அப்போது அவளுக்கு இருபத்தைந்து அல்லது முப்பது வயதிருக்கலாம். நெளிவில்லாத நீண்ட கருங் கூந்தலைச் சீவிப் பின்னல் முடிந்து கொண்டிருந்தாள். கருப்புக் கரை ஓடிய வெள்ளைப் புடவை; வெள்ளை நிற ஜாக்கெட். அவளுடைய அழகிய முகத்தில் அமைதி தவழ்ந்தது. நீண்ட கரு விழிகளின் பார்வையில் அன்பும் சோகமும் பின்னின.

இருபது வருஷங்கள் ஆகிவிட்டன. இன்று வரை அவளது உடை பாவனைகளில் எந்த மாறுதலும் இல்லை. நெற்றியில் மட்டும் ஓரிரு மெல்லிய கோடுகள்; கருத்த கேசத்திடையே விழுதோடியிருக்கும் ஓரிரு வெள்ளை மயிர்கள். இவ்வளவு தான். ஆனால் அவளுடைய ஆஸ்பத்திரி! ஆரம்பத்தில் அதற்குப் போதிய இட வசதி இல்லை; மருந்துகள் கிடையா; பணியாட்களுக்குப் பஞ்சம்.

பத்துப் பேர்கள் கூடச் சிகிச்சை பெற முடியாத நிலையில் தொடங்கிய அதில் இப்போது ஐந்நூறு பேர்கள் ஆறுதல் பெறுகிறார்கள். 'அம்மா' என்பது அவர்களுக்கு மந்திரச் சொல்.

சாவித்திரியின் வாழ்வில் மற்றவர்களுக்குப் புரியாத ஏதோ ஒரு ரகசியம் இருந்தது. ஒவ்வொரு மாதத்துப் பௌர்ணமியின் போதும் அவள் விரதம் இருந்தாள். பௌர்ணமி இரவில் பத்து மணிக்கெல்லாம் அவள் குத்துவிளக்கெதிரே வெண்கலச் சிலை போல் அசைவற்று உட்கார்ந்து விடுவாள். ஒரு பழுப்பேறிய பழைய நோட்டைப் பிரித்து எதையோ படிப்பாள். பின்பு நீண்ட நேரச் சிந்தனையில் மூழ்குவாள். அதன் பின்பு அவள் சரியாகத் தூங்குவது கூட இல்லை.

அந்த நோட்டில் அப்படி என்ன இருந்தது!

இன்றைக்குச் சித்திரா பௌர்ணமி. வருஷத்துக்கொரு முறை வரும் முக்கியமான நாள். ஆஸ்பத்திரி வேலைகளை ஒரு வழியாக முடித்துக் கொண்டு அதே காம்பவுண்டுக்குள்ளிருந்த தன் வீட்டுக்குத் திரும்பினாள். குளிர்ந்த நீரில் குளித்து மாற்றுடை உடுத்திக் கொண்டாள். நெற்றியில் வட்டமான குங்குமப் பொட்டுக் குடியேறியது.

குத்து விளக்கு ஏற்றப்பட்டது. சாம்பிராணித் தூபமும் ஊதுவத்தியின் நறுமணமும் ஒன்றாய்க் கலந்து இழைந்தன. மல்லிகைச் சரத்தில் கொஞ்சம் விளக்குக்கு அணிவித்துத் தானும் சூடிக் கொண்டாள். சற்று நேரம் தியானத்தில் இருந்த பிறகு அந்த நோட்டைப் பிரித்தாள்.

பிரித்தவுடன் அதன் முதற் பக்கத்தில் ஒட்டியிருந்த புகைப் படத்தோடு அவள் கண்களும் ஒட்டிக் கொண்டன. நீண்ட நேரம் உற்றுப் பார்த்தாள். அந்தப் படத்திலிருந்த இளைஞனும் அவளையே கண்கொட்டாமல் கவனித்தான். அவனது அகன்ற கரு விழிகள் சாவித்திரியின் கருமணிகளினூடே பாய்ந்து இதய அந்தரங்கத்தைக் கண்டு வியப்பது போலிருந்தது.

அவனுக்கு இருபத்தைந்து வயதிருக்கும். சற்றே கலைந்து நெற்றியில் விழுந்த கிராப்புத் தலை. கண்களின் ஒளி மின்னலும் உதட்டுச் சிரிப்பின் உற்சாகமும் உயிர்த் துடிப்பை நினைவூட்டின. படத்திலிருந்த அவன் இமைப்பை மறந்து அவளைப் பார்த்தான். மெல்லிய புன்னகையை இதழோரத்தில் அரும்ப விட்டான். அவளைக் கண்டு விட்ட ஆனந்தத்தால் அவனது சிவந்த உதடுகள் அப்படித் துடிக்கின்றனவா!

'சந்திரா!'

சாவித்திரியின் கண்களில் மெல்லிய நீர்த்திரை படிந்து படத்தை மங்கலாக்கியது. சேலைத் தலைப்பால் கண்களைத் துடைத்துக் கொண்டு மறு பக்கத்தைப் புரட்டினாள். எத்தனையோ வருஷங்களுக்கு முன் அவன் எழுதிய எழுத்துக்கள் மணி மணியாய் அதில் கொட்டிக் கிடந்தன.

## 2

அவன் எழுதியிருந்தான்:

நான் இந்தக் குறிப்புகளை எனக்காக எழுதுகிறேன். ஆம்; எனக்காக மட்டும் எழுதுகிறேன். இதுவரை எனக்கும் அவளுக்குமிடையே எந்த ரகசியமும் இருந்ததில்லை. ஆனால் இனி அப்படி முடியாது. இது மட்டும், அவளுக்குத் தெரியவே

கூடாது. என்னுடைய ஆறுதலுக்காக இதை நான் எழுதுகிறேன். எழுதி முடித்த பின் ஒரே ஒரு முறை என் ஆசை தீர இதைப் படிக்க வேண்டும். கடைசியாக என்னுடைய கையாலேயே இதை நெருப்பு வைத்துக் கொளுத்தப் போகிறேன். ஒரு இளைஞனின் ஆசைகளெல்லாம் அவன் கண் முன்னாலேயே எரிந்து சாம்பலாகும் காட்சி எத்தனை பரிதாபகரமானது!

நான் இங்கே பொய் வேஷம் போட்டு நடிக்க வேண்டிய காலம் நெருங்கி விட்டது. மிகச் சாதுர்யமாக இந்த நடிப்பை மேற்கொள்ள வேண்டும். ஆனால் உண்மை உருவத்தை நான் ஒரே முறை என் உள்ளக் கண்ணாடியில் பார்த்துக் கொள்ள வேண்டும். அந்தக் கண்ணாடிதான் இந்தக் குறிப்பு. என் உள்ளத்தின் அழகை இதில் கண்டு களித்த பின், வீசி எறிந்து இதைச் சுக்கு நூறும் உடைக்கப் போகிறேன். இந்தக் கண்ணாடித் தூளின் ஒரு சிறு தூசி கூடச் சாவித்திரியின் கைக்கு எட்டக் கூடாது. இது ரகசியம்; பரம ரகசியம்; என்னோடு ஒன்றாய் அழிந்து போக வேண்டிய ரகசியம்.

எனக்கு மூன்று வேலைகள். வயிற்றுத் துடிப்புக்காக இரும்புத் தொழிற்சாலையில் காலெல்லாம் இயந்திரமாய் உழைப்பது. நெஞ்சுத் துடிப்புக்காகக் கினைத்தபோது கவிதைகள் எழுதுவது. இளமைத் துடிப்புக்காகக் காதலிப்பது.

எப்போதாவது வெறியில் பிறக்கும் கவிதைகளைப் பற்றி எனக்கு வரும் கடிதங்கள் விசித்திரமாக இருக்கின்றன. படிப்பவர்களின் நெஞ்சின் நரம்புகளை வீணையாக்கி நான் உணர்ச்சி நிறைந்த காதல் கீதம் வாசிக்கிறேனாம். 'எத்தனை அழகு, உயிர்த் துடிப்பு, உணர்ச்சி வெள்ளம்' என்றெல்லாம் உண்மை தெரியாமல் என்னைப் புகழ்கிறார்கள். அத்தனையும் பொய்! கற்பனையும் இல்லை; கனவும் இல்லை; அழகும் இல்லை. என் எண்ணத்தில் அவள் இருக்கிறாள். அவ்வளவுதான்.

நான் எப்போது முதல் முதலில் அவளைச் சந்தித்தேன்! ஐந்தாறு வருஷங்கள் இருக்கும். தாயாரும் நானும் இந்த வீட்டுக்குக் குடி வந்த அன்றே அவள் எதிர் வீட்டில் நின்று எங்களை வேடிக்கை பார்த்தாள். அவளைப் பொருட்படுத்த எனக்கு நேரமில்லை. ஆனால் அவள் உடை அழகு என்னைக் கவர்ந்தது. ரோஜா நிறத் தாவணி, மஞ்சள் நிறப் பட்டுப் பாவாடை, நீலவர்ண ஜாக்கெட். அவளுடைய கண்களின் குறுகுறுப்பிலும் ஏதோ காந்தம் இருப்பதைக் கவனித்தேன்.

ஐந்தாறு வருஷங்களுக்கு முன்பு அவளைச் சந்தித்தேன் என்று சொல்லுகிறேனல்லவா! அது தவறு. ஐந்தாறு யுகங்களுக்கு முன்பே எங்களுக்குள் தொடர்பு இருக்க வேண்டும்.

ஆரம்பத்தில் அவளைப் பற்றி நான் அக்கறைப் படவே இல்லை. ஆனால் அவள் அக்கறைப் பட்டிருக்கிறாள். என் தாயாரை அவள் கவர்ந்தது தான் ஆச்சரியத்திலும் ஆச்சரியம். சாவித்திரி என்றால் அம்மாவுக்கு உயிர். அவர்களுக்கும் எங்களுக்கும் அந்தஸ்தில் கொஞ்சங்கூடச் சம்பந்தமில்லை. என்றாலும் எங்கள் இருவருடைய தாயார்களும் ஒன்றானார்கள். மலைக்கும் மடுவுக்கும் நெருங்கிய தொடர்பு ஏற்படுத்திய நீர்க்கைவைத்தேன் அருவி அவள்.

வயதுக்கு அதிகமான படிப்பு அவளுக்கு. பத்தாவது படிக்கும் இளம் பெண்ணுக்கு இத்தனை அறிவு எங்கிருந்து வந்ததோ! கவிதைகளைப் பற்றி என்னிடம் சர்ச்சை; அது ஒழிந்த நேரங்களில் தினசரிச் செய்திகள் பற்றி வாக்குவாதம்; தாயாரிடம் குடும்ப விஷயங்கள் பற்றிப் பேச்சு.

ஓரிரண்டு வருஷங்கள் சென்றன. அவளுடைய அறிவைக் கண்டு முதலில் அதிசயித்தேன். அடுத்தாற் போல் அவளது அன்பை உணரும் சந்தர்ப்பம் வந்தது. என் தாயார் நோய் வாய்ப்பட்டுக் கிடந்த ஒரு மாதம் முழுவதும் அவள் எங்களுக்காக உழைத்த உழைப்பு! ஆனால் அவளால் என் தாயாரைக் காப்பாற்ற முடியவில்லை.

தாயாரின் பிரிவு ஆரம்பத்தில் என்னைப் பித்தனாக்கியது. இப்போது நான் அதற்காக வருந்தவில்லை. ஒரு வழியில் சந்தோஷப்படுகிறேன்.

சாவிலேதான் வாழ்வு இருக்கிறது. தாயார் இறந்த பத்து நாட்களில், ஒரு நாள் மாலை கையில் பலகாரத்தை எடுத்துக் கொண்டு என்னிடம் வந்தாள் சாவித்திரி. தனிமை என்னைக் கொன்று கொண்டிருந்த வேளை அது.

'அம்மா கொடுத்து விட்டு வரச் சொன்னார்கள்.'

'இன்றைக்குக் கொடுத்தது சரி, இனிமேல் வேண்டாமென்று சொல்லி விடு.'

'ஏன்!'—பாத்திரத்தை வைத்திருந்த அவள் கரம் நடுங்கியது.

'இனி நமக்கு மத்தியில் அம்மா இல்லை. நான் வேறு; நீங்கள் வேறு. எனக்காக உங்களுக்கு ஏன் வீண் சிரமம்!'

அவளால் இதைத் தாங்க முடியவில்லை. பாத்திரத்தைக் கீழே வைத்து விட்டு, நின்றவாறே கதவில் சாய்ந்தாள். கண்களில் நீர் பெருகியது. எதற்காக இந்தக் கண்ணீர்! எனக்குப் புரியவில்லை.

அவள் சாய்ந்து நின்ற தோற்றத்தைக் கவனித்தேன். மூன்று வருஷங்களுக்குள் தான் ஒரு பெண்ணிடம் எத்தனை வளர்ச்சி! அதில் எத்தனை பொலிவு! மளமள வென்று அவள் வாழைக் குருத்துப் போல் வளர்ந்து விட்டாள்.

என் மனத்துக்குள்ளும் அந்த வளர்ச்சி இருந்ததை உணர்ந்தேன். ஆனால் அது ரகசியமாக, மெதுவாக, இனிமையாக வளர்ந்த வளர்ச்சி.

'அம்மா போய் விட்டால் உங்களுக்கு வேறு யாருமே துணை வேண்டாமா!'

சரேன்று அவள் சொற்கள் என்னைச் சுட்டன. அந்தக் காந்தக் கண்களை ஏறிட்டுப் பார்த்தேன். அவளும் அதை எதிர்பார்த்தவள் போல் என்னை நோக்கினாள். விழிகளை அவள் என்னிடமிருந்து சிறிதும் அகற்றவில்லை.

'உங்கள் அம்மாவின் ஆசையை நீங்கள் நிறைவேற்றப் போவதில்லையா!'

'அம்மாவின் ஆசையா!'

'உங்களுக்குத் தெரியாதா!'

'உண்மையில் தெரியாது.'

'என் அம்மாவைக் கேளுங்கள்.'

அவளுடைய முகத்தில் நாணத்தின் மெல்லிய ரேகைகள் சிவப்பாய்ப் படர்ந்தன. ஓரக் கண்களில் விழிகளைச் செருகி வெட்டித் தலைகுனிந்தாள்.

'நீதான் சொல்லேன். ஏன் சொல்லக்கூடாது!'

'உங்களுக்கென்று ஒரு ஆசையுமே இல்லையா!'

சவுக்கால் அடித்தது போல் என் மார்பு வலித்தது. நீண்ட பெரு மூச்சு விட்டேன். கனலாய்க் கனியும் ஆசைத் தணலை வெளியே விட்டால் மாத்திரம் அது நிறைவேறி விடுமா! லக்ஷாதிபதியின் ஒரே பெண்ணான அவள் எங்கே! ஏழைத் தொழிலாளியான நான் எங்கே! அதிலும் அவள் தந்தையற்றவள்.

'ஆசை இருக்கிறது, சாவித்திரி. ஆனால் அது நிறைவேறுமா!'

'நீங்கள் ரொம்பவும் நெஞ்சழுத்தக்காரர்!' என்று கொஞ்சலாகக் கூறினாள் அவள்.

சற்று முன்பு கண்ணீர் சிந்திய அவள் விழிகள் இப்போது ஒளி வெள்ளத்தில் மிதந்தன. என் நெஞ்சு அந்த ஒளி வெள்ளத்தின் மேற் பரப்பில் நிம்மதியாகப் பள்ளி கொண்டு இங்கு மங்கும் ஆனந்தமாய் ஊசலாடியது.

எனக்குப் பலகாரத்தை எடுத்து வைத்துக் கொண்டே அவள் பேசினாள்: "நீங்கள் ரொம்பவும் நல்ல பிள்ளை என்று என் அம்மா அடிக்கடி சொல்லுகிறார்கள். நல்ல பிள்ளையை மாப்பிள்ளையாக்கிக் கொள்ள யாராவது தயங்குவார்களா!"

வாயில் வைத்த பலகாரம் எனக்கு உள்ளே இறங்க வில்லை. இந்த மாதிரியும் ஒரு இன்பநாள் வரப்போகிறதா! சாவித்திரி என்னுடையவள் ஆகப்போகிறாளா! என் உள்ளம் மேலே, மேலே எழும்பி என் தொண்டையை அடைத்தது.

## 3

சாவித்திரி குத்து விளக்கைத் தூண்டி விட்டாள். அந்த நோட்டின் முதற் பாகத்தைப் புரட்டி மீண்டும் அவனுடைய படத்தை உற்றுப் பார்த்தாள். 'சந்திரா' என்று மெதுவாக முணு முணுத்தது அவள் வாய்.

மேலே படிக்கலானாள்:

என்னால் தொடர்ந்து எழுத முடியவில்லை. துன்பம் என் நெஞ்சைப் பற்றிப் படர்ந்து அதை அரித்துத் தின்கிறது. எங்கள் திருமணத்துக்கு எந்தத் தடையுமே கிடையாது என்று தெரிந்த பிறகு நாங்கள் எழுப்பிய மண மாளிகைகளின் அழகை என்ன வென்று சொல்வது! எங்களைப் போல் இரண்டு பைத்தியக்காரக் காதலர்கள் வேறு எங்குமே இருந்திருக்க மாட்டார்கள். இலக்கியங்களைப் படித்துப்படித்து அவள் லட்சிய வாதியானாள். கவிதையும் காதலும் சேர்ந்து என்னைக் கற்பனாவாதியாக்கியது.

'நீ ஒரு பைத்தியம்' என்பேன்.

'இனம் இனத்தைத்தானே சேரும்!' என்று உடனே பதில் வரும்.

அவள் எதிர்காலத்தைப் பற்றி என்னிடம் விசித்திரமாகவும் வேடிக்கையாகவும் பேசினாள்.

'அடுத்த வருஷம் என் படிப்பு முடிந்து விடும். உடனே நமக்குக் கல்யாணம். கல்யாணம் ஆன பிறகு நீங்கள் இந்த வேலையை விட்டுவிட வேண்டும். எப்போதும் கவிதை எழுதிக் கொண்டே இருங்கள். நம்மிடந்தான் பணக் கஷ்டம் இல்லையே! உலகம் முழுவதும் சுற்றி வருவோம். —கட்டற்ற கானக் குயில் போல் நீங்கள் என்னருகில் இருந்து கூவிக் கொண்டிருங்கள். உங்கள் கவிதையை ஒரு நாள் உலகம் புகழப் போகிறது. அது நிச்சயம். அந்த நாள் அதிக தூரத்திலில்லை. அப்போது எனக்கு எத்தனை ஆனந்தம் தெரியுமா!'

'எத்தனை ஆசை அவளுக்கு' என்று நினைப்பேன் நான். அவளுடைய கண்களின் ஒளி அப்போது அபூர்வமாய்ச் சுடர் விடும்.

எங்கள் இதயங்கள்தான் ஒன்றுக் கட்டுண்டு கிடந்தனவே தவிர, நாங்கள் தூரத்திலிருந்தே பழகினோம். பண்பையும் கண்யத்தையும் துணை கொண்டே எங்கள் இன்பக் கனவுகளை வளர்த்தோம். எங்களுக்கு மத்தியில் தான் எந்த விதமான தடையுமே கிடையாதே! அவசரம் எதற்கு! ஆத்திரம் எதற்கு! ஆனால்......

யாரை நான் நொந்து கொள்வது! கடவுளுக்கு இந்த ஏழைக் காதலனிடம் கருணை இல்லை. அவருக்கு எங்கள் மீது பொறாமை. காதலர்களின் சந்தோஷம் இந்த உலகத்துக்குத்தான் பொறுக்கா தென்றால், இதைப் படைத்த கடவுளுக்கும் அப்படித்தானா! ஆச்சரியந்தான்!

கிடைக்கும் இன்பத்தைக் கௌரவமாக வரவேற்பதற்காக நான் அவளுக்குத் தெரியாமல் உழைத்தேன். கல்யாணச் செலவுக்குப் பணம் வேண்டாமா! காசைப் பற்றிய கவலை என் வாழ்வில் முதன் முதலாகவும் ஏன், கடைசியாகவும் ஏற்பட்டது. இயந்திரமும் நானும் போட்டி போட்டுக் கொண்டு உழைத்தோம்.

இரண்டு மடங்கு வேலைகள் செய்தேன். இரண்டு மடங்கு கூலி பெற்றேன். ஆனால் அதோடு என் உழைப்புக்கு இன்னொரு பலனும் கிடைத்தது. பயங்கரமான நிகழ்ச்சி அது. என்னுடைய வாழ்வின் முதல் அபாய அறிவிப்பு.

இயந்திரத்தின் அருகில் நின்ற எனக்குத் திடீரென்று ஒரு நாள் மயக்கம் வந்தது. தலை சுற்றியது. இடைவிடாமல் இருமினேன். ரத்தமும் கபமும் குபீரென்று வாய் வழியே வந்து கொட்டின. சிறு கூட்டம் என்னைச் சுற்றிலும் கூடி விட்டது. எனக்கு க்ஷயரோகமாம்......!

வேலைக்குச் சீட்டும் கையில் பணமும் கொடுத்தனுப்பினார்கள். அன்று மாலை நான் நேரே வீட்டுக்கு வரவில்லை. டாக்டரிடம் சென்று பரிசோதித்துக் கொண்டேன். தனிமையில் உட்கார்ந்து மூளை குழம்பும் வரையில் யோசித்தேன். இதற்கு என்ன வழி! டாக்டர் 'இது பணக்காரர்களுக்கு வர வேண்டிய வியாதி' என்று கூறினார். ஏன் இந்த ஏழைக்கு அது வந்தது! பணக்காரப்



## தமிழக வரலாறு

பேராசிரியர்கள் ஆறு பேர்களின் சொற்பொழிவுத் தொகுதி இது. தமிழக வரலாற்றை, சங்க காலம், பல்லவர் காலம், சோழர் காலம், பாண்டியர் காலம், நாயக்கர் காலம், ஆங்கிலேயர் காலம் என்று ஆறு பகுதிகளாகப் பிரித்துக் கொண்டு ஒவ்வொருவரும் ஆராய்ச்சி மிக்க சொற்பொழிவுகள் நிகழ்த்தி யிருக்கிறார்கள். தமிழ் நாட்டுச் சரித்திரத்தை ஆற்றொழுக்காகப் படித்துத் தெரிந்து கொள்ள விரும்புகிறவர்களுக்கு இந் நூல் நல்ல துணையாகும்.

பிரசுரம்: திருநெல்வேலி, தென்னிந்திய சைவ சித்தாந்த நூற்பதிப்புக் கழகம் லிமிடெட், 1/140, பிராட்வே, சென்னை 1; விலை: ரூ. 4.

---

பெண்ணை நான் காதலிப்பது அதற்குக் கொஞ்சமும் பொறுக்க வில்லையா!

மறுநாள் காலையில் அவள் வந்தாள். 'ஏன் உங்கள் கண்கள் சிவந்திருக்கின்றன! ஏன் நெற்றியில் இந்தச் சுருக்கம்! ஏன் இப்படிச் சோர்ந்திருக்கிறீர்கள்!' என்று கேட்டாள்.

'நான் ஒன்று கேட்பேன்; கோபித்துக் கொள்ள மாட்டாயே!'

'எப்போதாவது உங்களிடம் எதற்காகவாவது கோபித்துக் கொண்டிருக்கிறேனா!'

'திடீரென்று நான் செத்துப் போய் விட்டால் நீ என்ன செய்வாய்!'

'இன்னொரு முறை அப்படிச் சொல்லாதீர்கள்.' கண்ணீர்த் துளிகள் அவளுக்கு வெடித்துச் சிதறி விழுந்தன.

'பதில் சொல், சாவித்திரி! திடீரென்று நான் செத்துப் போனால்...'

பாய்ந்து வந்து அவள் என் வாயை இறுகப் பொத்தினாள். மூன்று நான்கு வருஷப் பழக்கத்தில் முதல் முதலாக இன்று தான் அவள் என்னைத் தொடுகிறாள். ஐயோ! அந்த முதல் ஸ்பரிசத்தின் இன்ப உணர்வை என்னால் சாகும் வரை மறக்க முடியாது.

அப்படியே அவளுடைய இரு கரங்களையும் பற்றிக் கண்களில் ஒற்றிக் கொண்டு கதற நினைத்தேன். நடந்ததெல்லாம் சொல்லி விட்டு, எங்காவது கண் காணாமல் ஓடிப்போக விரும்பினேன். ஆனால் அப்படிச் செய்ய வில்லை.

'பதில் சொல்லப் போகிறாயா! இல்லையா!' என்றேன் அவளிடம் கண்டிப்பாக.

அவள் பயந்து விட்டாள். 'உங்களுக்கு அப்படி ஒன்றும் வராது. உங்களை நான் சாகவிட மாட்டேன். முன்பொரு சாவித்திரி தன் கணவனைக் காப்பாற்ற வில்லையா! நானும் அவள் வழியில் வந்தவள் தானே!'

என் உள்ளம் சிலிர்த்தது. சாவித்திரியின் கண்களில் இப்போது ஓர் அற்புத ஒளியைக் கண்டேன். அவள் நெருப்பைப் போன்றவள்.

'நீ இறந்து போனால் நான் உடனே வேறு கல்யாணம் செய்து கொள்வேன். நீயும் அப்படித் தான் செய்ய வேண்டும். வீணாக இலக்கியத்தில் வரும் சாவித்திரியை நினைத்துக் கொண்டு வாழ்வைப் பாழாக்காதே.'

என் கண்களின் வாயிலாக அவள் என் மனத்தை ஆராய்ந்தாள். 'உங்களை எனக்கு நன்றாய்த் தெரியும். என்னிடம் எதையோ சொல்லாமல் மறைக்கப் பார்க்கிறீர்கள்' என்றாள்.

ஆனால் நான் எதையும் சொல்லவில்லை.

வேலையிலிருந்து விலக்கப் பட்டிருப்பதை அவளுக்குத் தெரியாமல் நடந்து கொண்டேன். வேலை நேரத்துக்கு ஆற்றங்கரையின் தனிமைக்குப் போய் விடுவேன். டாக்டரிடம் சென்று ஊசி போட்டுக் கொள்வேன். ஹோட்டலில் வழக்கம்போல் சாப்பாடு நடக்கும். கையில் கல்யாணத்துக்காகச் சேர்த்த காசு கரைந்து கொண்டிருந்தது.

ஆரம்பத்திலேயே நான் அவளிடம் நடந்ததைச் சொல்லி யிருக்கலாம். ஏனோ சொல்லவில்லை. ஆனால் நான் வாழவே முயன்றேன். தீவிரமாக நோயோடு போராடி வெற்றி பெறப் பார்த்தேன். அவளைக் காதலித்த என் ஒருவனுக்குத்தான் எதிர் காலக் கனவுகளின் அருமை தெரியும். நான் உள்ளமும் உணர்வும் உள்ள மனிதன். அதிலும் இளைஞன். சாவித்திரியின் அன்பைப் பெற்றவன். வாழ்வின் இளமைக் கனவுகளை நனவாக்காமல் போவதென்றால், அந்தத் துயரத்தின் கொடுமை யாருக்காவது தெரியுமா!

கடைசியில் நான் உண்மையைத் தெரிந்து கொண்டேன்: என்னை இனி யாராலும் காப்பாற்ற முடியாது. ஆகையால் நான் சாவித்திரியைக் காப்பாற்றியாக வேண்டும். என்னுடைய பிடியிலிருந்து அவளை விடுவிக்க வேண்டும். அவள் வாழத் தெரியாதவள். லட்சியப் பைத்தியம். பிடிவாதக்காரப் பெண்.

கதையில் வந்த சாவித்திரி கணவனுக்காகப் போராடி அவன் உயிரை மீட்டாள். இந்தியப் பெண்ணுக்குக் கணவனுக்குப் பின்பு வாழ்வு கிடையாது. ஆனால் இவள் அப்படி அல்ல. வாழ்வின் வசந்தம் இவளுக்காகக் காத்திருக்கிறது. கடவுளே! ஏழையாகிய நான் காதலித்த ஒரே குற்றத்துக்காக நீ என்னைப் பழி தீர்த்துக் கொண்டாய். போதும்! அவளையாவது காப்பாற்று.

### 4

குத்து விளக்கில் எண்ணெய் தீர்ந்து திரி எரியத் தொடங்கியது. ஊதுவத்திகள் எரிந்து முடிந்து சாம்பலாய் உதிர்ந்தன. சாவித்திரி மீண்டும் விளக்கு நிறைய எண்ணெய் வார்த்தாள். புதிய ஊதுவத்திகளைக் கொளுத்தி வைத்தாள்.

கடைசிப் பக்கங்களில் அவன் எழுதியிருந்தான்:

வாழ்வில் நான் திறம்பட நடித்தாக வேண்டிய கடைசிக் கட்டம் இது. திரை விழப் போகிறது. வேளை நெருங்கி விட்டது. அதற்குள் நான் இதை எழுதி முடித்துப் படிக்க வேண்டும். என்னுடைய அருமை எழுத்துக்களே! கவிஞனின் கற்பனையே! காதலனின் கவின் கனவே! நீங்கள் எனக்குப் பின் உயிருடன் இருக்கக் கூடாது. அவள் பார்த்து விடுவாள். ஆகையால், உங்களைத் தீயில் போட்டுப் பொசுக்கப் போகிறேன்.

நான் அவளிடம் உண்மையைக் கூற முடிவு செய்து விட்டேன். அன்றைக்கு அவள் கருப்புக் கரை போட்ட வெள்ளைச் சேலை உடுத்தி யிருந்தாள். வெள்ளை நிற ஜாக்கெட்; அந்தத் தூய்மையான வெண்மையில் நான் எங்கள் அன்பைக் கண்டேன். கருப்புக் கரையில் என்னுடைய துன்பம் நன்றாகத் தெரிந்தது.

'சாவித்திரி! எனக்கு க்ஷயரோகம்; இனி நான் பிழைக்க மாட்டேன்!'

கத்தியால் ஓங்கி அவள் மார்பில் குத்தினால் அவள் எப்படிக் கதறுவாள்! எப்படிப் பயங்கரமாய் விழிப்பாள்! எப்படித் தடாரென்று

# இயற்கையின் நடுவே அழகு

## அழகுக்குக் காரணம் வாயில்

அச்சடித்த, சாயம் ஏற்றிய மெர்ஸிரைஸ்
செய்யப்பட்ட




சுதேசியே வாங்குங்கள்
சிறந்ததையே வாங்குங்கள்

# மிகச் சிறந்த நித்திரை - கால பானம் இதோ இருக்கிறது -



— நல்ல தூக்கத்தை அனுபவிக்க உங்களுக்கு உதவிபுரிய !

நாள் பூராவும் உழைத்துக் களைப்படைந்த பிறகு நரம்புகளுக்கு புத் துணர்ச்சி அளித்து, உடல் போஷாக்கு அளிக்கும் மிகச் சிறந்த நித்திரை கால பானமாக விளங்குகிறது ஓவல்டின் ! இந்த இனிமையான ஊக்க மளிக்கும் பானத்தை இரவில் அருந்தினால் சுகமான, அயர்ந்த நித்திரை ஏற்படுகிறது. தூங்கும்போது, ஓவல்டினிலுள்ள மதிப்பு மிகுந்த போஷாக்குச் சத்து செலவழிந்த சக்தியைத் திரும்ப அளித்து, மறு நாளைய உழைப்புக்கு உடலைத் தயாராக்குகிறது.

முதிர்ந்த பார்லி மால்ட், சுத்தமான பசுவின் க்ரீம் பால், பிரத்யேகமாகத் தயாரான கொக்கோ, இயற்கையான பாஸ்பேடட்ஸ், வைட்டமின்கள் சேர்த்து இந்த பானம் தயாரிக்கப்படுகிறது. இத்துடன் B & D வைட்டமின்கள் சேர்த்தும் நிரப்பிக்கப்படுகிறது. உங்கள் ஸ்டோரில் ஓவல்டின் கேளுங்கள் - அதுபோன்று வேறெதுவும் இல்லை!

விநியோகஸ்தர்கள்: கிரஹாம்ஸ் ட்ரேடிங் கோ., (இந்தியா லிட்.)

# ஓவல்டின்

## இனிய ருசியுடன் ஊக்கமளிப்பது




சனிக்கிழமைகளில் இரவு 8 முதல் 8-30 வரை ரேடியோ ஸிலோனில் (அல்லது 41-72 மீட்டர்கள்) ஓவல்டின் அமைச்சூர் நேரத்தைக் கேளுங்கள்

IV. 440

தரையில் விழுந்து துடிப்பாள்!- இந்தச் சோகக் காட்சியை நான் கண்ணாரக் கண்டேன்.

அவளுடைய தாயாரிடமும் நான் எதையும் ஒளிக்கவில்லை. 'எனக்காக நீங்கள் உங்கள் உழைப்பையும் பொருளையும் வீணாக்க வேண்டாம். நான் கொடுத்து வைக்காதவன். இனிமேல் என்னை யாராலும் காப்பாற்ற முடியாது. சாவித்திரிக்கு ஆறுதல் சொல்லுங்கள்.'

மயக்கம் தெளிந்து சாவித்திரி எழுந்தாள். உடன் வந்திருந்த தாயாரை அழைத்துக் கொண்டு வீட்டுக்குச் சென்றாள். வீட்டில் அவளுக்கும் தாயாருக்கும் என்ன பேச்சு நடந்ததோ, தெரியாது. அடுத்த சில மணி நேரத்தில் என்னுடைய வீட்டுக்கு முன்னால் கார் வந்து நின்றது. நகரத்தின் பெரிய டாக்டர் தமது பரிவாரங்களுடன் வந்து இறங்கினார்.

ரத்தப் பரிசோதனை நடந்தது. எக்ஸ்ரே எடுக்கப் பட்டது. ஊசிமேல் ஊசியாகக் குத்தினார். வீடு முழுதும் மருந்துப் புட்டிகள் நிறைந்தன. என்னால் சிகிச்சைத் தொல்லை சகிக்க முடியவில்லை.

இதற்கிடையில் யாருக்கும் தெரியாமல் என் இதயத்தைக் காட்டும் இந்தக் குறிப்பை வேறு தொடர்ந்து எழுத வேண்டியிருக்கிறது.

பகல் முழுவதும் அவள் என்னோடிருக்கிறாள். தனக்கும் வியாதி வரக்கூடும் என்ற பயமே அவளுக்கில்லை. இரவில் அவள் வீட்டுக் காவற்காரன் வேறு இங்கு துணைக்கு வந்து விடுகிறான். அவளும் நன்றாய்த் தூங்கிய பிறகே இதை நான் எழுத முடிகிறது.

நடிப்பின் முதற் காட்சி தொடங்கியது. கடவுளே! நீ எனக்கு உயிரைத்தான் தரப் போவதில்லை. நடிக்கும் திறனையாவது கொடு.

அவள்மீது நான் காரணமில்லாமல் எரிந்து விழுந்தேன். எதற்கெடுத்தாலும் சிடுசிடுத்தேன். இரக்கமின்றி அவளைத் திட்டினேன். ஆம்; நான் செத்தவுடன் அவள் எனக்காகக் கண்ணீர்கூட விடக்கூடாது அல்லவா!

அவள் போன பிறகு தலையணையில் தலையைக் கவிழ்த்துக் கொண்டு விம்மி விம்மி அழுதேன். கண்ணீர் ஊற்றெடுத்துப் பெருகியது. இதற்கிடையில் குறிப்பெழுதுவதை நிறுத்தவில்லை.

பொழுது புலர்ந்து கொண்டிருந்தது. அவள் தன் வீட்டிலிருந்து என்னிடம் புறப்பட்டு வந்து கொண்டிருப்பதை ஜன்னல் வழியே கண்டு விட்டேன். திடீரென்று வேலைக்காரனிடம் என் ஆர்ப்பாட்டத்தைத் தொடங்கினேன். பௌர்ணமிக்கு இன்னும் இரண்டு நாள் கூட இல்லை. அதற்குள் அவள் மனத்தை மாற்றியாக வேண்டும். ஏனோ இந்தப் பௌர்ணமிக்குள் நான் போய் விடுவேனென்று எனக்குத் தோன்றுகிறது.

நான் கத்தினேன்: 'உங்கள் தொல்லையை என்னால் தாங்க முடியவில்லை. என்னைத் தனியே விட்டு விட்டுப் போக மாட்டீர்களா!'

அதோ, அவள் கதவருகில் வந்து விட்டாள்.

தலையணையைத் தூக்கி வேலைக்காரன் முகத்தில் கோபமாய் வீசினேன். கண்ணாடித் தம்ளரைச் சுவரில் மோதிச் சுக்கு நூறாக்கினேன். மருந்துப் புட்டிகளைக் கீழே உருட்டி விட்டேன். தலைமயிரைப் பிய்த்துக் கொண்டேன்.

'போங்கள்! போங்கள்! எனக்கு யாருமே வேண்டாம்; யாரையுமே பிடிக்கவில்லை.'

சாவித்திரி என்னைக் கவனித்தாள். அவள் முகத்தில் வெறுப்பின் ரேகை படரப் போகிறதென்று ஓரக் கண்களால் அவளைப் பார்த்தேன். என்ன ஏமாற்றம். எப்பொழுதும் என்னிடம் அவளுக்குக் கோபமே வராதா!












'இவர் பண்ணுகிற ஆர்ப்பாட்டம் பொறுக்க முடியவில்லையம்மா! உங்களைக் கண்டால் இவருக்கு வெறி வந்து விடுகிறது' என்முன் வேலையாள்.

'அவர் மேல் ஒரு தவறும் இல்லை. அவர் தவறே செய்ய மாட்டார். நோய் இப்படி அவரை ஆட்டி வைக்கிறது. ஐயோ! வெறித்துப் பார்க்கிறாரே! பல்லைக் கடிக்கிறாரே! ஜன்னி கண்டு விட்டதோ! ஓடிப் போய் டாக்டரைக் கூட்டி வா.'

'போதும் இந்தப் பாசாங்கு. பெண்ணுக்கு இத்தனை ஆசை கூடவே கூடாது. நான் உன்னைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன்.'

'நீங்கள் பிழைத்தெழுந்தால் போதும். அப்புறம் உங்கள் இஷ்டப்படி செய்யுங்கள். நான் கன்னியாகவே இருக்கிறேன்.'

இம்முறையும் நான் தோற்று விட்டேன்.

பௌர்ணமி இரவு வந்தது. சக்திக்கு மீறிய கடிப்பின் விளைவால் ஒவ்வொரு கணுவும் வலித்தன. மூச்சடைப்பு அதிகமாயிற்று. நான் அதிக நேரம் இனித் தங்க மாட்டேன். சாகப் போகிறவனுக்கு எப்படியோ அவனுடைய முடிவு நேரம் கண்ணுக்குத் தென்படுகிறது.

வழக்கமாய் அவள் இரவில் வருவதில்லை. வேலையாளும் குறட்டை விடுகிறான். இந்தக் குறிப்பை இப்போதே எழுதி முடிக்க வேண்டும்; படிக்க வேண்டும்; எரிக்க வேண்டும்!

இனி நான் அவளிடம் தோற்கப் போவதில்லை. காதலின் பலவீனத்தோடும் இளகிய நெஞ்சோடும் நடந்தால் காரியம் பலிக்காது. மிருகத்தனமாய் அவளை நடத்தப் போகிறேன். எந்த மிருதுவான கன்னத்தில் என் கனவுகளையெல்லாம் பதிக்க நினைத்தேனோ, அந்தக் கன்னத்தில் விரல் பதிவு மளவுக்குப் பளீரென்று அறையப் போகிறேன். மல்லிகை மலரைச் சூட நினைத்த அவளது கருங் கூந்தலைப் பிய்த்துச் சின்னா பின்னப் படுத்தப் போகிறேன். எனக்குள்ளே தெய்வமாய் வைத்து நான் வணங்கும் அவள் அழகான மேனியை எட்டி உதைத்துக் கீழே தள்ளப் போகிறேன்.

இதிலும் முடியா விட்டால்!

எந்த வார்த்தையைச் சொன்னால் பெண் சீறிக் கொண்டு வருவாளோ, நாகப் பாம்பு போல் விஷம் கக்குவாளோ, அதைச் சொல்லி அவள் மனத்தைப் புண்ணாக்கப் போகிறேன். நானினால் கட்ட வடு ஆறாது. அவள் என்னை மறந்து விடுவாள். அப்படியும் அவள் என்னை மறக்காவிட்டால் அது என் தவறு; காதலின் தவறு.

போதும்! மூச்சுத் திணறுகிறது. நெஞ்சை அடைக்கிறது. இது அவசரமான முடிவுதான். சாவித்திரி! உனக்குப் பகவத் கீதையின் இந்த வார்த்தைகளுக்குப் பொருள் தெரியுமா! 'அன்பு செய்வோரும் அழிவர்; அன்பு செய்யப் படுபவரும் அழிவர்; அன்பு மாத்திரம் அழியாது'. சாவித்திரி! என் அன்பே, சாவித்திரி!

** ** **

நோட்டை மூடி வைத்த பின் குத்துவிளக்கைக் கையமர்த்தி விட்டு ஜன்னலோரமாய் வந்து நின்றாள் சாவித்திரி. இந்தப் பௌர்ணமி இரவு பல வருஷங்களுக்கு முன்பு வந்த அந்தக் கடைசி இரவின் நினைவைக் கொண்டு வந்தது.

சாவித்திரி அன்றைக்கு வழக்கத்துக்கு விரோதமாய் ஏனோ நள்ளிரவில் புறப்பட்டுச் சந்திரன் வீட்டுக்கு ஓடி வந்தாள். கதவு சும்மா சாத்தியிருந்தது. வேலைக்காரன் நன்றாய்த் தூங்கிக் கொண்டிருந்தான். என்ன அது! இருமலோடு இருமலாய் உயிரைக் கையில் பிடித்துக் கொண்டு எதை அப்படி எழுதுகிறான்!

சாவித்திரியைக் கண்டு அவன் திடுக்கிட்டான்.

'இந்த நேரத்தில் உனக்கு இங்கே என்ன வேலை! இளம் பெண் இப்படித் தனியாக வரலாமா! நீ பெண் தானா!'

அவள் அவன் அருகில் நெருங்கி அவன் வாயைப் பொத்தினாள். பொத்திய கரங்களைப் பற்றி இழுத்தான் சந்திரன். பளீரென்று அவள் கன்னத்தில் ஒரு அறை! தன் பலமெல்லாம் சேர்த்து அவளைப் பிடித்துக் கீழே தள்ளினான்.

'போகிறாயா, இல்லையா!'

அவன் எழுதிய நோட்டு இப்போது அவள் கைக்கு வந்து விட்டது. பிரிக்கப் போனாள். இப்போது அவன் ஏன் அப்படிப் பரிதாபமாய்ப் பார்க்கிறான்! இதழ்கள் துடிக்கின்றனவே! அவனால் பேச முடியவில்லையா!

'வேண்டாம், சாவித்திரி! சாவித்திரி!'

அவன் தலை சுற்றித் தரையில் விழுந்தான். சாவித்திரி அவனை மெதுவாய்த் தூக்கித் தன் மடியில் கிடத்திக் கொண்டாள். அவனால் ஒன்றும் பேச முடியவில்லை. கண்கள் அவளையே பார்த்துக் கொண்டிருந்தன. மெல்ல இரு கரங்களையும் தூக்கிக் கடைசியாகக் கும்பிட்டான். உடனே அவன் தலை ஒருபுறமாய்ச் சாய்ந்தது.

சாவித்திரியின் நெஞ்சில் அன்றைக்குப் பாய்ந்த வைரத்தின் விளைவுதான் இந்த ஆஸ்பத்திரி. அவன் இறந்த மறு வருடமே வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து ஐந்தாறு வருடங்கள் படித்தாள். பின்பு சென்னைப் பெரிய ஆஸ்பத்திரியில் தனியாக க்ஷயரோகத்தைப் பற்றிப் பயிற்சி பெற்றாள். தன் சொத்து முழுவதையும் கொட்டி, உழைப்பு முழுவதையும் மூலதனமாக்கிச் சிறு ஆஸ்பத்திரியாக இதைத் தொடங்கினாள். இப்போது அவளிடம் வந்து எத்தனையோ ஏழை எளியவர்கள் நோயிலிருந்து விடுதலை பெறுகிறார்கள்.

அவளுக்கும் அவனுடைய அன்பனின் ஆவிக்கும் பிறந்த செல்லக் குழந்தை இந்த ஆஸ்பத்திரி. ஆகையால் தம்பி! சீக்கிரம் போ! கவலைப் படாதே! நீ விரைவில் குணமடைவாய்!

---

## சுடர்

புது டில்லித் தமிழர்களின் விசேஷ ஆதரவோடு டில்லித் தமிழ்ச் சங்கத்தாரால் ஆண்டுக்கு ஒரு முறை "சுடர்" வெளியிடப்படுகிறது. கட்டுரைகள், கவிதைகள், கதைகள், நாடகம் முதலிய பல பகுதிகளையும் கொண்டு இந்த ஆண்டு இதழ் சுடர் விட்டுப் பிரகாசிக்கிறது.

பேராசிரியர் கெ. ஆர். மயிலேறு அவர்கள் எழுதியிருக்கும் "ஆருடம் பலிக்குமா, தந்திரம் பலிக்குமா!" என்னும் ஹாஸ்ய நாடகம், கப்புவின் "சத்தியமே ஜெயம்" என்னும் கட்டுரை, அநுத்தமாவின் "உயிர் நாடி" என்னும் சிறு கதை—இவை போல் படித்து ரசிக்க வேண்டிய பல பொருள்களைக் கொண்டிருக்கிறது. சைத்திரிகர்கள் பாலு சகோதரர்கள் தயாரித்திருக்கும் அட்டைப்படம் கண்ணையும் கருத்தையும் ஒருங்கே கவர்கிறது.

பிரசுரம்: டில்லித் தமிழ்ச் சங்கம், புதுடில்லி; விலை: ரு. 1—0—0.

---




# புதிய டிஸோடோ டிரக்குகள்

## ஒழுங்காகச் செய்கின்றன

உழைப்பிற்கும், நிலைத்திருப்பதற்குமாக தயாரிக்கப்பட்டுள்ள புதிய டிஸோடோ டிரக்குகளுக்கு எப்படிப்பட்ட தூக்கிச் செல்லும் வேலையாயிருந்தாலும், எவ்வளவு கனமாயிருந்தாலும் சிரமமான காரியமேயில்லை. டிரக் அமைப்பில் வியக்கத்தக்க சீர்திருத்தங்களோடும், இயந்திர வசதிகளோடும் கூடினவே இந்த சக்தி வாய்ந்த டிஸோடோ டிரக்குகள்.

* புது மோஸ்தரில் அமைக்கப்பட்ட முன்புறம்
* சக்கரங்களுக்கிடையே அதிக நீளம்
* அதிக ஹார்ஸ் பவர் கொண்டது
* பிரேக் இடுவதில் அதிகரித்த பாதுகாப்பு வசதி
* உறுதி மிக்க, அதிர்ச்சியை தவிர்க்கும் ஸ்பிரிங்குகள்

* பலவகை வீல் பேஸ் அளவுகளோடும், அதிக கனம் தாங்கும் சக்தியோடும் மாடல்கள் கிடைக்கின்றன.

இன்றே உங்கள் டிஸோடோ வியாபாரியை சந்தியுங்கள். அவர் இன்னும் பல சிறந்த புதிய அம்சங்களை எடுத்து காட்டுவதோடு உங்கள் வேலைக்குகந்த டிஸோடோ டிரக்கையும் சிபார்சு செய்வார்.

ரானே (மதராஸ்) லிமிடெட்
[பட்டுல்லோ ரோடு :: மதராஸ்-2

முன்னேற்றத்தோடு தயாரிப்பவர்கள் :-

**தி பிரீமியர் ஆட்டோமொபைல்ஸ் லிட்.**

ஆக்ரா ரோடு, குர்லா பம்பாய்.

SISTA'S PAL-134 TAMIL

# ரத்த பாசம்

ஸோமாஸ்

அவனுக்கு இருக்க இடமில்லை; உண்ண உணவில்லை; உற்றாரில்லை; உறவினரும் இல்லை; அவன் ஓர் அனாதை; ஆனால் ராஜா!

அவளுக்கு வயோதிகத் தகப்பன் இருந்தான்; தாய் இல்லை; சேர்ந்தவர்கள் என்று சொல்லிக் கொள்ள வேறு யாரும் இல்லை; இந்தக் குடும்பத்துக்குத் துணையாக இருந்தது வறுமைதான்; வறுமையை ஓரளவு சமாளிக்கப் பிச்சை எடுக்கும் தொழில் இருந்தது; அந்தத் தொழிலுக்கு மூலதனமாக அவளிடம் ஆடலும் பாடலும் இருந்தன; அவள் கதியற்றவள்; ஆனால் அவள் ராணி!

இது புதிர் இல்லை. அல்லை புரடக்ஷன்ஸ் தயாரித்திருக்கும் "ரத்த பாசம்" என்னும் படத்தில் வரும் கதாநாயகன், கதாநாயகி இவர்களைப் பற்றிய கதை.

ராஜா, ராணியைச் சந்தித்தான்; அவள் நடிப்பில், பாட்டில், கருவிழிகளின் கனவேக சஞ்சாரத்தில், நெஞ்சை அள்ளும் அபிநயத்தில் தன்னை மறந்தான். அவர்கள் இருவரும் சந்தித்தது அரண்மனை அந்தப்புரத்தில் அல்ல; மந்தமாருதம் வீசும் நந்தவனத்தில் அல்ல; பின் எங்கே!

ராஜாவும் ராணியும் சந்தித்தது பம்பாய்ப் பட்டணத்தில் நாற்சந்தி கூடும் இடத்தில்! ராணி அந்த முதல் சந்திப்பிலேயே, வீடுவாசலற்ற ராஜாவுக்குத் தன் இதயத்தில் குடி புக இடம் கொடுத்தாள். அதே மாதிரி அனாதை ராணிக்கும் ராஜாவின் இதயத்தில் தாராளமாக இடம் கிடைத்தது. ஒன்று சேர்ந்த ராஜா-ராணிக்கு வறுமை வாழ்த்துக் கூறியது.

ராஜா, ராணியின் குடும்பத்தில் ஒருவனானான். ராணியின் தகப்பன் தெருவில் கார் விபத்தில் சிக்குண்டு படுகாயமுற்றபோது, ராஜா தெய்வம் போலத் தோன்றி அவனைக் காப்பாற்றினான்; முதல் இல்லாத தன் தொழில் திறமையினால் அந்தக் குடும்பத்துக்குப் பல விதத்திலும் உதவி செய்தான். நிற்க!

சென்னைப் பட்டணத்தில், வறுமையின் வாசனையே தெரியாமல், அழகு மனைவி சரளாவுடனும், ஆசைச் செல்வனுடனும் ஆனந்தமாக வாழ்ந்து வந்தான் பெரிய முதலாளி ரகு.

இப்படி அமைதியாக வாழ்ந்து வந்தால் போதுமா! திரைக் கதையில் திகைத்து நிற்பதற்கு அத்தகைய அமைதியான வாழ்வில் சந்தர்ப்பம் ஏது!

ரகு, பம்பாயிலுள்ள தனது கிளைக் கம்பெனியின் கணக்குகளைப் பரிசீலனை செய்யப் புறப்படுகிறான்; மனைவி சரளாவிடம் பிரியாவிடை பெற்றுக் கிளம்புகிறான்.

பம்பாய்க் கிளைக் கம்பெனியை நிர்வகித்து வந்த மது, பெயருக்கேற்ற குணமுடையவன்; சூழ்ச்சியின் உருவம் அவன்; பழிக்கு அஞ்சாப் பாதகன்; கம்பெனியின் பணத்தை ஆயிரக்கணக்காக விழுங்கிய அயோக்கியன்; திரைக் கதையின் திருப்பு முனையாக அமைந்த 'வில்லன்' அவன். இத்தகைய கதாபாத்திரத்தில் நடிப்பதற்கு ஒரு நல்ல நடிகர் தேவைப்பட்டால், தமிழ் நாட்டில் ஸ்ரீ பாலையாவைத் தவிர வேறு யார் உண்டு! அவரையே இப்படத்தில் பிடித்துப் போட்டிருக்கிறார்கள்.

மதுவினுடைய சூழ்ச்சிகளுக்குப் பல விதத்திலும் கை கொடுத்து வந்தாள் மனோரமா. கம்பெனி முதலாளி ரகு கணக்குத் தவறுகளைக் கண்டு பிடிக்காமல் இருக்க மனோரமாவைப் பயன்படுத்திக் கொள்ளுகிறான், மது. மனோரமாவின் எழிலிலும், சாகஸத்திலும் ரகு மதுவுண்டவன் போல் மயங்கித் திகைத்துப் போகிறான்.

அதன் பலனாக, சென்னையிலிருந்த ரகுவின் கம்பெனி விற்கப்படுகிறது. ரகுவின் மனைவி சரளாவும் குழந்தையும் அனாதைகளாக்கப்படுகின்றனர். நிலைமையை அறிந்த சரளா குழந்தையுடன் பம்பாய்க்குப் புறப்படுகிறாள், கணவன் ரகுவைக் காணும் நோக்கத்துடன். நிற்க!

ஒருநாள் ராஜா. ரகுவிடம் தன் தொழில் திறமையைக் காண்பிக்கிறான் ('பிக்பாக்கெட்' வேலை செய்கிறான்.) கிடைத்த வருமானத்தைக் கணக்கிடும்போது, அந்தப் பர்ஸில் சில புகைப்படங்களைக் காண்கிறான்; அவற்றின் மூலம், தன் சென்று போன வாழ்க்கையை மனக் கண்ணில் காண்கிறான். ரகு தன் உடன் பிறந்த சகோதரன் என்பதை உணருகிறான்.

தமிழ் நாடகமேடையின் தலைசிறந்த நடிகராகிய ஸ்ரீ டி. கே. சண்முகம் இந்தப் படத்தில் ராஜாவாகத் தோன்றி அபாரமாக நடித்திருக்கிறார்.

நடுத்தெருவில் முடிச்சுமாறி வேலையைச் சாமர்த்தியமாக நடத்துவதிலிருந்து, ராணியின் காதலுக்குப் பாத்திரமானது, அவளுடன் 'டல்லு டல்லு டல்லு' என்ற பாட்டைப் பாடிக் கொண்டு ஆடியது, ராணியின் அன்புக் கட்டளையினால் தன் தொழிலுக்கே ஒரு முழுக்குப் போட்டுவிட்டு நல்லவனாக மாறியது, நல்லவனாக மாறிய சந்தர்ப்பத்தில் சிறை சென்றது—இப்படி எல்லாக் கட்டங்களிலும் ஸ்ரீ சண்முகத்தின் நடிப்பு இணையற்று விளங்குகிறது.

சகோதரர்கள் சந்திக்கின்றனர். ரகு ராஜாவைக் கண்டதும் ரத்தபாசம் காரணமாகத் தடுமாறுகிறான். பாசம் அவனை அணைத்துக் கொள்ளத் தூண்டுகிறது. ஆனால் அந்தஸ்து குறுக்கே நின்று விலக்குகிறது. அந்தஸ்தும் பாசமும் ரகுவைப் படுத்தி வைக்கும் பாடு படம் பார்ப்பவர்களை உணர்ச்சி வசப்படுத்துகிறது. அதிலும்

## ராம நாமம்

ஸ்ரீ ராம நாமத்தின் சிறப்பைக் காந்தியடிகள் தமது ஏழாவது பிராயத்தில் முதன் முதலில் உணர்ந்தார். பிறகு அவர் வாழ்நாள் முழுவதிலும், பல்வேறு சந்தர்ப்பங்களில் அதன் அளப்பரும் ஆற்றலை உணர்ந்தார். கடைசியில் "ஹே ராம்!" என்று சொல்லி ராம பிரானின் திருவடியைச் சேர்ந்தார். அத்தகைய மகான் பிரார்த்தனையைப் பற்றியும் ராமநாமத்தைப் பற்றியும் கூறியுள்ள அமுத மொழிகளை நூலாகத் தொகுத்து வெளியிட்டிருக்கிறார்கள். யாவரும் படித்துப் பயனடைய வேண்டிய நூல்.

கிடைக்குமிடம்: ஸர்வோதயப் பிரசுராலயம், தேவ்ஜீ காலனி, திருப்பூர்; விலை அணா 12.

அறியாதவனைப் போல் நடந்து கொண்ட அண்ணனிடம் ராஜா தானும் அவனை அறிந்து கொள்ளாதவனைப் போல் நடிக்கிறான்.

திரைக் கதையில் மற்றுமோர் திருப்பம். ராஜா, பம்பாயில் அனாதையாகத் தன் குழந்தையுடன் திரிந்த அண்ணியை, (சரளாவை) சந்திக்கிறான். அவளைப் பம்பாய்ப் போக்கிரிகளிடமிருந்து காப்பாற்றி, எப்படியும் அவள் கணவனுடன் அவளைச் சேர்த்து வைப்பதாக உறுதி கூறித் தன் வீட்டுக்கு அழைத்து வருகிறான்.

பிறகு, ரகுவை ராஜா பல முறை சந்திக்கிறான்; சரளாவின் திக்கற்ற நிலையைக் கூறி அவளை ஏற்றுக் கொள்ளும்படி பலவிதத்திலும் மன்றாடுகிறான்; அண்ணியின் புனர்வாழ்வுக்காக அண்ணனிடம் வாதாடி அடியும் உதையும் வாங்கிக் கொள்கிறான்.

சதிகாரனான மதுவும், சாகசக்காரியான மனோரமாவும் ராணியின் நடனத்தைக் காண்கின்றனர். அவளை ரகுவின் மிருக உணர்ச்சிக்குப் பலியாக்கிவிட்டு, கம்பெனிப் பணத்தைச் சுருட்டிக்கொண்டு மறைந்துவிட ஏற்பாடு செய்கின்றனர். இந்தச் சதித் திட்டத்துக்கு ராஜா இடையூறாக இருக்கவே அவனை ஒழித்துவிட முயற்சி செய்கின்றனர். நிற்க!

[அடிக்கடி இங்கே 'நிற்க' என்ற வார்த்தையை உபயோகப்படுத்துவதால், திரைக் கதை அங்கங்கே நின்று இளைப்பாறுவதாக எண்ண வேண்டாம். உண்மையில், இந்தக் கட்டத்திலிருந்து திரைப்பட நிகழ்ச்சிகள் அதிவேகமாக அலறிக் கொண்டு செல்கின்றன.]

சதிகாரர்களின் சூழ்ச்சி காரணமாக, சரளா தன் நடத்தைக்கு மாசு கற்பிக்கப்பட்டு, குழந்தையுடனும் ராஜாவுடனும் வெளியேற்றப்படுகிறாள்.

ராஜா, சரளாவை அழைத்துக் கொண்டு ரகுவின் வீட்டுக்குப் போய், அங்கே சரளாவை வேலைக்காரியாக அமர்த்துகிறான். தான் மணமாகாதவன் என்று புனைந்துரைத்துப் பொய் வாழ்வு வாழ்ந்து வந்த ரகு, சரளாவை வீட்டு வேலைக்காரியாக ஏற்க நேருகிறது. குழந்தைப் பாசம், மனைவியின் அன்பு, மனோரமாவின் மாய வலை, ராணியிடம் புது மோகம், — இவற்றின் இடையே சிக்கித் தவிக்கிறான்.

ரகுவாக நடிக்கும் ஸ்ரீ டி. கே. பகவதி இந்தப் படத்தில் மனோ தத்துவ நடிப்பின் சிகரத்தை எட்டிப் பிடித்திருக்கிறார். பத்தினியுடன் இன்ப வாழ்க்கை நடத்தும் போதும், மனோரமாவைக் கண்டு, மேனகை முன் விசுவாமித்திரராக மாறி நெகிழ்ந்து நிலை தளர்ந்த போதும், சகோதரனைக் கண்டு பாசம் காரணமாகப் பரிதவித்த போதும், அந்தஸ்து வெறியில் அகப்பட்டு அவதிப்பட்ட போதும், ராணியைக் கண்டு நிலை தடுமாறிய போதும் அவர் நடிப்பு முதல்தரமாக அமைந்திருக்கிறது.

இந்தத் திரைக் கதைப் பாத்திரங்களில் ராணி மிகவும் முக்கியமானவள். ராணியாக நடிப்பவர் ஸ்ரீமதி அஞ்சலி தேவி என்று சொன்னால் போதுமானது. ஸ்ரீமதி அஞ்சலி தேவி தமக்கே உரிய தனிப் பாணியில் பேசி, நடித்து, ஆடிப் பாடி, இந்தப் படத்துக்கு ஜீவநாடியாக விளங்குகிறார்.

மதுவும் மனோரமாவும், ராணியை ஏமாற்றி அழைத்து வந்து ரகுவிடம் சிக்கவிட்டு வெளியேறுகிறார்கள். ஏராளமான நகைகளும் பணமும் அவர்களுடன் வெளியேறுகின்றன.

மதுவும் மனோரமாவும் காரில் ஏறிப் புறப்படும் சமயமும் ராஜா சிறையிலிருந்து விடுதலை

அடைந்து வரும் சமயமும் ஒன்றுயிருக்கின்றன. அவர்கள் கண்ணில் படாமல் காரில் ஏறிக்கொள்ளுகிறான் ராஜா. காரை மனோரமா செலுத்துகிறாள். போகும் வழியில் ராணி ரகுவிடம் அகப்பட்டுக் கொண்டிருக்கிற விஷயம் அவர்கள் பேச்சிலிருந்து தெரிய வருகிறது. காரிலிருந்தபடியே ராஜா மதுவைத் தாக்குகிறான். கார் நிற்கிறது; இருவருக்கும் சண்டை நடக்கிறது; மண்டை உடைகிறது. ராஜா கீழே சாய்கிறான். மதுவும் மனோரமாவும், காரில் ஏறி வாயுவேகமாகச் சென்று மறைகின்றனர். மலைப்பாதையிலிருந்து காருடன் கீழே உருண்டு விழுந்து இந்த உலகத்திலிருந்தே ஒரேயடியாக மறைந்து விடுகின்றனர்.

மயக்கம் தெளிந்ததும், ராஜா ரகுவின் பங்களாவுக்கு ஓடுகிறான். எந்தச் சந்தர்ப்பத்தில் போகிறான்! ரகுவின் பிடியில் அகப்பட்டு, புலியிடம் சிக்கிய பெண் மானைப் போல, ராணி பரிதவித்துக் கொண்டிருந்த சமயம் ராஜா அங்கு போய்ச் சேருகிறான். ராணியைத் தப்புவிக்கிறான். ராஜாவும் ரகுவும் கைகலக்கின்றனர். கிடைத்த சந்தர்ப்பத்தைக் கை நழுவ விடவில்லை ராஜா. வெறிகொண்ட ரகுவின் மண்டையில் உறைக்கும் வண்ணம் சக்தி வாய்ந்த தமிழில் பேசுகிறான்; ஏசுகிறான்; அவனது அந்தஸ்து மோகத்தை இடித்துக் காட்டி, எள்ளி நகையாடுகிறான். கடைசியில், ராணிக்கு ரகு இழைக்க முயன்ற பயங்கரக் கொடுமைக்காகப் பழி வாங்க முற்படுகிறான், ராஜா. மதுவின் கைத் துப்பாக்கி அதற்கு உதவியாயிருக்கிறது. ராஜா துப்பாக்கியைத் தூக்கிப் பிடித்ததும், அவன் அண்ணி சரளா அங்கே தோன்றி, கணவன் உயிரைக் காப்பாற்றுகிறாள்.

படக் கதையாகட்டும், நாடகக் கதையாகட்டும், முடிவில் நல்லவர்கள் நன்மை அடைந்து, தீமை செய்தவன் அதற்குரிய தண்டனையைப் பெற்றால்தான் பெரும்பாலான ரசிகர்களுக்குத் திருப்தி உண்டாகிறது; நீதியின் பெயரும் நிலை நிறுத்தப் படுகிறது.

ஆனால் அநியாயக்காரன் கதையில் அழிந்து ஒழிந்து போவதற்குப் பொருத்தமான காரண காரிய நிகழ்ச்சிகள் இருக்க வேண்டும். நியாயவான், வளம் பெற்று வாழ்வதற்குப் பொருத்தமான காரணங்களும் சந்தர்ப்பங்களும் இருக்க வேண்டும். அவை இந்தப் படத்தில் நன்கு அமையப் பெற்றிருக்கின்றன.

"ரத்த பாசம்" கதை நல்ல கதை; உணர்ச்சியை ஊட்டும் சம்பவங்கள் கொண்ட சிறந்த கதை; நம்பித்தானாக வேண்டும் என்ற சம்பவங்களோ, இப்படித்தான் இருக்க வேண்டும் என்று ஊகித்துக் கொள்ள வேண்டிய ஜோஸ்யங்களோ தேவையில்லாத கதை. திரைக் கதையின் அமைப்புக்கும், பாத்திரங்களின் தகுதிக்கும் ஏற்ற முறையில் வசனம் அழகாகவும் உணர்ச்சியோடும் அமைக்கப்பட்டிருக்கிறது.

திரைக் கதையும் வசனமும் தீட்டியவர் ஸ்ரீதர் என்னும் இளைஞர் என்று அறிந்து மகிழ்கிறோம்.

'இரத்த பாசம்' ஆடல் பாடல்களும், நகைச்சுவைக்கட்டங்களும் நிறைந்த ஒரு பொழுது போக்குப் படம்: அத்துடன் நீதி நெறியை நிலைநாட்டிப் பார்ப்பவர்களுக்கு மனச் சாந்தி அளிக்கும் படம்; நடிப்புத் திறமையின் சிகரமாக விளங்கும் படம். இந்தப் படத்துக்குத் தமிழ் நாட்டில் நல்ல ஆதரவு கிட்டும் என்று நம்புகிறோம்.

# இதுவே ரத்தபாசம்...

இருங்க...! நான் 'A' கிளாஸ் 'டீ' போட்டுக் கொண்டு வந்து தருகிறேன்!

என்ன? 'A' கிளாஸ் 'டீ'யா! நான் 'C' கிளாஸ் மனுஷனுச்சே!

நாசக்காரா! உன்னை நம்பி மோசம் போனேன்..!

நீ வெளியே போகமாட்டே? டேய்; வேலய்யா; இவனை வெளிலே கொண்டு விடு! உம்-சீக்கிரம்

அண்ணனுக்காகப் பணத்தைத் திருடின பால ராஜா

பேஷ்! மனு! உன் பர்சனலிடியை நல்லா 'லோடு' பண்ணிகிட்டு இருக்கையே!

எசமான் வீட்டு உப்பைத் தின்னு இந்த சரீரத்தை வளர்த்து வருங்க...!

இந்த உலகத்துக்கே பஞ்சம் வந்தது, என்னுலேயாமே..! அய்யப்பா இது மெய்யப்பா!!

சாமா

# டயர் ஸர்வீஸ்

# செப்பனிட்டு

## புதுப்பிக்கிறோம்




இதனால்

- சிலவு குறைவு
- பாதுகாப்பு
- நீடித்த உழைப்பு




இதற்கு
**உத்தரவாதம்**
அளிப்பவை :

**முழு வட்ட
மோல்டுகளால்
தயாரிப்பு ;
டி. வி. எஸ்.
அனுபவ சாதனம்.**

**சுந்தரம் இண்டஸ்ட்ரீஸ் லிமிடெட்**
புதுக்கோட்டை

TVS2-50TH

**(டி. வி. எஸ். ஸ்தாபனம்)**

# கோகிலா



ரமண்லால் வஸந்தலால் தேசாய்

மொழிபெயர்ப்பு: ரா. வீ.

## 15. சாந்தி குடீரம்

ஆற்றங்கரை ஓரத்தில் ஏகாந்தமாக அமைந்திருந்த ஒரு பங்களாவில் அன்று ஜன சஞ்சாரம் கொஞ்சம் அதிகமாயிருந்தது. அந்த நகரத்தில் முதல் வரிசையில் நிற்கும் தேசத் தொண்டர்கள் அனைவரும் பெரும்பாலும் அங்கேதான் தங்களது ரகசிய ஆலோசனைக் கூட்டத்தைக் கூட்டுவது வழக்கம். தேசத் தொண்டுக்கான பல திட்டங்கள் அங்கேதான் உருவாகி வந்தன.

அந்தி மயங்கும் மாலை நேரம். விர்ரென்று வேகமாக வந்த ஒரு மோட்டார் பங்களாவின் தோட்டத்துக்குள்ளே நுழைந்தது. கார் வரும் சத்தத்தைக் கேட்டுப் பங்களாவின் வராந்தாவில் உட்கார்ந்திருந்த ஒரு வாலிபன் தலை நிமிர்ந்து பார்த்தான். அவன் அருகிலேயே நடுத்தர வயதுள்ள பெண்மணி ஒருத்தி உட்கார்ந்து ஏதோ புஸ்தகம் படித்துக் கொண்டிருந்தாள். அவள் தலை தூக்கிக் காரில் யார் வருகிறார்கள் என்பதை அறிந்து கொள்ளச் சிறிதும் ஆவல் காட்டவில்லை; தன் பாட்டுக்குத் தன் படிப்பில் மும்முரமாக ஈடுபட்டிருந்தாள்.

மோட்டாரிலிருந்து முதலில் வக்கீல் சுகபாலும் பத்திராதிபர் சாந்திப் பிரியனும் இறங்கினார்கள். அவர்களை அடுத்தாற்போல் குஸுமாவும் இறங்கினாள். குஸுமாவைக் கண்ணுற்றதும், வராந்தாவில் உட்கார்ந்திருந்த வாலிபன் எழுந்து நின்றான். அதோடு அவன் நிறுத்திக் கொள்ளவில்லை; அவர்களை எதிர்கொண்டழைப்பதற்காகப் படி யிறங்கிக்கூடச் சென்றான். பெண்களுக்கு மதிப்புக் கொடுத்து மரியாதை செலுத்தும் விஷயத்தில் வாலிபர்கள் காட்டும் ஆதரமும் ஆர்வமும் யாவருக்கும் தெரிந்த விஷயம்தானே? அப்படி ஒருவன் ஆர்வம் காட்டவில்லையென்றால் அவனை வாலிபன் என்று எப்படிச் சொல்ல முடியும்?

"மனோஹர்!"

படியேறி வந்த வக்கீல் சுகபால் வாலிபனை அழைத்தான். பிறகு, "இன்று உனக்கு ஒரு இனிமையான அறிமுகம் செய்து வைக்க உத்தேசித்திருக்கிறேன். இதோ இவர் பெயர் குஸுமா. ஸர் பிஹாரிலாலின் [மகள்!" என்று அறிமுகத்தையும் செய்து வைத்த பின்தான் தன் பேச்சை முடித்தான்.

மனோஹர் வெகு நாகரிகமாகக் குஸுமாவுக்கு வணக்கம் தெரிவித்தான். சுகபாலின் கடைசி வாக்கியத்தைக் கேட்ட அந்தப் பெண்மணி புஸ்தகத்திலிருந்து தன் பார்வையை அகற்றி ஒருமுறை குஸுமாவைக் கவனித்தாள். பிறகு பழையபடியே தலையைக் கவிழ்த்துக் கொண்டு படிக்கத் தொடங்கி விட்டாள். மனோஹர் மூவருக்கும் அன்புடன் ஆஸனம் அளித்து அருகிலேயே அமரச் சொன்னான்.

தனக்கு அளித்த ஆசனத்தில் அமர்ந்தவாறே சாந்திப் பிரியன், "என் அம்மணி! என்ன படித்துக் கொண்டிருக்கிறீர்கள்?" என்று நடுத்தர வயதுள்ள அந்தப் பெண்மணியைப் பார்த்துக் கேட்டான்.

"'யோகவாஸிஷ்டம்' படித்துக் கொண்டிருக்கிறேன்!" என்று சொன்ன அந்த மாது சிரோமணி, "வா, அம்மா! இங்கே இப்படி வந்து உட்காரு! நீ பிஹாரிலாலின் பெண்ணா?" என்று குஸுமாவைப் பார்த்துக் கேட்டாள்.

"ஆமாம்!" என்று நறுக்காகப் பதில் சொன்ன குஸுமா அவள் அருகில் வந்து அமர்ந்தாள். அப்புறம் அந்தப் பெண்மணிக்கு அதிகமாகப் புஸ்தகத்தில் மனம் செல்லவில்லை. அடிக்கொரு தடவை குஸுமாவை நிமிர்ந்து நிமிர்ந்து பார்த்தாள்.

"இவர்தான் என் தாயார்!" மனோஹர் தன் தாயாரைக் குஸுமாவுக்கு அறிமுகப் படுத்தி வைத்தான்.

மனோஹரின் தாயாருக்குக் கிட்டத்தட்ட ஐம்பது வயது இருக்கும். அவள் முகம் ஒட்டி உலர்ந்திருக்கவில்லை; நிறைந்து காட்சி யளித்தது. அதில் ஒரு தனிச் சோபையும் ஒளி வீசிக் கொண்டிருந்தது. அவள் நெற்றியை விபூதிப் பொட்டு வேறு அலங்கரித்தது. அவளுக் கருகிலேயே ஒரு குத்தி

ராகஷ மாலை கிடந்தது. அவள் அப்பொழுது வெண்ணிறப் புடவை உடுத்தியிருந்தாள். அவளுடைய சிவந்த மேனிக்கு வெண்ணிறப் புடவையின் உடல் வெகு எடுப்பாகத் தோன்றியது. முகத்தில் படர்ந்திருந்த தேஜஸ் வேறு அவள் தூய்மைக்கு அணிகலனாக விளங்கியது.

"குஸுமா உலாவப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். நாங்களோ இந்தப் பக்கம் வரவேண்டியிருந்தது. எனவே எங்களைக் காரில் இங்கே கொண்டு வந்து விட்டாள். இவ்வளவு தூரம் வந்த பிறகு, உன்னையும் அம்மாவையும் அறிமுகப்படுத்தி வைக்காமல் இவளை அனுப்புவது சரியில்லை என்று எனக்குத் தோன்றியது. எனவேதான் குஸுமாவை வற்புறுத்தி இங்கே அழைத்து வந்தேன்!" என்று குஸுமாவை அழைத்து வந்ததற்குக் காரணம் கூறினான் சுகபால்.

ஸர் பிஹாரிலால் தமது காரியதரிசி ரமேஷை அழைத்துக் கொண்டு தொலைவில் உள்ள கிராமத்துக்கு நில - புலன்களைப் பார்த்து வருவதற்காகப் போயிருந்தார். நகரத்து வாழ்க்கையில் அலுத்துச் சலித்து விட்ட அவருக்கு நிலபுலன்களுடன் நட்புரிமை கொண்டு நாட்டு வாழ்க்கை வாழ வேண்டும் என்ற எண்ணம் வெகு காலத்துக்கு முன்பே ஏற்பட்டு விட்டது. அவருடைய அந்த ஆசைக்குத் தூபம் போட்டார் மாவட்டத்தின் மேலதிகாரி. அவருடைய அதிகாரத்துக்குட்பட்டு ஏராளமான தரிசு நிலம் கிடந்தது. தரிசு நிலத்தைப் பண்படுத்தி விளைநிலமாக்கி உற்பத்தியைப் பெருக்கும் விஷயத்தில் தமது மாவட்டம் முதன்மையாக நிற்கிறது என்று பெயர் வாங்கிவிட வேண்டும் என்பது அவருடைய அந்தரங்க ஆசை. தமது அந்த ஆசையை நிறைவேற்றிக் கொள்வதற்குப் பிஹாரிலாலை வலை போட்டுப் பிடித்தார். பிடித்தாலும் நல்ல புளியங்கொம்பாய் பிடிக்க வேண்டும் அல்லவா? 'நிலத்தைப் பண்படுத்தும்-நற்பணியில் நீங்கள் ஈடுபட்டால் அரசாங்கத்தாரின் நல்லெண்ணத்தைப் பெறுவீர்கள். பெயரும் புகழும் தாமாகவே தங்களைத் தேடிக் கொண்டு வரும்' என்று கூறி அந்தத் தரிசு நிலங்களை எடுத்துக் கொள்ளுமாறு பிஹாரிலாலை வற்புறுத்தினார். பெயரும் புகழும் மட்டும் அல்ல; பொருளும் பொன்னும் வேறு கொழிக்கும் என்று ஆசை வார்த்தைகள் காட்டினார். நிலத்தின் வளத்தைப் பற்றி வானளாவப் புகழ்ந்தார்.

பணம் படைத்த பிஹாரிலாலுக்குத்தான் பல நாட்களுக்கு முன்பே மண்ணாசை ஏற்பட்டிருந்ததே! அப்படியிருக்கும் பொழுது கைக்குக் கிடைக்கும் தருணத்தை அவர் கைநழுவ விடுவாரா? பிஹாரிலால் பணம் இல்லாத ஏழையா, 'பத்தாயிரம் பதினையாயிரம் என்று மண்ணில் பணத்தைக் கொண்டு போய்ப் போடுகிறோமே, அந்தப் பணம் மண்ணாகிவிட்டால் என்ன செய்வது!' என்று பயப்படுவதற்கு? எனவே, சரியென்று கூறிச் சம்மதம் தெரிவித்தார்.

அதன் பலனாக மாவட்டத்தின் மேலதிகாரி நிலபுலன்களைப் பார்வை யிடுவதற்காக வேண்டி அவருக்கு விசேஷ அழைப்பு அனுப்பியிருந்தார். எனவே ஸர் பிஹாரிலால் இரண்டு மூன்று நாட்கள் நகரத்தை விட்டு வெளியே வந்திருக்க நேர்ந்தது.

நிலத்தைப் பார்த்த மாத்திரத்திலே அவருக்கு நிலம் நல்ல நிலம் என்பது விளங்கி விட்டது. கண்களுக் கெட்டிய தூரம் வரை விஸ்தாரமாகக் காட்சி அளித்த அந்த நிலம் அவர் கற்பனையைத் தூண்டி விட்டது; மனத்திலே இல்லாத மண்ணாசையை யெல்லாம் எழுப்பி விட்டது. பிஹாரிலால் தம்மை மறந்து நிலத்தின் நினைவில் பற்பல கனவுகளை காணத் தொடங்கி விட்டார்.

நிலம் மேடும் பள்ளமுமாகக் குத்தும் குழியுமாக இருந்தது என்னவோ உண்மைதான். அதனால்தானோ என்னவோ, அது அவ்வளவு நாளும் கவனிப்பாரற்றுத் தரிசாகக் கிடந்தது. ஆனால் ஸர் பிஹாரிலாலின் கற்பனைக் கண்கள் அந்த மேட்டிலும் பள்ளத்திலும் பிறர் கண்களில் படாத பல பெருங்குணங்கள் பொதிந்து கிடப்பதையே கண்டன.

"இந்த இடத்தில் நிலத்தில் வேலை செய்பவர்களுக்கு நல்ல விடுதிகள் அமைத்துக் கொடுப்பேன். இந்தக் குன்றின் மேல் எனக்கு ஒரு சுக வாசஸ்தலம் கட்டிக் கொள்வேன்.

சமதளமான இந்தப் பூமியில் பூந்தோட்டம் போடுவேன். இங்கே மாந்தோப்பு வைப்பேன். அங்கே சவுக்கங் கன்றுகள் நடுவேன்!''

இதுபோல் இன்னும் எத்தனை எத்தனையோ திட்டங்களைக் கண் இமைக்கும் நேரத்துக்குள் கண்களெதிரே நிறுத்திக் கொண்டார். அவருடைய கனவுக் கோட்டைகளைக் கேட்ட மாவட்ட அதிகாரி மறுமொழி ஒன்றும் கூறாமல் அப்படியே ஒப்புக்கொண்டுவிட்டார். பக்கத்து கிராமங்களைச் சேர்ந்த குடியானவர்களும் தலையாரிகளும், கணக்குப் பிள்ளைகளும் மணியக்காரர்களும் கூடப் பற்பல சௌகரியங்கள் இருப்பதாகக் கூறி நிலத்தை எடுத்துக் கொள்ளுமாறு அவரை வேண்டினர். எல்லோரும் ஒரு முகமாகக் கூறவே, ஸர் பிஹாரிலால் கட்டாயம் நிலத்தை எடுத்துக் கொள்வதென்ற முடிவுக்கே வந்தார்; மாவட்ட அதிகாரிக்கும் தம்மை இந்திரன், சந்திரன், கர்ணன், குமணன் என்று புகழும் படியான சந்தர்ப்பத்தை அளித்தார்.

தரிசு நிலங்களைப் பண்படுத்தி விளைநிலமாக்கும் விஷயத்தில் ஸர் பிஹாரிலால் பிறருக்கு வழிகாட்டியாகி விடவே, பல வருஷங்களாகத் தரிசாகக் கிடந்த நிலங்கள் பணக்காரர்களைக் காந்தமெனக் கவர்ந்தன. தரிசு நிலங்களுக்குப் பெரு மதிப்பு ஏற்படவே பணக்காரர்கள் நிலத்தைப் பெறவும் அவற்றைப் பண் படுத்தவும் நான் முந்தி, நீ முந்தி என்று போட்டி போட்டுக் கொண்டு முன் வந்தனர்.

நிலவரி மூலமாகச் சர்க்கார் வருமானத்தை உயர்த்துவதற்காக மாவட்ட அதிகாரி செய்த மாபெரும் தொண்டு ஸர் பிஹாரிலாலுக்குப் பெயரையும் புகழையும் தேடிக் கொடுத்தது. அவருடைய அந்தப் பெருமை தரும் செயலுக்காக அரசாங்கமும் அவரைக் கௌரவிக்கத் தவறவில்லை. சர்க்கார் சந்தர்ப்பத்தை எங்கேயாவது தவற விட்டதுண்டா?

நிலத்தை வைத்துக் கொள்வது என்று தீர்மானித்த ஸர் பிஹாரிலால் ரமேஷைப் பார்த்து, "ரமேஷ்! இந்த நிலத்தை நீதான் வைத்துக் கொள்ள வேண்டும்!'' என்றார்.

"என்னிடம் இந்த நிலத்தை வைத்துப் பராமரிக்கக் கூடிய அளவுக்குப் பொருள் கிடையாதே! என்ன செய்வது?'' என்று கையை விரித்தான் ரமேஷ்.

"அந்தக் கவலை உனக்கு எதற்கு? அதற்கானவற்றை நான் கவனித்துக் கொள்ளுகிறேன்!'' என்றார் ஸர் பிஹாரிலால்.

"வேண்டாம், ஸார்! நான் இது வரை தங்களுக்கு என்ன பெரிய ஊழியம் செய்து விட்டேன்? எதற்காகத் தாங்கள் என்னிடம் இத்தகைய அபார கருணை காட்ட வேண்டும்? ஊழியத்துக்கு உகந்த உதவியையும் உரிமையையும் பெறுவதுதான் நியாயம். அதனால் இம்மாதிரி உதவிகள் செய்து என் தலையில் அகாவசியமான சுமையை ஏற்றி என்னை அடிமை கொண்டு விடாதீர்கள்!'' என்று சொன்னான் ரமேஷ்.

"ரமேஷ்! தற்சமயம் உனக்கு முழு நேரமும் வேலை கொடுக்கக் கூடிய அளவுக்கு என்னிடம் ஒரு வேலையும் இல்லை. அதனால் தான் உன்னிடம் இந்த வேலையை ஒப்படைக்கலாம் என்று எண்ணுகிறேன். நான் சொல்வதைக் கேள். நிலத்தைப் பண்படுத்துவதற்காக நீ இங்கே தங்கி விடு. இந்த நிலத்தில் விளைவதில் காலில் ஒரு பங்கு உனக்குத் தந்துவிடுகிறேன். உற்பத்தியைப் பெருக்கும் பொறுப்பு உன்னைச் சேர்ந்தது. அதற்கு ஆகும் செலவை நான் ஏற்றுக் கொள்கிறேன். நான்கு நல்ல குடியானவர்களைச் சந்தித்துச் செலவாகக் கூடிய தொகையைக் கணக்கிட்டு எனக்குத் தெரிவி! என்ன, புரிகிறதா?'' என்றார் ஸர் பிஹாரிலால்.

தம்மை நாடி உத்தியோகத்துக்கு வந்து விட்டவர்களின் வருங்காலத்தை வளமுறச் செய்ய வேண்டும் என்ற விஷயத்தில் ஸர் பிஹாரிலாலுக்கு உள்ள நல்லெண்ணம் நாடு அறிந்ததே. அவரைப் போன்ற பெருந்



குணமும் தாராள நோக்கமும் கொண்ட முதலாளிகள் கிடைப்பது வெகு அபூர்வம்.

இதுவரை அவர் கையில் வியாபாரம்மட்டுமேதான் இருந்து வந்தது. இப்பொழுதோ விவசாயமும் அவர் கைக்கு வந்து விட்டது. நிலபுலன் கைக்கு வந்ததும் ரமேஷுக்கு உதவி புரியும் விஷயத்தில் அவரைப் பொறுத்த வரையில் வெகு அருமையான சந்தர்ப்பமாக வாய்த்து விட்டது. சர்க்காரைக் காட்டிலும் சந்தர்ப்பத்தைச் சரியாகப் பயன்படுத்திக் கொள்வதில் சமர்த்தரான அவருக்குச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொள்ளப் பிறர் சொல்லியா கொடுக்க வேண்டும்?

ஆனால் ரமேஷுக்குத்தான் நிலபுலன்களைக் கவனித்துக் கொள்ளும் வேலை புதிது. ரமேஷுக்கு மட்டும் என்ன? தற்காலத்து வாலிபர்கள் அனைவருக்குமே புதிதுதான்.

ஏனெனில் தற்காலத்துக் கல்வி முறையே அப்படி. அது இத்தகைய செயல்களைப் புறக்கணிக்கும் புத்தியைத்தான் புகட்டுகிறதே ஒழிய, ஈடுபாடு கொள்ளச் செய்யும் புத்தியைப் புகட்டுவதில்லை.

தற்காலத்து மாணவர்களைப் பொறுத்த வரை நிலத்தின் அழகு கேவலம் கற்பனைப் பொருளாகத்தான் தோற்ற மளிக்கிறது. விவசாயத்தில் வெற்றி என்பது அவர்கள் உள்ளத்துக்கு வெறும் கட்டுக் கதையாகத்தான் தோன்றுகிறது. விவசாயத்துக்குத் தேவையான ஆயுதங்கள் என்ன என்ன என்பதைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்ற எண்ணமே அவர்கள் உள்ளத்தில் எழுவதில்லை. பசு, எருமை, எருது போன்றவை படங்களில் பார்த்துப் புரிந்துகொள்ள வேண்டியவை, பாடங்களில் படித்துத் தெரிந்து கொள்ள வேண்டியவை என்பதைத் தவிர அவற்றை அண்டிக் கண்களால் காணும் துணிவு அவர்களுக்கு உண்டாவதே யில்லை. கிட்டப் போய் மாடு முட்டிவிட்டால் என்ன ஆவது என்ற



பயம்தான் மேலோங்கி நிற்கிறது. நான்கு மரங்களைக் கண்டு விட்டால் நல்ல கவிதை ஒன்று இயற்றலாமே என்று எண்ணத் தோன்றும் நவநாகரிக வாலிபர்களுக்கு. நகரத்தை ஒட்டினாற் போல் உள்ள சாலையில் இரண்டொரு மைல் உலாவப் போய் வந்தால் காட்டு வளப்பம் அத்தனையையும் தெரிந்து கொண்டு விட்டதாக, கிராம வாழ்க்கையின் ரகசியங்கள் அனைத்தையும் புரிந்து கொண்டு விட்டதாக இரும்பூ தெய்தி




பிரபல வீணை வித்வான் ஸ்ரீ நாராயணசாமி இந்தியக் கலைஞர் கோஷ்டியின் அங்கத்தினராக ரஷ்யாவுக்குச் செல்கிறார். டில்லியிலிருந்து புறப்படும் கலைஞர் கோஷ்டியோடு சேர்ந்து கொள்வதற்காக ஆகஸ்டு மாதம் 18-ந் தேதி கிராண்ட் டிரங்க் எக்ஸ்பிரஸில் சென்னையிலிருந்து புறப்பட்டார். மியூஸிக் அகாடமி, ரஸிக ரஞ்சனி சபை, சென்டிரல் கர்நாடக சங்கீத கலாசாலை, பார்த்தசாரதி சங்கீத சபை, கச்சாலீஸ்வரர் கான சபை ஆகிய சபைகளின் பிரதிநிதிகள் சென்டிரல் ஸ்டேஷனுக்குச் சென்று, அவரைக் குதூகலமாக வழியனுப்பினார்கள்.

தொடங்கி விடுவார்கள்; இறுமாப்புக் கொள்ள ஆரம்பித்துவிடுவார்கள். அதற்காக அவர்களைக் குறை கூறி என்ன பயன்? இந்தக் காலத்துக் கலைக்கு உதவாத கல்வி முறையை அல்லவா நொந்து கொள்ள வேண்டும்?

ஆனால் ரமேஷுக்குத் தன்னிடம் ஒப்படைக்கும் வேலையைத் தன்னால் செய்ய இயலாது என்று கூறித் தன் இயலாமையையும் தகுதியின்மையையும் வெளிக் காட்டிக் கொள்ளத் துணிவு உண்டாகவில்லை. எனவே, "என்னால் இயன்றவரை முயற்சிக்கிறேன்!" என்று கூறி விலபுலன்களைக் கவனித்துக் கொள்ளும் பொறுப்பை மேற்கொள்ளத் தயாராகி விட்டான்.

கிராமத்தைப் பார்வையிடச் சென்றிருந்த அவர்கள் இருவரும் திரும்பி வர மூன்று நாட்கள் பிடித்து விட்டன. அந்த மூன்று நாட்களும் குஸுமா மட்டும் தனியே வீட்டில் இருக்கும்படியாகி விட்டது. அவளுக்குத் துணையாக ஒரு வயது முதிர்ந்த வேலைக்காரத் தம்பதிகள் இருந்தனர். ஸர் பிஹாரிலால் தாம் எங்கேயாவது வெளியே போக நேர்ந்தால் நம்பிக்கைக்குப் பாத்திரமான அந்தத் தம்பதிகளின் பொறுப்பில் தான் குஸுமாவை விட்டுப் போவது வழக்கம்.

வக்கீல் சுகபாலுக்கும் பத்திரிகாசிரியன் சாந்திப் பிரியனுக்கும் இந்த விஷயம் தெரியும். இந்தக் காலத்தில்தான் சாதாரணப் பாமரனும் கூடப் பெரிய மனிதர்களின் அன்றாட அலுவல்களைத் தெரிந்து வைத்துக் கொள்வது என்பது சகஜமாக இருக்கிறதே! அப்படித் தெரிந்து வைத்துக் கொள்ளாதவன் நாகரிக முன்னவனாகக் கருதப்படுவதில்லையே! எந்தப் பெரிய மனிதர் எங்கே போனார், எப்பொழுது போனார், எப்படிப் போனார் என்ற செய்திகளைத் தெரிந்து வைத்துக் கொள்வதைச் சாதாரண மக்களே முக்கியமான அலுவல்களாகக் கருதும் பொழுது சாந்திப் பிரியனைப் போன்ற பத்திரிகாசிரியனும் சுகபாலைப் போன்ற வக்கீலும் தெரிந்து வைத்துக் கொள்ளாமல் இருப்பார்களா? சாந்திப் பிரியன் தன் பத்திரிகையில் உள்ள போக்குவரத்துப் பகுதியில் இச் செய்திக்கு முக்கியத்துவம் கொடுத்துப் பிரசுரித்திருந்தான். அதோடு அவன் நிறுத்திக் கொண்டால்தான் தேவலையே! அது எப்படி முடியும்? அப்படி அவன் நிறுத்திக் கொண்டு விட்டால் அவனை அப்புறம் சாந்திப் பிரியன் என்று எப்படிச் சொல்வது?

விவசாயியின் வயிற்றிலே அடி!
வயலை நம்பி வாழ்பவன் வாயிலே மண்!
நிலத்தின்மீதும் ஆலை முதலாளிகளின் ஆதிக்கம்!

இதுபோல் தனக்கே உரித்தான பாணியில் தனித்தனி தலைப்புக் கொடுத்து ஸர் பிஹாரிலாலின் போக்கை வெளிப் படையாகத் தாக்கித் தன் பத்திரிகையில் எழுதினான்.

இத்தனை நாட்கள் வரை வியாபாரமும் தொழிலும் தான் தனவந்தர்களின் கையில் சிக்கியிருந்தன. இனி நிலமும் அவர்கள் கைக்குச் சென்றுவிடப் போகிறது. அப்புறம் நிலத்தை நம்பி வாழும் ஏழைக் குடியானவர்களின் பாடு திண்டாட்டம்தான்! குடியானவர்கள் குடி முழுகி அடிமை வாழ்வு வாழவேண்டியதுதான்! ஆலை முதலாளிக்கு அடி பணிந்து வாழவேண்டும் என்பதுதான் அவர்கள் தலையெழுத்தா?

இவ்வாறெல்லாம் எழுதி அவன் ஆட்சி பீடத்துக்கும் பொது மக்களுக்கும் பகிரங்கமாக எச்சரிக்கை விடுத்தான். தான் மிகப் பரபரப்பான செய்திகளைப் பிரசுரித்து விட்டது போலவும் மாபெரும் ரகசியத்தைப் பிரமாதமாகக் கண்டு பிடித்து அம்பலமாக்கி விட்டது போலவும் அவன் இச் செய்திகளுக்கு முக்கியத்துவம் கொடுத்து வெளியிட்டான்.

இத்தனை தாக்கி எழுதிய பொழுதிலும் இந்தக் காலத்தில் கட்சி கட்டிக்கொண்டு தர்க்கம் செய்யும் பத்திரிகாசிரியர்களும் சரி, கட்சித் தலைவர்களும் சரி, சத்திய யுகத்துத் தர்க்க வாதிகளைப் பின்பற்றி நடக்கிறார்கள் என்பதைப் பார்க்கும் பொழுது மிகுந்த மகிழ்ச்சியே உண்டாகிறது. அபிப்பிராய வேற்றுமை உள்ள விஷயங்களில் ஒருவர் மற்றொருவரைத் தாக்கிக் கொள்வதைப் பார்த்தால் எங்கே வெட்டுப் பழி குத்துப் பழி ஏற்பட்டு விடுமோ என்று கூடத் தோன்றுகிறது. செய்தித் தாள்களில் காரசாரமாகத் தலையங்கம் தீட்டினால், பொது மேடைகளில் அனலைக் கக்கும் அடுக்குச் சொற்களை உபயோகிக்கின்றனர். கட்சிக் கொள்கைகளுக்காகக் கனலைக் கக்கிக் கடுமையைக் கொட்டிக் கரகோஷம் பெறும் ஒரு கட்சிக்காரர்கள் தம் கட்சிக்கு எதிர்க் கட்சிக் காரரை நேருக்கு நேர் கண்டு விட்டால் அபிப்பிராய வேற்றுமை அவ்வளவையும் ஒருபுறம் மூட்டை கட்டி வைத்துவிட்டுப் பழக்கத்திலும் பேச்சிலும் அசாத்தியமான இனிமையை வரவழைத்துக் கொள்ளுகிறார்கள். அது மட்டுமா? சந்தர்ப்பம் ஏற்படும் பொழுதெல்லாம் கைகுலுக்கிக் கொள்கிறார்கள்; கட்டித் தழுவிக் கொள்கிறார்கள்; புன்முறுவலோடு புகைப்படமும் வேறு எடுத்துக் கொள்கிறார்கள். அதோடு எதிர்க் கட்சிக்காரருக்குப் பெண்கள் இருந்து விட்டால், அவர்களோடு நட்புரிமை பாராட்டும் பேருரிமையைக் கை நழுவ விடுவதில்லை; அவர்களுடைய பெருந் தன்மைக்குப் பங்கம் விளைவிக்க முன் வருவதில்லை; அவர்களை அலட்சியக் கண்கொண்டு காண்பதே இல்லை.

மேலெழுந்த வாரியாகப் பார்க்கும் பொழுது இதில் தன்னலம் தாண்டவமாடுவதாகத் தோன்றலாம். ஆனால் ஆழ்ந்த விமரிசன நோக்குடன் பார்க்கும் இடத்தில், 'இதில் நல்லது எது, தீயது எது? அத்தியாவசியமானது எது, அநாவசியமானது எது?' என்று ஆராய்ந்து பார்க்கும் அபாரத்திறன் மிளிர்வது தெரியவரும். நடைமுறை வாழ்வையும் பரமார்த்தப் பொருளையும் பாகுபடுத்திப் பகுத்தறிந்து உணரும் உள்ளுணர்வு ஊடுருவி ஓடுகிறது என்பது புலனாகும். மகத்துவம் பொருந்திய விஷயம் எது, மகத்துவம் பொருந்தாத விஷயம் எது என்று தேடிக் கண்டு பிடித்து அதற்கேற்றவாறு நடத்தையை நல்வழியில் நாட்டம் கொள்ளச் செய்யும் நியாய புத்தி நிறைந்திருக்கிறது என்பதையும் ஒப்புக் கொண்டுதான் ஆகவேண்டும். இதெல்லாம் மகிழ்ச்சிக்குரிய விஷயம் இல்லாமல் வேறு என்ன?

சத்திய யுகத்திலிருந்து வாழையடி வாழையாக வந்த இந்த நாகரிகத்தின் பலனைச் சுகபால், சாந்திப் பிரியன் இருவருக்கும் ஸர் பிஹாரிலாலின் மகள் குஸுமாவை அறிமுகம் செய்து கொண்டு அவளது நட்பை வளர்க்கும் செயல் வெகு சுலபமாகி விட்டது.

தோட்ட விருந்துக்குப் பிறகும் அவ்விருவரும் இரண்டொரு முறை ஸர் பிஹாரி லாலின் இல்லத்துக்குப் போய் வந்திருக்கிறார்கள். எனவே, அவர்கள் அங்கே யாருக்கும் அதிக அறிமுகம் இல்லாதவர்கள் என்று சொல்லக் கூடிய நிலைமையில் இல்லை. அவர்களுடைய நடை, உடை, பாவனையும் வெளி வேஷமும் பார்ப்பதற்குப் பகட்டாகவும் நாகரிகம் வாய்ந்ததாகவும் அமைந்திருந்தன.

அன்று அவர்கள் இருவரும் வந்த பொழுது குஸுமா வெளியே உலவுவதற்காகப் புறப்பட்டுக் கொண்டிருந்தாள். தோட்டத்தைத் தாண்டிக் கார் வெளியே வரவும் அவர்கள் இருவரும் உள்ளே நுழைவதும் சரியாக இருந்தது. அவர்கள் இருவரையும் பார்த்து விட்ட குஸுமா மரியாதையை உத்தேசித்துக் காரை நிறுத்தினாள்.

“ஸர் பிஹாரிலால் வந்து விட்டாரோ?” என்று கேட்டான் சுகபால்.

“இல்லை, நாளை வருவார்!” என்று பதில் அளித்தாள் குஸுமா.

“சரி, அப்படியானால் நாங்கள் போய் வருகிறோம். அவரிடம் ஒரு வேலையாக வந்தோம். அப்புறம் பார்த்துக் கொள்கிறோம்!”

“இத்தனை தூரம் வந்து நீங்கள் அவரைப் பார்க்க முடியாமற் போய் விட்டதற்காக வருந்துகிறேன். நாளைக்கு வந்தால் கட்டாயம் சந்திக்கலாம். நீங்கள் வந்து விட்டுப் போனதாகவும் நாளை வருவதாகச் சொல்லி விருப்பதாகவும் அவரிடம் நானும் சொல்லி வைக்கிறேன்!” என்றாள் குஸுமா.

“ரொம்ப சந்தோஷம். ஆமாம், நீங்கள் எந்தப் பக்கம் போகிறீர்கள்?” சுகபால் தங்களுக்குள்ள அறிமுகத்தைப் பயன் படுத்திக் கொள்ளும் நோக்கத்துடன் கேட்டான்.

“நானா? ஆற்றங்கரைப் பக்கம் உலாவப் போய்க் கொண்டிருக்கிறேன்!” என்றாள்.

“தங்களுக்கு ஆட்சேபனை ஒன்றும் இல்லையென்றால் நாங்களும் தங்களுடன் வருகிறோம். நாங்கள் சாந்தி குடீரம் வரை போக வேண்டியிருக்கிறது. உங்களால் எங்களை அங்கே இறக்கி விட்டுவிட முடியுமா?”

இதைச் சொன்ன சுகபால் பதிலைக் கூட எதிர் பாராமல் மோட்டாரின் கதவைத் திறந்து கொண்டு ஏற முயற்சித்தான்.

தன் நகரத்து வாசியும் தனக்கு அறிமுகமான பிரமுகராகவும் உள்ள ஒருவர் இப்படிக் கேட்டால் முடியாது என்று மறுத்துக் கூற முடியுமா? குஸுமாவுக்கு அவர்கள் அவ்வளவு துணிச்சலோடு கேட்டது சற்று விசித்திரமாகத்தான் பட்டது. இருந்தாலும் அவள் சரி என்று ஒப்புக் கொண்டாள்.

இருவரும் காரில் ஏறிக் கொண்டு, அவளுடன் சாந்தி குடீரத்தை அடைந்தார்கள்.

மனோஹரனுடைய பெயரும் அவனுடைய தாயார் சாந்தா கௌரியின் பெயரும் முன்பே குஸுமா கேள்விப்பட்டவைதான். அதனால் அவர்கள் இருவரையும் அறிமுகம் செய்து கொண்டு அப்புறம் போகலாம் என்று சுகபாலும் சாந்திப் பிரியனும் அவளை மிகவும் வற்புறுத்தினர். வேண்டாம் என்று கூறித் தன்னை விடுவித்துக் கொள்வதற்குச் சட்டென்று ஒரு நல்ல காரணம் கிடைக்காததால் குஸுமா அவர்கள் வற்புறுத்தலுக்கு மறுமொழி ஒன்றும் சொல்ல முடியாமல் உள்ளே நுழைந்தாள்.

யோக வாஸிஷ்டம் படித்துக் கொண்டிருந்த மனோஹரின் தாயார் சாந்தா கௌரியின் கவனம் குஸுமாவின் மீதும் குஸுமாவின் கண்கள் சாந்தா கௌரியின் மீதும் தம்மை யறியாமலே லயித்தன. அதே சமயம்தான் சுகபால் குஸுமாவைத் திடீரென்று தான் அழைத்து வந்த காரணத்தை அவர்களுக்குக் கூறினான்.

அதைக் கேட்ட சாந்தா கௌரி, “இவளை இங்கே அழைத்து வந்து நல்ல காரியம் செய்தீர்கள். இவள் இங்கே வந்ததில் எனக்குப் பரம திருப்தி. ஆனால் இவளுக்கு என்னைத் தெரிந்திருக்க நியாயம் ஏது? இவள் அப்பாவுக்கு என்னை நன்றாகத் தெரியும். பாவம், இவள் இந்த உலகத்தில் பிறந்து தாயாரின் பெயரை மட்டும்தான் கேட்டாளே யொழிய அவளுடன் கூட வாழும் பாக்கியத்தைப் பெறவில்லை!” என்றாள். (தொடரும்)




# அமரதாரா

சமூகத் தொடர்கதை

## கள்ளனும் வருகிறான்!

அமரதாரா தொடர் கதையில் இந்துமதி தன் கதையைச் சொல்லுகிறாள். ரங்கதுரை அவன் வரலாற்றைக் கூறுகிறான். ரங்கதுரையின் கதையில் ஒரு கள்ளனும் வருகிறான். ரங்கதுரையின் சிறு பிராயத்தில் ஒரு நெருக்கடியான சவுக்கடி கட்டத்தில் அக்கள்வன் புகுந்து அவனைக் காப்பாற்றுகிறான். ரங்கதுரை அக் கள்வனிடம் கொண்ட நன்றியினால் அவனுடைய வாழ்க்கையில் ஒரு பெரும் சிக்கல் ஏற்படுகிறது.

அடுத்த இதழில் ஆரம்பமாகிறது

மணியம்








சேர்ந்த பெண்மணிகள் அவரவர்களுடைய இல்லங்களில் கைத்திறமை தேவையாக உள்ள பல வேலைகளில் ஈடுபடுவதற்கு வசதி செய்து தரப்படுகிறது. பிரம்பினால் விதவிதமான கூடைகள் செய்தல், துணிகளில் பூ வேலைகள் செய்தல், பல விதமான விளையாட்டுச் சாமான்கள் – பொம்மைகள் செய்தல், தையல் வேலை முதலியவை கற்பிக்கப் படுகின்றன. பெண் குழந்தைகளுக்குத் தேசிய பாஷையான ஹிந்தி கற்பித்து வருகிறார்கள்.

மகாத்மாஜி சேவா சங்கத்தின் ஆண்டு விழா ஆகஸ்டு 6வ சென்னைப் போலீஸ் கமிஷனர் ஸ்ரீ எஸ். பார்த்தசாரதி அவர்களின் தலைமையில் நடைபெற்றது.

பெண்மணிகளின் கைத்திறனைக் காட்டும் வேலைப்பாடு அமைந்த பொருள்களின் கண்காட்சியை அச் சமயம் "கல்கி" ஆசிரியர் திறந்து வைத்தார். ஹிந்தி பரீட்சையில் சிறப்புடன் தேறிய சகோதரிகளுக்குக் கமிஷனர் ஸ்ரீபார்த்தசாரதி அவர்கள் அத்தாட்சிப் பத்திரங்கள் வழங்கினார்.

திருவல்லிக்கேணியில் தேச பக்தியும் சமூக சேவைப் பற்றும் கொண்ட பெண்மணிகள் "மகாத்மாஜி சேவா சங்கம்" என்ற ஸ்தாபனம் தொடங்கி ஆறு ஆண்டு காலமாக நல்ல முறையில் நடத்தி வருகிறார்கள். காயனபடு கீர்த்தனபடு ஸ்ரீமதி ஸரஸ்வதி பாய் இச் சங்கத்தின் தலைவியார். தமிழில் நூறு நாவல்களுக்கு மேல் எழுதியுள்ளவரும் "ஜகன்மோகினி" ஆசிரியருமான ஸ்ரீமதி வை. மு. கோதைநாயகி அம்மாள் இந்தச் சங்கத்தின் ஸ்தாபகரும் காரியதரிசியுமாவார். இச்சங்கத்தைச் சேர்ந்த பெண்மணிகள் அவசியம் தங்கள் கைத்திறன் பயன்படக் கூடிய வீட்டுத் தொழில்களைக் கற்றுக் கொண்டு, குடும்ப வருமானம் சிறிதளவேனும் அதிகமாவதற்கு உதவ வேண்டும் என்று "கல்கி" ஆசிரியரும் ஸ்ரீ பார்த்தசாரதி ஐயங்காரும் வற்புறுத்திக் கூறினார்கள்.

இந் நாட்டில் நடுத்தர வகுப்புகளைச்

மேற்படி கண்காட்சி நாலு தினங்கள் நடைபெற்றது. பலரும் திரளாக வந்து கண்காட்சியைப் பார்த்துப் பயன் அடைந்தார்கள்.

# உங்கள் பற்களுக்கும் ஈறுகளுக்கும் ஏற்றது




## நீம் டூத் பேஸ்ட்

இயற்கையான க்ளோரபிலுடன் கெடுதலை எதிர்க்கும் சக்தி, பூச்சியை அழிக்கும் வன்மை மற்றும் அழிவுச் சக்திகளை ஒழிக்கும் தன்மையைப் பெற்றிருப்பதுடன் பல் வைத்தியம் சம்பந்தப்பட்ட நூதன முறை ஆரோக்ய விதிகளையும்கொண்டது. பெரிய சைஸ்களிலும் கிடைக்கும்.




## Margofrice
*Neem Dental Powder*

மார்கோப்ரைஸ் பற்பொடியை விரும்புகிறவர்களுக்கு இது ஏற்றது. நீம் பற்பசையில் இருப்பவை இதிலும் உள்ளன.

**CALCHEMICO PRODUCTS**

தென் இந்தியா ஆபீஸ்:
5/149, பிராட்வே, மதராஸ்-1



**பாதி விலைக்கும் குறைவு**
ஒரு மாதத்திற்கு இந்தச் சலுகை
ஒவ்வொன்றும் 5 வருட உத்திரவாதம்

| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| அலாரம்கடிகாரம் | ரூ. 30, | 14/- |
| ,, உயர் ரகம் | ரூ. 40, | 16/- |
| பாக்கெட் கடிகாரம் | ரூ. 30, | 12/- |

No. 11 Size 6½"



| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. 80 | 36/- |
| 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோன்ஸ் | ரூ. 90 | 38/- |

No. 13 Size 9¾"
Water Proof



| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| 15 ,, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | ரூ. 80 | 37/- |
| 17 ,, ஸ்டெயின்லெஸ் ஸ்டீல் | ரூ. 90 | 44/- |
| 17 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு 10 மைக்ரோன்ஸ் | ரூ.130 | 60/- |

No. 14 Size 8¾"



| | ஒரிஜினல் விலை | விற்பனை விலை |
|---|---|---|
| 15 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. 75 | 32/- |
| 15 ஜுவல்ஸ் 10 மைக்ரோன்ஸ் | ரூ. 85 | 34/- |
| 5 ஜுவல்ஸ் ரோல்டு கோல்டு | ரூ. 42 | 20/- |

**குறைந்த விலையில் பவுண்டன் பேனாக்கள்**



ஸ்வான் கோல்ட் நிப் பவுண்டன் பேனா ரூ. 14/-
கோல்ட் கேப் ரூ. 18/- பிளாக் பேர்டு ரூ. 13/-
ராஜா(ஜெர்மன்)ரூ. 10/- வல்குரைட் மாடல் ரூ. 6/-
வில்சன் ரூ. 5/- பார்க்கர் ஜூனியர் மாடல் (ஜப்பான்) ரூ. 7/-

**PIONEER WATCH COMPANY**
Post Box No. 11428 - CALCUTTA-6

# பொன் விளையும் பூமி

பி. எஸ். ரங்கநாதன்

ஆத்தூர் பண்ணையில் கதிர் முற்றிச் சாய்ந்து அறுவடைக்குத் தயாரா யிருக்கும் நெற்பயிர்.

---

விவசாயக் கல்லூரியில் நன்றாகப் படித்துப் பரீட்சையில் முதல் வகுப்பில் தேறிய ஓர் இளைஞன் கிராமத்துக்குச் சென்றான். ஒரு மரத்தைப் பார்த்தான். அது பசுமையாக இல்லாமல் கொஞ்சம் உலர்ந்து இளைத்து இருந்தது. விவசாயியைப் பார்த்து அவன், "இரசாயன உரம் போட்டு இந்த மரத்தை வளர்த்தால் எவ்வளவு மாங்காய்கள் காய்க்கும் தெரியுமா?" என்று கேட்டான். விவசாயி நிதானமாக, "இந்த மரத்தில் மாங்காய் காய்க்க முடியாது! ஏனெனில் இது வேல மரம்!" என்றான். இந்தக் கதை, படித்தவர்கள் விவசாயம் செய்யப் போவதைப் பரிகசிக்கும் முறையில் கூறப்படுகிறது. இதற்கு நேர்மாறாக, படித்தவர்கள் விவசாயத்தைச் சிரத்தையுடனும் ஆர்வத்துடனும் செய்ய ஆரம்பித்தால் எவ்வளவு அற்புதமாக விவசாயம் செய்ய முடியும் என்பதைச் செய்து நிரூபித்திருக்கும் நண்பர் ஒருவரை நான் அறிந்திருக்கிறேன். சமீபத்தில் அந்த நண்பரின் சிறந்த பண்ணையைப் பார்த்தேன். செங்கற்பட்டுக் கருகிலுள்ள ஆத்தூர் கிராமத்தில் ஏறக்குறைய 250 ஏக்கரா நிலத்தில் இந்தப் பண்ணை அமைந்துள்ளது.

மேல் நாட்டுக் கதைகளையும் அந்நாட்டுப் பெரியோர்களின் வாழ்க்கை வரலாறுகளையும் படிக்கும் பொழுது நாம் விவசாயப் பண்ணை (Farm House) களைப் பற்றிய பல குறிப்புகளைப் படித்துள்ளோம். அதாவது அங்குள்ள விவசாயப் பண்ணையும், பண்ணை வீடும் இயற்கை வனப்புகளுடன் கூடிய சுக வாசஸ்தலமாக இருக்கும் என்று படித்திருக்கிறோம். அந்த மாதிரிப் பண்ணைதான் ஆத்தூர்ப் பண்ணையாகும்.

சில தினங்களுக்கு முன்பு ஆசிரியர் கல்கி ஆத்தூர்ப் பண்ணையைப் பார்ப்பதற்காகச் சென்றபோது, செங்கற்பட்டு சேவா சங்கத்தைச் சேர்ந்த நாங்கள் பத்துப் பேர் கூடச் சென்றோம். காலையில் செங்கற்பட்டிலிருந்து புறப்பட்டு ஆத்தூர்ப் பண்ணையை அடைந்ததிலிருந்து, அங்கிருந்து மாலையில் திரும்பி வரும் வரையில் பேசப்பட்ட விஷயம் விவசாயம்; தவறினால் காந்தியம்.

ஆம்! அந்தப் பண்ணையில் நமது நாட்டின் இரண்டு ஜீவநாடிகள்—விவசாயமும் காந்தியமும்—தழைத்திருப்பதைக் கண்டோம்.

ஆத்தூர் பண்ணைக்காரர் ஸ்ரீ சீனிவாச ஐயர் பி. ஏ., பி. எல்., செங்கற்பட்டு நகரில் வக்கீல் தொழிலும் நடத்தி வருகிறார். ஆனால் இவருடைய கவனத்தை முக்கியமாகக் கவர்ந்திருப்பது விவசாயந்தான். இவர் வசிப்பதும் கிராமத்தில் வயல்களுக்கு மத்தியில் அமைந்த பண்ணை வீட்டிலேதான்.





1. இரண்டு மாதத்து நெற்பயிர். 2. ஆத்தூர்ப் பண்ணையில் நூல் நூற்கப் பயின்ற பள்ளிச் சிறுவர்களுக்கு அவர்கள் நூற்ற நூலினால் நெய்த கதர்த் துணிகள் வழங்கப்படுகின்றன. போட்டோ : எம். டி. கணேஷ்

பசுமையான பண்ணைக்கு மத்தியில் பர்ணசாலை போன்ற ஒரு சிறிய வீட்டைக் கச்சிதமாகக் கட்டிக் கொண்டிருக்கிறார். அந்த வீட்டில் மின்சார விளக்கு, மின்சார விசிறி, ரேடியோ எல்லாம் இருக்கின்றன. சென்னை, செங்கற்பட்டு ஆகிய இடங்களுக்குப் பேச டெலிபோன் இருக்கிறது. வயல்களில் பல இடங்களிலும் வேலை செய்வோரிடம் வீட்டிலிருந்தபடி பேச உதவுவதற்காகச் சொந்த ஏற்பாட்டில் இண்டர்-கம்யூனிகேஷன் டெலிபோன் முறை அமைத்துள்ளார்.

வீட்டு வாசலில் ஒரு கீற்றுக் கொட்டகை. அதிலேதான் அவருடைய விவசாய ஆபீஸ், விருந்தினர் தங்குமிடம் எல்லாம்.

கொட்டகையிலிருந்து வீட்டை நோக்கினால், அந்த வீட்டின் சுவர்களெல்லாம் நமக்கு எத்தனையோ சமாசாரங்களைக் கூறுகின்றன. அடுத்த அறுவடை என்றைய தினம்? அறுக்க வேண்டியது என்ன பயிர்? தண்ணீர் இறைக்க வேண்டியது எந்த நிலத்துக்கு? இயற்கை உரம் என்று எந்த நிலத்துக்குப் போட வேண்டும்? போன மாதம் எவ்வளவு மழை பெய்தது? சென்ற ஆறு வருஷத்தில் அதே மாதத்தில் எவ்வளவு சராசரி மழை? இன்று எந்த வயலில் எத்தனை ஆட்கள் வேலை செய்கிறார்கள்? கையிருப்பு எத்தனை படி நெல்? எத்தனை படி அரிசி? எவ்வளவு வைக்கோல்? அன்று ஆட்கள் எத்தனை மண் வெட்டிகள் வேலைக்கு எடுத்துப் போய் இருக்கிறார்கள்? இவை போன்ற சமாசாரங்கள் சுவர்களில் உள்ள கட்டங்களில் அவ்வப்போது விவரமாகக் குறிக்கப்படுகின்றன.

சுவரில் உள்ள விவரங்களைப் பண்ணையார் சீனிவாச ஐயர் பார்த்து விட்டு, "கீழ்க் கிணறு வயல் சின்னச் சம்பாவை நாளை அறுத்தாக வேண்டும்" என்று கூறுவார். மறுநாள் அறுவடை நடந்து விடும். இதில் ஆச்சரியமான சமாசாரம் என்னவென்றால், அவர் கீழ்க்கிணறு வயலில் உள்ள பயிரைச் சோதித்துக் கதிர் முற்றி விட்டதா என்று பார்த்திருக்க வேண்டிய அவசியமில்லை. மேற்படி வயலில் என்றைக்கு நடவு ஆயிற்று என்பதைச் சுவரில் எழுதியுள்ள விவரங்கள் தெரியப்படுத்தும். இதிலிருந்து, இந்தத் தேதியன்று கதிர் முற்றிவிடும் என்று அவர் ஊகித்துக் கொள்வார். அந்தத் தேதியன்று பயிர் முற்றித் தயாராக இருக்கும்!

"இவ்வளவு ஏக்கராவில் நெற்பயிர் இடுகிறீர்களே! அறுவடையான நெல்லை எங்கு சேமித்து வைக்கிறீர்கள்?" என்று கேட்ட போது, "சேமித்து வைப்பதா? அறுவடையானதும் ஆட்களுக்கு மாதத்துக்கான தேவை நெல் கொடுத்து விட்டு, மிகுந்ததை அப்போதே விற்று விடுகிறேன்" என்றார்.

ஆடி ஆவணியில் நடுவது, தை மாசியில் அறுவடை செய்வது என்ற முறையை இந்தப் பண்ணையில் அனுசரிப்பதில்லை. ஒவ்வொரு மாதத்திலும் நடவு உண்டு; ஒவ்வொரு மாதத்திலும் அறுவடையும் உண்டு. வருஷத்தில்

பன்னிரண்டு மாதத்திலும் அறுவடையாகி நெல் வருகிறது. ஆகையால் ஒரேயடியாகச் சேர்த்து வைக்கும் அவசியம் ஏற்படுவதில்லை. கிணற்றிலிருந்து நீர் இறைத்து நடுவதால், இவ்விதம் பன்னிரண்டு மாதமும் நெற்பயிர் செய்வது சாத்தியமாகிறது.

இந்தப் பண்ணையில் நெற் பயிருடன், காய்கறி வகைகள், உளுந்து, எள், கரும்பு, திராக்ஷை, பருத்தி முதலியனவும் பயிராக்கப் படுகின்றன. இங்குள்ள பண்ணையாட்களில் பலர் நூல் நூற்கக் கற்றுக் கொண்டிருக்கிறார்கள். தாங்கள் வளர்த்த பருத்தியிலிருந்து கொட்டை நீக்கிப் பஞ்சுப் பட்டை போட்டு இராட்டையில் நூல் நூற்கிறார்கள். இந்த நூல் திருப்பூருக்கு அனுப்பி வேஷ்டிகளாகவும் துண்டுகளாகவும் நெய்யப்பட்டுத் திரும்பி வருகிறது. நெசவுக் கூலியை நூல் சிட்டமாகவே கொடுத்து விடுகிறார்கள். இந்தப் பண்ணையில் ஏறக்குறைய எழுபது நபர்கள் ஒரு குடும்பத்தினர் போல் வாழ்ந்து வருகின்றனர். எல்லாருக்கும் வருடம் பூராவும் வேலை இருக்கிறது. அவர்களுக்குத் தேவையான எல்லாம் பண்ணையிலேயே கிடைக்கின்றது. உப்பு, மண்ணெண்ணெய் மட்டும் மொத்தமாக வாங்கி, அவர்களுக்கு இனமாகப் பங்கிட்டுக் கொடுக்கிறார் பண்ணையார்.



1. ஆத்தூர்ப் பண்ணையின் தலைமை ஸ்தானத்திலிருந்து பண்ணையார் வயல்களில் வேலை செய்வோரிடம் டெலிபோனில் பேசுகிறார்!



2. ஆத்தூர்ப் பண்ணையில் விளைந்திருக்கும் கரும்பு (மூன்றாம் வருஷ ஆரம்பம்.)



3. ஆத்தூர்ப் பண்ணையில் விளைந்த பருத்தியை அங்கேயே அரைத்து, பஞ்சாக்கி, நூல் நூற்று, நூலைத் திருப்பூருக்கு அனுப்புகிறார்கள். கதர்த் துணி வேண்டிய அளவு கிடைத்து விடுகிறது.

விவசாய அபிவிருத்தி பற்றிப் பல கோணங்களிலிருந்தும் பேச்சுக்கள் நடந்தன. பண்ணையாரைக் "கல்கி" ஆசிரியர் துருவித் துருவிப் பல கேள்விகள் கேட்டார். எல்லாக் கேள்விகளுக்கும் ஸ்ரீ சீனிவாசய்யர் தக்க பதில் சொன்னார்.

"நடுத்தர வகுப்பைச் சேர்ந்த இளைஞர்கள் பலர் படித்து விட்டு வேலையில்லாமல் திண்டாடுகிறார்களே! அவர்களுக்கு விவசாயம் ஜீவனோபாயமாக முடியுமா?" என்பது கல்கி ஆசிரியரின் முக்கியமான கேள்வி.

"கட்டாயம் முடியும்" என்றார் சீனிவாசய்யர். அவர் மேலும் கூறியதாவது:— "விவசாயத்தை லாபகரமாக நடத்த முடியாது என்று பலர் கருதுகிறார்கள். இது முற்றிலும் தவறு. படித்த இளைஞர்கள் அறிவைச் செலுத்தி ஊக்கமுடன் வேலை செய்தால் மற்ற உத்தியோகங்களைக் காட்டிலும் விவசாயத்தில் அதிகம் சம்பாதிக்கலாம். ஆனால் வெறுங் கை முழம் போடாது. பத்து ஏக்கரா நல்ல நிலம் வேண்டும். அதில் ஒரு பெரிய கிணறு வேண்டும். கையில் இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ரூபாய் மூலதனம் வேண்டும். இந்தச் சாதனங்களை வைத்துக் கொண்டு சரியானபடி திட்டமிட்டு விவசாயம் செய்தால், எல்லா விவசாயச் செலவுகளும் போக, மாதம் 300 ரூபாய் குறைந்த பட்சம் சம்பாதிக்கலாம்!"

இதைக் கேட்டதும் எங்களில் ஒருவர் "அடேடே! ஒரு தாசில்தாரின் சம்பளம் ஆயிற்றே!" என்றார்.

"தாசில்தார் சம்பளமா? இப்போதெல்லாம் டிபுடி கலெக்டரின் சம்பளமே அவ்வளவுதான்!" என்றார் இன்னொருவர்.

"அதோடு, கிராம வாசம்; செலவுகளும் குறைவு!" என்றார் ஸ்ரீ சீனிவாசய்யர்.

மேற்கண்ட விஷயமாக, கல்கி ஆசிரியர் பல குறுக்குக் கேள்விகள் போட்டார்; புள்ளி விவரங்களைக் கேட்டார். ஸ்ரீ சீனிவாசய்யர் "பத்து ஏக்கரா நிலத்தில் திட்டமிட்டு விவசாயம் செய்தால் வருஷத்தில் ஐயாயிரம் ரூபாய் வரையில் நிகர லாபம் சம்பாதிக்கலாம்" என்பதாகச் சாதித்தார்.

* * *

நிலம் வைத்திருப்பதற்குச் சர்க்கார் சட்டத்தின் மூலம் அதிக பட்ச வரம்பு ஏற்படுத்துவது பற்றிய பேச்சு வந்தது. இதைப் பற்றி ஸ்ரீ சீனிவாசய்யர் கூறியதாவது:—

"ஒரு தனி மனிதன் இவ்வளவு நிலம்தான் வைத்துக் கொள்ள வேண்டும் என்று வரையறுப்பது பொதுவாக நல்லது தான். ஆனால் இப்போது நம் நாட்டிலுள்ள நிலைமையில் இது தீங்கு விளைக்கும். விவசாயம் வளர்வதற்குத் தடையாயிருக்கும். ஏற்கெனவே தரிசாகக் கிடந்த இருநூறு ஏக்கரா நிலத்தை நான் சாகுபடிக்குத் தகுதியாக்கிப் பயிர் செய்கிறேன். ஏராளமான மூலதனம் போட்டிருக்கிறேன். நூறு ஆட்களுக்கு வருஷம் முழுதும் வேலை கொடுக்கிறேன். பல பெரிய கிணறுகள் எடுத்து, நீர் இறைக்க என்ஜின்கள் வைத்திருக்கிறேன். ஆனால் நிலம் பிரிக்கப்பட்டு உழவர்களுக்குப் பகிர்ந்து கொடுக்கப்பட்டால், பயிரிட மூலதனம் இல்லாத காரணத்தினால் பலர் விவசாயம் செய்யாமலேயே வைத்திருக்க நேரும். என்னிடம் வேலை செய்யும் பல விவசாயிகள் தங்கள் சொந்த நிலங்களையும் என்னுடைய நிலங்களுடன் சேர்த்து என்னையே பயிரிடச் சொல்கிறார்கள். தரிசு நிலங்களை விவசாயத்துக்குத் தகுதியாக்குவதற்கும், நவீன வசதிகளைக் கையாண்டு விவசாயத்தை விஞ்ஞான முறையில் வளர்ப்பதற்கும் நில உரிமைக்கு வரம்பு கட்டுவது தடையாயிருக்கும். பெரிய அளவில் விவசாய ஆராய்ச்சிகள் நடத்தி நாட்டின் வளத்தைப் பெருக்க முடியாது."

"நீங்கள் என்ன சொல்லி என்ன பயன்? சீக்கிரத்தில் நிலவரம்புச் சட்டம் வரத்தான் போகிறது!" என்றார் எங்களில் ஒருவர்.

"கவலையில்லை. எல்லாருக்கும் ஆகிறது எனக்கும் ஆகிவிட்டுப் போகிறது! பத்து ஏக்கரா நிலமாவது எனக்கு விட்டு வைப்பார்கள் அல்லவா?" என்றார் சீனிவாசய்யர்.

"மற்றவர்களுடைய நிலத்தை எடுத்துக் கொண்டாலும் எடுத்துக் கொள்ளா விட்டாலும், முதலில் சீனிவாசய்யரின் நிலத்தைச் சர்க்கார் எடுத்துக் கொள்ள வேண்டும்!" என்றார் கல்கி ஆசிரியர்.

மேலும் தொடர்ந்து, "ஆமாம்; இந்த ஆத்தூர்ப் பண்ணையை ஒரு மாதிரிப் பண்ணையாகச் செய்து எல்லாரும் வந்து பார்த்துப் போகும்படி செய்ய வேண்டும். விவசாயிகளும் வந்து பார்க்க வேண்டும்; விவசாய இலாகா உத்தியோகஸ்தர்களும் பார்க்க வேண்டும்; வேலை தேடித் தவிக்கும் மத்திய வகுப்பைச் சேர்ந்த படித்த இளைஞர்கள் அவசியம் வந்து பார்க்க வேண்டும்!" என்றார்.

* * *

ஸ்ரீ சீனிவாசய்யர் விவசாயத்தில் எவ்வளவு ஊக்கம் கொண்டவரோ, அவ்வளவு காந்தியத்திலும் பற்றுக் கொண்டவர். கிராமங்களின் சுய தேவைப் பூர்த்தித் திட்டத்தில் அவருடைய நம்பிக்கை அபாரமானது. காரியத்திலும் செய்து காட்டுகிறார்.

"கல்கி" ஆசிரியருடன் பண்ணையைப் பார்க்கச் சென்ற எங்கள் எல்லாருக்கும் மத்தியான உணவு அளித்தார். ஐந்தாறு வகைக் கறிகளுடன் பெரிய விருந்து தயாரித்திருந்தார். அரிசி, பருப்பு, கறிகாய்கள் எல்லாம் பண்ணையிலேயே விளைந்தவை.

சென்ற ஆண்டில் அரை நாள் பள்ளிக்கூடம் நடந்தபோது, பள்ளிச் சிறுவர்கள் பலர் பண்ணைக்கு வந்து நூல் நூற்கப் பயின்றார்கள். அவர்கள் நூற்ற நூலைத் திருப்பூருக்கு அனுப்பித் துணியாக நெய்து திரும்பத் தருவித்திருந்தார். அந்தக் கதர்த் துணிகளை, நூல் நூற்ற பிள்ளைகளுக்குக் "கல்கி" ஆசிரியரைக் கொண்டு வழங்கச் செய்தார்.

காந்திஜியின் சர்வோதயக் கொள்கைகள் பலவற்றை நடைமுறையில் கொண்டு வந்திருக்கும் ஆத்தூர் விவசாயப் பண்ணையைக் காந்தியத்திலும், விவசாயத்திலும் ஊக்கமுள்ளவர்கள் அவசியம் பார்க்க வேண்டும்.

'விஸ்டம்' உபயோகித்து பற்களை பாதுகாருங்கள். நீடித்து உழைக்கும் டூத் பிரஷ்!

SAVE YOUR TEETH WITH 'WISDOM'- THE LONG-LASTING TOOTHBRUSH!

చిరకాలము మను టూత్ బ్రష్ 'విజ్ డమ్' తో మీ దంతములను కాపాడుకొనుడు.

# Wisdom REGD.

Wisdom
Wisdom
made with NYLON tufts

எம்மொழியிலும் விஸ்டம் கேட்பது விவேகமாகும் — அது நீடித்து உழைக்கும், சரியான வடிவமுள்ள நைலன் டூத் பிரஷ்

*In any language, it's wise to ask for WISDOM — the long-lasting, correct-shape nylon toothbrush.*

ఏ భాషలోనైనా 'విజ్ డమ్' అని అడగటం వివేకమైనది. చిరకాలం మను సరైన ఆకారంగల ప్లాస్టిక్ పండ్ల తుంచె.

42

# நினைத்ததும் நடந்ததும்

புஷ்யன்

"கல்யாணி!" என்ற குரலைக் கேட்டதும் சைனாபஜார் நடைபாதையில் பிளாஸ்டிக் சீப்பு ஒன்றை விலை பேசிக் கொண்டிருந்த கல்யாண ராமன் திடுக்கிட்டான். அவனை அந்தச் செல்லப் பெயரால் கூப்பிட்டு எத்தனையோ வருஷங்களாகி விட்டன. அந்தச் செல்லப் பெயரை வைத்துக் கூப்பிட்டவர் யார் என்று கண்டு பிடிக்க அவன் சிரமப்படவில்லை. எத்தனையோ வருஷங்களாகி விட்டபோதிலும் அது 'டக்'கென்று தெரிந்து விட்டது. அந்தக் குரல்தான் அவன் உள்ளத்தில் சதா கேட்டுக் கொண்டே இருக்கிறதே! ஆகவே அவனைக் கூப்பிட்டது அவனுடைய மாமா சபேசன்தான் என்று அவனுக்கு நிச்சயமாய்த் தெரிந்துவிட்டது. சட்டென்று அவர் கண்களி லின்றும் மறைந்துவிடப் பிரயத்தனம் செய்தான். ஆனால் அவனுக்கு மாபெரும் தோல்விதான். அதற்குள் அவன் மாமா சபேசன் அவனுடைய தோளைத் தொட்டு நிறுத்தி விட்டார்.

"என்னடா கல்யாணி, எப்போடா வந்தாய்! இங்கேதான் உத்தியோகமா!" என்று கேட்டார்.

கல்யாணம் மென்று விழுங்கிக்கொண்டே என்ன பதில் சொல்வதென்று புரியாமல் விழித்தான். பிறகு "ஆமாம், மாமா...வேலையாக வந்தேன்..." என்று அசட்டுச் சிரிப்பு சிரித்தான்.

"சென்னைக்கு வந்தவன் எனக்கு ஒரு கடிதாசி போடுவதற் கென்னடா!"

"இன்றைக்குக் காலையில்தான் வந்தேன். திடீ ரென்று கிளம்பியதால் கடிதாசி போட முடிய வில்லை" என்று ஒரு போடு போட்டான்.

"எங்கே தங்கி யிருக்கிறாய்!"

"ஒரு சிநேகிதன் வீட்டில்."

"இப்போது என்னுடன் நம் வீட்டுக்கு வருகிறாயா!"

"இல்லை மாமா; என் சிநேகிதன் அறையிலே காத்துக் கொண்டிருப்பான். நாளைக்குக் காலை யில் கண்டிப்பாய் வீட்டுக்கு வருகிறேன்" என்று அவசரப்பட்டான் கல்யாணம்.

"சரி, மறந்துவிடாதே...ஆமாம்...உன் நண்பன் விலாசம்என்ன சொல், நீ வர மறந்துவிட்டால்..."

கல்யாணராமன் சபேசனை மனத்துள் சபித் தான். விடாக்கண்டரா யிருக்கிறாரே என்று ஏதோ ஒரு விலாசம் வாய்க்குவந்ததைக் கூறினான்.

"சரி, நான் வருகிறேன். எங்கேயாவது வெளி யிலே போய் விடாதே. நான் காலையில் எட்டு மணிக்கு வருகிறேன்" என்றார் சபேசன்.

"ஓ, கண்டிப்பாய் இருக்கிறேன்."

★

கல்யாணராமன் அவன் பெற்றோருக்கு ஒரே பிள்ளை. அவனுடைய தகப்பனார் ரயில்வேயில் வடக்கே எங்கோ ஒரு சிறு ஊரில் இருந்தார். அங்கேயே வீட்டில் தாயாரிடம் நான்காவது வகுப்புப் புத்தகங்கள் வரை படித்துத் தெரிந்து கொண்டுவிட்டான். மேல் படிப்புக்குச் சென்னையி லிருந்த அவனுடைய மாமா வீட்டில் அவனைக் கொண்டு வந்து விட்டார்கள். அவனுக்கு முதலில் சென்னையில் படிக்கிறோம் என்ற குஷி. அதனால் ரொம்பவும் ஜோராகப் படித்து வந்தான்.

அவனுடைய மாமாவுக்கு ஒரு பெண். சரோஜா என்று பெயர். அப்போது அவளுக்கு வயது மூன்று. அவள் எப்போதும் அவனிடம் வந்து அவனைப் படிக்க வொட்டாமல் ஏதாவது விஷமம் செய்து கொண்டே இருப்பாள். அவனுக்கு அவளைக் கண்டாலே பிடிக்காது. அவனுக்குத் தெரியாமல் வந்து அவன் முதுகின்மேல் பொத் தென்று விழுவாள். கிள்ளுவாள். தலையில் குட்டு வாள். தலைமயிரைப் பிடித்து இழுப்பாள். அவன் எழுதி வைப்பதன்மேல் கிறுக்கி விடுவாள். அவன் அவளைக் கண்டிக்கப் போனால் அவள் 'ஓ'வென்று வீடே அதிர்ந்து விடும்படி அழுவாள்.

வயதாக ஆக அவள் விஷமங்கள் அதிகரித்து வந்தன. அவளுக்கு ஆறு வயதானதும் பள்ளிக் கூடத்தில் சேர்த்தார்கள். அவள் பள்ளிக்கூடமும் அவனுடைய பள்ளிக்கூடத்துக்கு அருகில் இருந்த தால் அவளைப் பள்ளிக்கு அழைத்துக் கொண்டு போய் அழைத்து வரும் பொறுப்பு கல்யாணத் துக்கு ஏற்பட்டு விட்டது.

அவன் எஸ். எஸ். எல். ஸி. படித்தபோது சரோஜா இரண்டாம் பாரம் படித்துக் கொண் டிருந்தாள். அவளுக்கு அப்போது பதினொரு வயது. அவ்வளவு வயதாகியும்கூட அவள் கொஞ்சமும் மாறவில்லை. அவளுடைய துடுக்குத் தனமும், அவனுடைய வயிற்றெரிச்சலைக் கொட் டிக் கொள்வதும் கொஞ்சமும் குறையவில்லை. அவனுக்கு எப்போதடா படிப்பை யெல்லாம் முடித்துக் கொண்டு இந்த மாமா வீட்டை விட்டுப் போகலாம் என்று தோன்றி விட்டது.

அவனுடைய மாமா சபேசனும் மாமியும் ஒரு நாள் தனியாக அமர்ந்து பேசிக் கொண்டிருந்தது அவன் காதில் விழுந்தது.

"நான் சொன்னேனே, கல்யாணத்தின் அப்பா வுக்குக் கடிதாசு எழுதினீர்களோ!" என்றாள் மாமி.

"ஓ! எல்லாம் எழுதிப் பதில்கூட வந்து விட் டது. சரோஜாவின் கல்யாணத்தைப் பற்றி நீங்கள் கவலைப்பட வேண்டாம். கல்யாணராமனுக்கு அவள்தான் மனைவி என்று அவன் அப்பா எழுதி யிருக்கிறார்" என்றார் சபேசன்.

அதைக் கேட்டதும் கல்யாணராமனுக்கு அதிர்ச்சியா யிருந்தது. அவனுக்கு அப்போது வயது பதினேழு. எல்லா விவரங்களையும் நன்கு அறிந்தவன். சரோஜாவைத் தனக்குக் கல்யாணம் செய்து வைக்க முயற்சி செய்கிறார்கள் என்ற சமாசாரம் கேள்விப்படவே அவன் நடுங்கினான். சரோஜாவின் மேல் அவ்வளவு வெறுப்பு அவ னுக்கு. அவளைக் கல்யாணம் செய்து கொண்டு தன்னால் சமாளிக்க முடியாது என்ற எண்ணம் அவனுக்கு உண்டாகி யிருந்தது.

இன்னும் கொஞ்ச நாட்கள்தான் இருந்தன, அவன் எஸ். எஸ். எல். ஸி. பரீட்சை முடிய. அதற்கு முன்பே அவனைத் தங்கள் மாப்பிள்ளை யாக்கத் தீர்மானித்து விட முயற்சி நடக்கவே அவனுக்கு முன்னிலும் சரோஜாவிடம் வெறுப்பு அதிகமாயிற்று. அவளைக் காணவே பயந்தான். அவள் மேல் எரிந்து விழுந்தான். ஆனாலும் சரோஜா அவனுக்குக் கொஞ்சமும் பயப்படாமல் எப்போதும் போல் அவனைக் கேலி செய்தாள்.

ஒருவாறாகப் பரீட்சை முடிந்ததும் அடுத்த நாளே அவன் ஊருக்குக் கிளம்பி விட்டான். "கல்யாணம் மறக்காமல் ஊர் போய்ச் சேர்ந்ததும் கடிதாக போடு," என்றார் சபேசன்.

"ஓ. போன உடனே எழுதறேன்" என்றான் கல்யாணராமன். ஆனால் மனத்துக்குள் 'இனி ஜன்மம் உள்ள வரையில் உங்களை நினைப்பேனா!' என்று நினைத்துக் கொண்டான்.

அவ்வளவுதான். ஊருக்குப் போனதும் அவன் மாமா, மாமி, சரோஜா எல்லோரையும் மறந்து விட்டான். அவன் அம்மாவிடம் மட்டும், "இதோ பார் அம்மா! அந்த சரோஜாவை மட்டும் நான் கல்யாணம் பண்ணிக் கொள்ள முடியாது. இது நிச்சயம்" என்றான்.

"போடா அசடு...இப்போ அப்படித்தான் இருப்பாய். பின்னால் எல்லாம் சரியாகி விடும்..." என்றாள் சிரித்துக் கொண்டே.

கொஞ்ச நாட்கள் கழிந்து அவனுக்குக் கல்கத்தாவில் 'விநோத்' பாங்கியில் வேலையாயிற்று. அவன் குஷியாகக் காலம் தள்ளிக் கொண்டிருந்தான். ஒருநாள் அவன் தகப்பனார் அவனுடைய விவாக விஷயமாய் எழுதி யிருந்தார். சரோஜாவைக் கல்யாணம் செய்து கொள்ளும்படி தான். ஆனால் அவன் அப்போதும், "நான் அவளை மட்டும் கண்டிப்பாகக் கல்யாணம் செய்து கொள்ள முடியாது" என்று எழுதி விட்டான். ஒரே மகனாயிற்றே, அவனுக்கு விரோதமாகப் போகக்கூடாது என்று நினைத்தாரோ என்னவோ, "சரி உன்னிஷ்டம்," என்று எழுதி விட்டார்.

*

அன்று ஆபீஸ் போனதும் அவனுக்காகக் காத்திருந்த உத்தரவைக் கண்டதும் அவன் செயலிழந்து விட்டான். அவசர வேலைக்காக அவனைச் சென்னைக் கிளைக்கு மூன்று மாதத்துக்கு மட்டும் மாற்றி யிருந்தார்கள். சென்னைக்குப் போவதென்றால் அவனுடைய மாமா சபேசன் எப்படியும் அவனைவிட மாட்டார் என்று பயந்தான். அதனால் அந்த உத்தரவை ரத்து செய்து கொள்ள எவ்வளவோ பிரயத்தனப் பட்டான். ஆனால் ஒன்றும் பலிக்கவில்லை. இன்னும் ஒரு வாரத்தில் புறப்பட வேண்டும் என்று கூறிவிட்டார்கள். அவன் தன் தகப்பனாருக்கு எழுதிய கடிதத்தில், "நான் சென்னை போவதைப் பற்றி மாமாவுக்குத் தெரிவிக்க வேண்டாம்" என்று எழுதினான்.

மூன்று மாதங்கள்தானே எப்படியாவது மாமா வீட்டாரின் கண்களில் படாமல் தப்பித்துக் கொண்டு விடலாம் என்று ஆறுதலடைந்து சென்னைப் பட்டினம் வந்து சேர்ந்தான். எழும்பூரில் ஒரு அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டு இருந்தான். அவன் உள்ளுக்குள்ளே மட்டும், 'எங்கே மாமா பார்த்துவிடப் போகிறாரோ' என்ற பயம் இருக்கத்தான் செய்தது. அவன் மாமா அவனைக் கண்டால் விடமாட்டார் என்று அவனுக்குத் தெரியும்.

கடைசியில் அவன் பயந்தபடியே ஆயிற்று. அவர் அவனைக் கண்டு பிடித்துவிடவே அவன் திடுக்கிட்டான். அவருக்கு ஏதோ சால்ஜாப்பு சொல்லி விட்டு வந்து விட்டான்.

*

அடுத்த நாள் காலை சட்டையைப் போட்டுக் கொண்டு, தலையை வாரிக் கொண்டிருந்தவன் காதில் சபேசனின் பேச்சுக் குரல் விழுந்ததும்

திடுக்கிட்டான். அவர் எப்படி அங்கே வந்தார் என்று புரியாமல் விழித்தான்.

"கல்யாணி!" என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தார் சபேசன்.

கல்யாணம் திருதிரு வென்று விழித்தான். "என்னடா விழிக்கிறாய்! நான் எப்படி உன் இருப்பிடத்தைக் கண்டு பிடித்தேன் என்று நினைக்கிறாயா! நேற்று நீ உன் விலாசத்தைக் கூறத் தடுமாறி உளறிக் கொட்டியதும் உன் விலாசம் சரியில்லை என்று கண்டு கொண்டேன். உடனே உன்னைப் பின் தொடர்ந்து வந்து விலாசத்தைக் கண்டுபிடித்து விட்டேன்" என்றார் சபேசன்.

கல்யாணராமனுக்கு உடனே அவரிடம் மன்னிப்புக் கேட்டுக் கொள்ள வேண்டும்போல் இருந்தது. ஆனால் உடனே, 'இவருடைய பேச்சில் மயங்கக் கூடாது. இதெல்லாம் தம் பக்கம் வசியம் செய்து கொள்ளும் தந்திரம்' என்று நினைத்து மௌனமாக இருந்து விடுவது எல்லாவற்றுக்கும் நல்லது என்று பேசாமல் இருந்து விட்டான்.

"வீட்டுக்குப் போகலாமா!" என்றார் சபேசன்.

"உம், போகலாம். நானே அங்கு புறப்படுவதற்கு இருந்தேன்" என்றான்.

இருவரும் பஸ்ஸில் ஏறி உட்கார்ந்தனர். குசலமாக சிறிது நேரம் பேசியதும், "சரோஜா எப்பவும் உன்னையே நினைத்துக் கொண்டிருக்கிறாள். நான் அவளுக்கு எங்கெங்கோ வரன் தேடிக் கொண்டிருக்கிறேன். ஆனால் ஒன்றும் சரியாக அமையவில்லை. எனக்கும் மாமிக்கும், சரோஜாவை உனக்குத்தான் கொடுக்க வேண்டுமென்று ஆசை. ஆனால் நீதான் அவளைக் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று சொல்லி விட்டாய்" என்று ஏதேதோ சொல்லிக் கொண்டு போனார்.

கல்யாணராமனுக்கு மேலும் திகில் பிடித்துக் கொண்டது. அவர் மெள்ள சரோஜாவை அவன் தலையில் கட்ட அடி போடுகிறார் என்று கண்டதும் அவரை மெதுவாக மடக்க வேண்டும் என்று, "நான் என்ன செய்யட்டும் மாமா! எட்டு வருடங்களாக சரோஜாவுடன் நான் ஒரு சகோதரியாகப் பாவித்துப் பழகி விட்டேன். இப்போது அவளை மணந்து கொள்வதென்றால் என் மனம் எப்படி மாமா சம்மதிக்கும்!" என்றான்.

"உம்...அவள் பிராப்தம் எப்படி இருக்கிறதோ! ஆனால் அவளோ தனக்குக் கல்யாணமே வேண்டாம் என்று சொல்லிக் கொண்டிருக்கிறாள், நீ கல்யாணம் பண்ணிக் கொள்ள மாட்டேன் என்று மறுத்தது முதல். நீதான் அவள் மனசை மாற்றிக் கல்யாணம் செய்து கொள்ளச் சம்மதிக்கச் செய்ய வேண்டும். நாலு நாளைக்கு முன்பு ஒரு பிள்ளையாண்டான் வந்து பார்த்து விட்டுப் போனான். நல்ல இடம்தான், அநேகமாக அவர்கள் ஒப்புக் கொண்டு விடுவார்கள்."

அதற்குள் அவர்கள் இறங்க வேண்டிய இடம் வந்து விட்டது. பஸ்ஸிலிருந்து இறங்கி வீட்டை யடைந்தார்கள்.

"காமு! 'கல்யாணி' வந்திருக்கிறான் பார்!" என்றார் சபேசன் தம் மனைவியிடம்.

"வாடாப்பா கல்யாணி, ஞாபகம் இருக்கா எங்களை யெல்லாம்" என்று வரவேற்றாள் காமு.

காப்பி சாப்பிட்டுக் கொண்டிருந்த போது ஒரு பெண் வெளியிலிருந்து வீட்டுக்குள் நுழைந்தாள். கூடத்தில் அவன் உட்கார்ந்திருப்பதைக் கண்டு தலைகுனிந்து அவர்களைத் தாண்டிக் கொண்டு போனாள். கல்யாணராமன் அவளைக் கவனித்தான். உள்ளே சமையலறைக்குள் புகுந்து கதவிடுக்கில் மறையும்போது அவள் தலையைத்








ஆகஸ்டு 15-ம் சுதந்திர தினத்தில் திருவான்மியூருக்கு அருகிலுள்ள கோட்டிவாக்கம் கிராமத்தில் பாரத சேவக் சமாஜத்தின் முயற்சியினால் ஹரிஜனங்களின் உபயோகத்துக்காகக் குடி தண்ணீர்க் கிணறு தோண்டும் திருப்பணி ஆரம்பிக்கப்பட்டது. கிராமவாசிகள் உழைப்பையும், சர்க்கார் மற்றச் செலவுகளையும் அளிக்கிறார்கள். இந்தத் திருப்பணியை ஆரம்பித்து வைக்க விஜயம் செய்த சபாநாயகர் கனம் சிவசண்முகம் பிள்ளை, பாரத சேவக் சமாஜ ஊழியர்கள், உள்ளூர்ப் பள்ளிக்கூட ஆசிரியர்கள், பள்ளிக்கூடக் குழந்தைகள் ஆகியவர்களை இப்படங்களில் காணலாம்.

திருப்பி அவளைப் பார்த்தான். கல்யாணமும் பார்த்தான். அப்படியே பிரமித்து விட்டான்.

"என்னடா கல்யாணி, சரோஜாவை அடையாளம் தெரியவில்லையா!" என்று கேட்டார் மாமா.

"சரோஜாவா அது...! அடே," என்று ஆச்சரியத்துடன் வாய்விட்டுக் கேட்டு விட்டான். அவன் உள்ளத்தில் 'இவள் சரோஜாவா! நாலு வருஷங்களுக்கு முன் பார்த்த சரோஜாவா இவ்வளவு சுந்தரியாக மாறி விட்டாள்!' என்று கேட்டுக் கொண்டு வியந்தான். அவள் அவனைப் பார்த்த பார்வையை நினைத்துப் பார்த்தான். எவ்வளவு அகலமான கண்களால் அவனை விழித்துப் பார்த்தாள்! அந்தப் பார்வையில் அவன் உள்ளத்தையே பறித்து விட்டாளே!

"ஸார், தபால்," என்ற குரல் கேட்டது. சபேசய்யர் கடிதத்தை வாங்கி வந்து பிரித்துப் பார்த்தார். நான்கு நாட்களுக்கு முன் பார்த்து விட்டுப் போன பிள்ளையின் தகப்பனார் எழுதியிருந்தார். பெண் பிடித்து விட்டது. எல்லாம் சம்மதம். இந்த மாதத்திலேயே விவாகத்தை முடித்து விட வேண்டும் என்று கண்டிருந்தது.

"அப்பாடா, பகவான் கண் திறந்தார்" என்று மகிழ்ந்தார் சபேசன்.

கல்யாணியின் மனம் அந்தக் கடிதத்தின் சாரத்தை அறிந்ததும் ஏனோ அடித்துக் கொண்டது. சரோஜாவின் சுந்தர வதனம் அவனுடைய மனத்திரையில் நிழலாடியது. 'எப்போதோ பார்த்த சரோஜாவை மனத்தில் கொண்டு அவளை மணக்கமுடியாது என்று கூறி விட்டேனே. இன்று அவள் வேறு ஒருவன் மனைவியாகப் போகிறாளே' என்று எண்ணி ஏங்கினான். மாமாவிடம் போய் சரோஜாவைத் தங்கையாகப் பாவிக்கிறேன் என்று வேறே கூறிவிட்டதை நினைத்து நாக்கைக் கடித்துக் கொண்டான். இப்போது அதற்கு என்ன செய்வது என்று தவித்தான்.

அன்று ஞாயிற்றுக் கிழமையானதால் அவனை அங்கேயே தங்கி விடும்படி கூறினார். அவர் கூறுவதற்கு முன்பே கல்யாணராமன் அங்கு இருப்பதாகத் தீர்மானித்து விட்டான்.

மத்தியானம் சாப்பிட்டதும் அறையில் அவன் நாற்காலியில் சாய்ந்த வண்ணம் உட்கார்ந்து கொண்டு யோசித்துக் கொண்டிருந்தான்.

அவன் மாமா கூடத்தில் தூங்கிக் கொண்டிருந்தார். மாமி பக்கத்து வீட்டுக்குப் போயிருந்தாள்.

திடீரென்று அவன் இருந்த அறையில் இனிய மலரின் நறுமணம் புகுந்தது.

திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். சரோஜாவைத் தவிர வேறு யார் வந்திருக்க முடியும்!

அவளுடைய தலை குனிந்திருந்தது. "சரோஜா" என்றான் கல்யாணம்.

சரோஜா நிமிர்ந்து பார்த்தாள். அவள் நீண்ட கண்களிலிருந்து நீர் துளித்தது.

"சரோஜா ஏன் அழுகிறாய்! சொல்லேன்" என்று பரபரப்புடன் கேட்டான்.

"அத்தான்!" என்றாள் சரோஜா. அதற்கு மேல் அவளால் பேச முடியவில்லை.

"என்ன சரோஜா இப்படி! என்னைச் சிம்ம சொப்பனம் கண்டவள் போல் அலற வைக்கும் நீயா இப்படி அழுகிறாய்! பேச வெட்கப்படுகிறாயா!" என்றான் கல்யாணராமன்.

"அத்தான்! போதும். என்னைப் புண்படுத்தாதீர்கள். நீங்கள் என்று என்னைப் பிடிக்கவில்லை என்று கூறி விட்டீர்களோ அன்று முதல் நான் தினமும் அழுது கொண்டுதான் இருக்கிறேன்" என்று கண்ணீர் விட்டாள் சரோஜா.

முன்பே நெகிழ்ந்திருந்த கல்யாணத்தின் மனம் சரோஜாவின் துயரத்தைக் கண்டதும் அப்படியே உருகி விட்டது. "சரோஜா, நில். நான் உன் அன்பை உணராத முட்டாள். கவலைப்படாதே. நான் மாமாவிடம் கூறி அந்தசம்பந்தத்தை வேண்டாம் என்று கூறி விடுகிறேன்" என்று அவன் கூறி முடிப்பதற்கும் சபேசன் அந்த அறைக்குள் நுழைவதற்கும் சரியாக இருந்தது.





உங்கள் பேனாவை
செலவதிகமான ரிப்பேர்
களிலிருந்து காப்
பாற்றுங்கள் !

# பார்க்கர் க்வின்க்

உபயோகியுங்கள்

பாதுகாப்பளிக்கும்

## ஸால்வ்-X

அடங்கிய மை இது ஒன்றே




**திராவகம் மிகுந்த மைகளால் பேனா ஒழுகுதல் மற்றும் இதர கோளாறுகள் ஏற்படுகின்றன**

பார்க்கர் க்வின்க் உபயோகித்து இவ்விதக் கோளாறுகளைத் தவிருங்கள். ஸால்வ்-X அடங்கிய மை இது ஒன்றே. இந்தப் பொருள் கசண்டுகளைக் கரைத்து விடுகிறது. அரிப்பையும் அடைப்பையும் தடுக்கிறது. க்வின்க் அழியா வர்ணங்களிலோ, கழுவி அழித்து விடக்கூடிய நிறங்களிலோ விரும்பியபடி வாங்கலாம்.

விலை 2 அவுன்ஸ் ரூ. 1/4

பார்க்கர் பென் கம்பெனி (இந்தியா) லிமிடெட்
100, அரமனைக்காரத்தெரு, மதராஸ் 1

# வட்ட மேஜை

## சிபாரிசின் மகத்துவம்

நான் எங்களூரிலேயே ஆசிரியர் பயிற்சி பயின்று 1951ல் நடந்த சர்க்கார் பரீட்சையில் தேர்ச்சி பெற்று செகண்டரி ஆசிரியர் ஆனேன். பின்னர் எங்களூர் நகரசபைப் பள்ளிக்கு விண்ணப்பம் போட்டு, நவம்பர் மாதம் வரை காத்திருந்தேன். என்னுடன் நகரசபைப் பள்ளிக்கு மனுப் போட்ட அநேகருக்கு ஆசிரியர் வேலை கிடைத்தது. எனக்கு மட்டும் வேலை கிடைக்கவில்லை.

1952-ல் நகரசபை ஆணையாளருக்கு ஒரு மனுவும், பொறுக்குக் குழு அங்கத்தினர்கள் ஒவ்வொருவருக்கும் ஒவ்வொரு விண்ணப்பமும் தயாரித்து நேரில் சென்று என் கஷ்டங்களை எடுத்துக் கூறிக் கொடுத்து வந்தேன். அந்த விண்ணப்பங்களில் குறைந்த சம்பளத்தில் 'லையர் கிரேடு' இடத்திலும் வேலை செய்வதாகக் குறிப்பிட்டிருந்தேன். ஆனால் அவ்வருடம் ஆசிரியர் பயிற்சி முடித்து வெளி வந்த பலருக்கு நகரசபைப் பாடசாலையில் வேலை கொடுத்து விட்டு எனக்கு வேலை இல்லை என்று கூறி விட்டார்கள். அவர்களுக் கெல்லாம் போதிய சிபாரிசு இருந்ததே காரணம். இது போலவே சர்க்கார் வைத்து நடத்தும் பாடசாலையில் முயற்சி செய்தும் எனக்கு வேலை கிடைக்கவில்லை. அதே பாடசாலையில் 1953ல் ஆசிரியர் பயிற்சி முடித்து வெளியேறியவர்களுக்கு நிரந்தரமான வேலை கிடைக்கிறது.

சிபாரிசின் மகத்துவம் இவ்வளவு தூரம் முன்னேறியிருக்கும் இக்காலத்தில் என் போன்ற ஏழை ஆசிரியர்களின் நிலை என்ன! அவர்கள் வாழ்க்கை நடைபெறும் வழிதான் என்ன!

சேலம்
3-8-43

வி. ரமணி

★

## "நந்தாவுக்கு எழுதினால்......!"

நான் தற்சமயம், இங்குள்ள துங்கபத்ரா அணைக்கட்டுத் திட்டத்தில் ஐந்து வருடங்களாகத் தொடர்ச்சியாகப் பணியாற்றிக் கொண்டு வருகிறேன். இந்தத் திட்டம் 1946ம் ஆண்டு முதல் தொடர்ச்சியாக வேலை நடந்து கொண்டிருக்கிறது. இந்திய சர்க்காரின் ஐந்து வருடத் திட்டத்தில் நதி நீர திட்டங்களுக்கு முதலிடம் கொடுப்பதாகத் தெரிகிறது. இங்கு 1953ம் வருட முடிவுவரை இருபதாயிரம் தொழிலாளர்களுக்கு (வெவ்வேறு பிரிவினர்) இந்தத் திட்டம் அபயம் அளித்து வந்தது. ஆனால் நடந்தது என்ன! வேலை முடிந்தவுடன், தொழிலாளர்களை வேறு எந்தத் திட்டம் அமுலில் இருக்கும் இடத்துக்கும் அனுப்பாமல் உடனடியாக, அவர்களை வேலையிலிருந்து நீக்கி விட்டனர். அவர்களுடைய ஐந்துவருடத் தொழில் அனுபவம் ஒன்றுக்கும் உதவாமல், விழலுக்கு இறைத்த நீர் போல் ஆயிற்று. இதனால் பாதிக்கப்பட்ட குடும்பங்கள் அநேகம்.

இப்பொழுது (ஆந்திர சர்க்கார் ஏற்பட்ட பின்) இந்த அணைக்கட்டுத் திட்டம் மத்திய சர்க்காரின் மேற்பார்வையில் உள்ளது. ஆனால் இதுவரையில், இங்கு வேலையிலிருக்கும் தொழிலாளர்களின் பிற்காலத்தை எந்த சர்க்காரும் (சென்னை, ஆந்திரா, மைசூர், மத்திய சர்க்கார்கள்) நிர்ணயிக்கவில்லை.

இங்கு மாகாண மந்திரிகள் வருகிறார்கள். மத்திய சர்க்காரின் மந்திரிகளில் மாதம் ஒருவர் விஜயம் செய்யத் தவறுவதில்லை. விஜயத்தின் போது அணைக்கட்டுத் திட்டத்தின் துரித முன்னேற்றத்தை மெச்சுகிறார்கள்.

ஆனால் முன்னேற்றத்துக்கு மூலகாரணமானவர்களின் பிற்காலத்தைப் பற்றி ஒரு வார்த்தை அனுதாபத்துக்குக் கூடத் தெரிவித்தது இல்லை. தொழிலாளரின் நிலையைப் பற்றி, ஆந்திர, மைசூர் சர்க்காருக்கு இங்குள்ள அதிகாரிகள் எழுதினார்கள். தங்களுக்கு ஒரு பாத்தியதையும் இல்லை என்று பதில் கூறி விட்டனர் இரு சர்க்காரும். ஆனால் அதே சமயம் இந்தத் திட்டத்தினால் பிற்காலத்தில் கிடைக்கும் பலனை அனுபவிக்க இரண்டு சர்க்காரும் போட்டி போடுகின்றனர். எந்த சர்க்காராலும், இந்த அனுபவம் முதிர்ந்த தொழிலாளர்களை வைத்துக் கொள்ள முடியாவிட்டால், குறைந்த பட்சம், அவர்களை வேறு சர்க்கார் நடத்தும் திட்டங்களுக்காவது அனுப்பி, மத்திய சர்க்காரின் உதவியுடன், இவர்களை எடுத்துக் கொள்ளும்படி கேட்கலாம்.

நதி நீர திட்டங்களில் வேலை செய்பவரின் நிலைமையே இப்படி இருக்கும்போது, புதிதாக "நந்தாவுக்கோ அல்லது பிரதமர் நேருவுக்கோ" எழுதுவதினால் ஒரு பலனும் கிடைக்கப் போவதில்லை.

துங்கபத்ரா அணை
11—8—54

ராமாமணி

★

## மூன்றும் வகுப்பு ரயில் வண்டி

நீலகிரி - சென்னை வண்டியில் பெண்களுக்காகப் போட்டிருக்கும் மூன்றாவது வகுப்பு வண்டியை எங்கிருந்துதான் கொண்டு வந்து போடுகிறார்களோ தெரியவில்லை. அது பழைய வண்டியாக இருப்பதுடன் கக்கூஸ் கதவு மூட முடியாமல் திறந்தே இருக்கிறது. இந்த நாற்றம் போதாதென்று அருவருக்கும்படியாகக் கக்கூஸிலிருந்து ஜலம் வேறு வண்டிக்குள் ஓடி வந்து கொண்டே இருக்கிறது. சற்றுக் கவனித்துச் சீர்திருத்தம் செய்தால், எங்களைப் போலுள்ள ஏழைகள் நிம்மதியாகப் பிரயாணம் செய்யலாம்.

கோயமுத்தூர்
6-8-54

விசாலம்-ராமமூர்த்தி

★

## முளைக்காத விதை!

எனக்கும், எங்கள் ஊர் விவசாயிகள் சிலருக்கும் சமீபத்தில் விவசாயக் கடன் கொடுக்க உத்தரவுகள் வழங்கப்பட்டன. விவசாயக் கடன்கள் விதைகளாகவும் உரங்களாகவும் விவசாய இலாகாவினரால் அளிக்கப்பட்டன. அவ்வாறு அளிக்கையில், விவசாயிகளில் பெரும்பாலோர்க்குத் தேவைப்படாத விதைகள் அவர்கள் தலையில் கட்டப்பட்டன. அவைகளை வாங்கினால்தான் கடனைப் பெற முடியும் என்ற நிலையில் விவசாயிகள் அவ் விதைகளை வாங்கினார்கள்.

எங்கள் ஊர் "கிராம சேவக்" கூறிய முறைகளைப் பின்பற்றி அவ் விதைகளைப் பல இடங்களில் விதைத்துப் பார்த்தோம். ஓரிடத்தில் கூட அவ் விதைகள் முளைக்கவில்லை. இவ் விஷயத்தை இது சம்பந்தப்பட்ட அதிகாரிகளுக்கு அறிவித்தோம். இன்றுவரை யாரும் அதைக் காதில் போட்டுக் கொண்டதாகவே தெரியவில்லை.

இவ்வாறு முளைக்காத விதைகளை வேண்டுமென்றே விவசாயிகள் தலையில் கட்டுவதனால்,

எந்த நல்ல நோக்கத்தோடு விவசாயிகளுக்குக் கடனளிக்கப்படுகிறதோ அந்த நல்ல நோக்கம் நிறைவேறாமல் பாழடைகிறது. விவசாயிகள் இக் கடன்களைப் பெறுவதால் நன்மை யடைவதற்குப் பதிலாக நஷ்டமடைகிறார்கள். மேலும் விவசாய டிமான்ஸ்டிரேட்டர் ஆபீஸ் அளிக்கும் விதைகளில் விவசாயிகளுக்குள்ள நம்பிக்கை குறைகிறது.

ஆகவே, இக் கடனை யளிப்பவர்கள், விவசாயிகளுக்கு வேண்டிய விதைகளை வேண்டிய அளவில் மாத்திரம் அளித்தல் வேண்டும். வேண்டாத விதைகளை அவர்களிடம் திணிக்கக் கூடாது. விவசாயிகளுக்கு விதைகளை யளிக்குமுன், அவ்விதைகளைப் பரிசோதித்துப் பார்த்தல் வேண்டும். விதைகளில் பழுதிருந்தால் அவைகளை விற்க அனுமதியளிக்கக் கூடாது.

திருநாவலூர்
8-8-54 தி. சு. சிவசுப்பிரமணியன்

★

## நிபுணர்களுக்குத் தடை!

“கல்கி” 15-8-54 இதழில் நேயர் சி. வி. ராமச்சந்திரனின் கடிதத்தைப் படித்தேன். நானும் அவரைப் போல் குறைந்த வயதில், 1947ம் வருடத்தில் எஸ். எஸ். எல். சி. பாஸ் செய்தேன். வருடங்கள் ஏழு ஆனபோதிலும் நேயரின் கடிதம் பழைய நினைவுகளைக் கொண்டு வந்து கண்முன் நிறுத்தியது. கல்லூரி தொடங்கும் போது வயது 14½ முடிந்திருக்க வேண்டுமென்பது பல்கலைக் கழக விதிகளில் ஒன்று. எனக்கு வயது அப்பொழுது 14 வருடமும் 5 மாதமும்தான் ஆகியிருந்தது. அதனால் ஒரு வருடம் நான் வீட்டில் இருக்க வேண்டியதாயிற்று. அமெரிக்கா, மாஸ்சூஸெட்ஸ் கல்லூரியில் இருக்கும் கணித நிபுணர் டாக்டர் நார்பெர்ட் வெய்னர் என்பவர் தம் 16வது வயதில் பி. எச்டி. பட்டம் பெற்றார். அவரைத் தோற்கடிக்கும் நிபுணர்கள் இந்தியாவிலும் உண்டு. ஆனால் அவர்களைத் தடை போடக் கூடிய பல்கலைக் கழகம் இந்தியாவில் மட்டும்தான் உண்டு.

கோவை
14—8—54 பி. கே. துரைசாமி

★

## விமோசனமில்லை!

இன்றைய ஆட்சியாளர்கள் தாழ்த்தப்பட்டோர்களுக்குப் பெரும் தொகையை (கோடிக் கணக்கில்) முன்னேற்றத்துக்கு ஒதுக்கப்பட்டிருப்பதாகக் கூறுகிறார்கள். அத்தோடுகூட சில சமயங்களில் சர்க்கார் சாதித்தவைகளின் பட்டியல்களிலும் பிரமாதப் படுத்துகிறார்கள். ஆனால் மேட்டுப் பாளையத்தில் சுமார் 200 தாழ்த்தப்பட்ட குடும்பங்கள் சென்ற மூன்று ஆண்டுகளுக்கு முன் இருந்து, தாங்கள் குடியிருக்கச் சர்க்கார் புறம்போக்கில் இடம் தரும்படியும், தரும் இடங்களைப் பட்டா செய்து கொடுக்கும்படியும் கேட்டு வருகிறார்கள். பட்டா ரிஜிஸ்தர் செய்து கொடுப்பதாக அப்பொறுப்பை மேட்டுப்பாளையம் முனிசிபல் கவுன்சில் ஏற்றுக் கொண்டது. சர்க்காரிடம் கடிதப் போக்குவரத்து நடத்தி, கடைசியாக அவ்விடம் தாழ்த்தப்பட்டோர் குடியிருக்கும் எம். எஸ். ஆர். புரம், மேட்டுப்பாளையம் நகர சபையைச் சேர்ந்ததா, ரெவின்யூ டிபார்ட்மெண்டைச் சேர்ந்ததா என்பதை முடிவு செய்ய முடியாமல் இருந்து வருகிறது. இதனால் அங்கு வாழும் தாழ்த்தப்பட்டோர் தங்கள் இல்லங்களைச் செப்பனிடக்கூட வழியின்றி அவஸ்தைப் பட்டு வருகிறார்கள். இது விஷயமாக ஹரிஜனங்களும், ஹரிஜனங்களால் நடத்தப்படும் மேட்டுப்பாளையம் ஹரிஜன சேவா சங்கத்தார்களின் விண்ணப்பங்களும், இவ்வூருக்கு வந்த மந்திரிகளிடம் நேரடியாக மகஜர்களும் கொடுத்தும் நாளதுவரை விமோசனமில்லை.

மேட்டுப்பாளையம்
6—8—54 ர. முத்தையன்

★

## அதே கதிதான்!

நீங்கள் ஆகஸ்டு மாதம் 15-ம் தேதி “கல்கி” இதழில் “இந்த வாழ்வு எத்தனை நாளோ!” என்ற தலையங்கத்துடன் தோழர் ரா. கோபாலன் எழுதியிருந்த பாட்டைப் படித்தேன்.

அவரைப் போல நானும் வேலையில்லாத் திண்டாட்டத்தினால் அவதியுறுபவன். பி. எஸ். ஸி. தேறிப் பல மாதங்களாகியும் எனக்கு இன்னும் வேலை கொடுப்பார் யாருமில்லை. ரயில்வே, போஸ்டல், ஏ. ஜி. ஆபீஸ் போன்ற பல அலுவலகங்களுக்கு மனுப் போட்டும் பதில் வந்தபாடில்லை. வேலையில்லாத் திண்டாட்டத்தை ஒரு வேடிக்கையாக நினையாமல் அவசரப் பிரச்னையாகக் கருதி சர்க்கார் முன் வந்து பலவாறு அவதியுறும் பட்டதாரிகளுக்கும், மற்றும் எஸ். எஸ். எல். ஸி. மாணவர்களுக்கும் வேலை தேடித் தரும் என நம்புகிறோம்.

சென்னை
15—8—54 நா. ரா. கிருட்டினசுவாமி

★

## இதோ இருக்கிறது வேலை!

சமீபத்தில் லண்டனில் பிரசுரமாகும் ‘இந்தியன்’ என்ற பத்திரிகையில் மத்திய ஆப்பிரிக்காவிலுள்ள சில இடங்களுக்கு டாக்டர்கள், என்ஜினியர்கள் போன்றவர்கள் தேவை என்றும், அந்த இடங்களிலுள்ள இந்தியர்கள் இந்தியாவிலிருந்து அவ்விடம் வரக்கூடிய அந்தத் தகுதி உடையவர்களுக்கு வேண்டிய உதவி தரத் தயாரென்றும், தமக்கு மனுப் போட வேண்டும் என்றும் ‘இந்தியன்’ ஆசிரியர் வெளியிட்டிருந்தார்.

பசிபிக்கிலுள்ள இந்தத் தீவுத் தொகுதிக்கும் அத்தகைய தகுதி உடையவர்கள் தேவை. டாக்டர்கள், என்ஜினியர்கள், சர்வேயர்கள், டிராப்ட்ஸ்மன், சர்வேயர்கள் முதலியோரும் பூக்காரர், தகரக்காரர், கல் தச்சர், வெங்கலம், ஈயம், பித்தளை, செப்பு கன்னார்களும் தேவை. முன்னர் கூறப்பட்டவர்கள் இங்கே தொழில் நடத்தினால் சாதாரண தென்னிந்திய நகரங்களில் ஆயுள் காலத்தில் சம்பாதிக்கக் கூடியவற்றை இங்கு பத்துப் பதினைந்து வருஷங்களில் சம்பாதித்து விடலாம். பின்னர் கூறப்பட்ட தொழிலாளர்கள் இங்கு கிடையாது. ஆகவே போட்டி இல்லாமல் அவர்கள் தொழில் நடத்தி முன்னுக்கு வரலாம்.

எலக்டிரிக் என்ஜினியர்களும் இவ்விடம் வரலாம். பிஜியில் இந்தியர் அதிகம். மலையாளம் ஜில்லா போன்றது பிஜி. தூரத்திலிருந்தாலும்—டில்லி போகிற மாதிரிதான். விமானமுண்டு; கப்பலுண்டு; சௌகரியமும் உண்டு.

பிஜித் தீவு
25—7—54 கிருஷ்ணமூர்த்தி

Edited, Printed and Published by R. Krishnamurthy at the "Kalki" Press,
No. 20. Dr. Guruswamy Mudaliar Road, Kilpauk, Madras 10.

நாளுக்கு நாள் அதிக தெளிவான,
எழிலோங்கும் சருமம்




RP. 117-50 TM ரெக்ஸோனா ப்ரொப்ரைட்டரி லிமிடெடுக்காக இந்தியாவில் தயாரித்தது.

REGISTERED No. M. 4392

*Registered as a news paper in Ceylon*










# லைப்பாய் சோப்

தினசரித்தொல்லையான
அழுக்கிலிருக்கும் கிருமிகளிலிருந்து
உங்களைப் பாதுகாக்கிறது.




இந்தியாவில் தயாரித்தது.

L. 249-50 TM